ஓம்

தத்சத்

பரப்பிரஹ்மணே நமஃ.

லோகோபகாரி பத்திரிகையின் ஆசிரியரும் தலைவருமாகிய

கோ. வடிவேலு செட்டியார் அவர்கள்

இயற்றிய

# மெய்ஞ்ஞான போதம்.



(1911 - வருஷத்து லோகோபகாரியின்

முதற்பக்கப் பிரசுரம்.)



சச்சிதானந்தம் பிரஸ்,

கோமளேசுவரன்பேட்டை,

சென்னை.





1913.

விலை அணா பன்னிரண்டு.

# மெய்ஞ்ஞான போதத்தின்

## அட்டவணை.



விஷயம். பக்கம்.



ஓம்

தத்ஸத்

பரப்பிரஹ்மணே நம:.

# மெய்ஞ்ஞான போதம்.



## 1911-ம் வருடத்து லோகோபகாரிப் பிரசுரம்.

### 1. நடராஜ சேவை நலமெலாந் தருமெனல்.

(2 : 1 - -11.)

எல்லாம் வல்ல இறைவன் நம்மனோர் நன்னெறிகண்டுய்யுமாறு கொண்ட திருக்கோலங்களுள் நடராஜமூர்த்தமு மொன்றும். இம்மூர்த்தி பதஞ்சலி வியாக்கிரமபாதர் முதலிய மகாத்மாக்கள் பரமாநந்த மயமாய் விளங்கும்படி பூலோககைலாயமென்னுஞ் சிதம்பரத்தின்கண் ஆநந்தநடனஞ் செய்தருளுகின்றதாதலின், அம்மூர்த்தியினது பாதசேவையே நாம் பரமாநந்த மடைதற்குத் தக்க வேதுவாம்.

கரணவியாபார முடைய ஒவ்வொரு பிராணியும் துக்கநீக்கத்தினையும் சுகப்பேற்றினையும் விரும்புவ தியல்பாயிருத்தலின், மெய் வாய் கண் மூக்குச் செவியென்னும் ஐம்புல வுணர்வோடு மனவுணர்வையும் உடைய மக்கள் துக்கநீக்கத்தினையும் சுகப்பேற்றினையும் விரும்பா திராரென்பது நமதனுபவத்தினால் விளங்குதலின், துக்க நீக்கத்தினையும் சுகப்பேற்றினையும் கருதி நடராஜ மூர்த்தியினது திருவடிகளைத் தஞ்சமாகவடைந்து, அன்புமிக்குச் சேவித்தலே நமது முக்கியக் கடமையாம்.

பெருந்துன்ப முற்ற ஒருவன் தன் துன்பத்தினை யொழித்து இன்பத்தினையடையுமாறு, பேராற்றலும் பெருங்கருணையு முடையவனை ஆதாரமாகவடைந்து அவனது திருவடியில் விழுந்து பிரார்த்திப்பதுபோல, பிறப்பென்னும் பெருந்துன்பமுடைய நாம் அத்துன்பத்தினை யொழித்து முத்தியென்னு மின்பத்தினையடை

யுமாறு முடிவிலாற்றலும் பேரருளுமுடைய நடராஜ மூர்த்தியைத் தஞ்சமாகவடைந்து, அம்மூர்த்தியின் இன்பமணங் கமழும் பொற்பாத கமலங்களில் விழுந்து பிரார்த்தித்தலே இம்மைக்கும் மறுமைக்கும் உறுதியான துணையாம்.

பாதசேவை பரமாநந்தம் பெறுதற்குத் தக்க சாதனமாயிருப்பது பற்றியன்றோ தெய்வப்புலமைத் திருவள்ளுவ நாயனார் "கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவ,னற்றா டொழாஅ ரெனின்." "மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார், நிலமிசை நீடுவாழ் வார்." "வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க்,கியாண்டு மிடும்பை யில." "பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தா,ரிறைவ னடி சேரா தவர்" என்று திருவாய்மலர்ந் தருளினார்.

தில்லை வனமாகிய சிதம்பரத்தின்கண் கண்ணுதற்பெருமான் நடராஜ கோலமாக விருந் தாடுவது அப்பெருமான் அசைந்தாலன்றி அணுவும் அசையாது; அப்பெருமான் ஆட்ட, உயிருள்ள பொருள் உயிரில்லாத பொருளென்னு மிரண்டுமாடுகின்றன என்பதை விளக்குவதாம். இதுபற்றித்தான் பெரியார் "ஆட்டுவித்தாலாரொருவ ராடாதாரே" என்று திருவாய் மலர்ந்தருளினர். இந்த நடராஜகோலம் உயிர்கட்கு இயல்பாக ஒரு சுதந்தரமுமில்லை; சிவத்தின் சந்நிதான விசேஷத்தால் அவை சுதந்தரமுடையன போற் காணப்படுகின்றன வென்னு மிரகசியார்த்தத்தைக் குறிப்பித்து நிற்பதாம்.

ஆகாயலிங்க ஸ்தலமென்னும் சிதம்பரத்தின்கண் அன்பரெல்லாம் என்புருகிப் பரவசமாகும் வண்ணம் சந்திரசேகரன் சூக்கும பஞ்சாக்கரமென்றும் ஒருதலை மாணிக்க மென்றும் சொல்லப்படும் "சிவாயநம" என்னுந் திருவஞ்செழுத்தாலே உயிர்க்கு நேர்ந்துள்ள பிறவிப் பிணியென்னும் அபாயமற ஆநந்த நிருத்தஞ் செய்தலை யறிந்தவர்க் கன்றோ அநாதியாகத் தொடர்ந்துவந்துள்ள பிறப்பிளமை மூப்புப்பிணியோடாஞ் சாக்காடு ஒழியும். இதுபற்றியன்றோ ஒளவைப்பிராட்டியார் "சிவாய நமவென்று சிந்தித் திருப்போர்க்,கபாய மொருநாளு மில்லை" என் றருளிச்செய்தனர்.

பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்னும் பஞ்சலிங்க ஸ்தலங்களில் சிதம்பரம் ஆகாய லிங்கஸ்தலமா யிருத்தலால், அதன் கண் எழுந்தருளி யாநந்தத் தாண்டவஞ் செய்யும் எம்பெ

ருமானது திருக்கைக்குறி, ஆகாயம்போல ஒன்றோடும் பற்றாது என்னை யார் அடைகின்றார்களோ அவர்களை யான், எனதென்னும் இருவகைப் பற்றினின்றும் நீக்கிப் பரமசுகமாய் விளங்கும்படி செய்கின்றேன் என்று அறிவிப்பதுபோலவாம். இதுபற்றித்தான் திருநாவுக்கரசுசுவாமிகள் "கைந்நின்ற வாடல்கண்டாற் பின்னைக் கண்கொண்டு காண்ப தென்னே" என்று திருவாய்மலர்ந்தனர்.

காஞ்சீபுரத்தில் பிருதிவிலிங்கமும், திருவானைக்காவில் அப்புலிங்கமும், திருவண்ணாமலையில் தேயுலிங்கமும், சீகாளத்தியில் வாயுலிங்கமும், சிதம்பரத்தில் ஆகாயலிங்கமு மிருத்தலால், சிதம்பர நடனமூர்த்தி உண்மையாகத் தமக்கெனக் குறிக்கப்பட்ட ஒருருவமு மில்லாதவரென்பதும், அன்பர்கள் விரும்பியவாறு வெவ்வேறு உருவங்களைக்கொள்ளுபவரென்பதும் அறியத்தக்கனவாம். அங்ஙன மறிந்தவர்க்கே சித்தசாந்தி சிதம்பரமாத் தானே திகழும் அனுபவமுண்டாம்.

இந் நடராஜப்பிரான் நடனஞ்செய்யும் ஸ்தலம் சிறப்பாக வைந்தாம். அவை திருவாலங்காடு, சிதம்பரம், மதுரை, திருநெல்வேலி, திருக்குற்றால மென்பனவாம். இவற்றுள்ள நடனசபை முறையே இரத்தினசபை, பொற்சபை, இரசித (வெள்ளி) சபை, தாமிர (செம்பு) சபை, சித்திரசபை என்பனவாம். இவ்வைந்து சபையிலும் அன்புடன் சென்று அருள் நடங்கண்டு இன்புருவானவரே இனிப்பிறவா நிலையை யடைவாரென்க.

மனம் வாக்குக் காயமென்னும் திரிகரணமும் மாறுபாடின்றி யொருமைப்பாடு பெற்ற விடத்துச் சிவாநந்தநிலை யுண்டாவதாயிருத்தலின், அதற்குரிய சாதனம் பஞ்சாக்கரவடிவமாய் மலைமகள்காண மகிழ்வுடனாடும் நடராஜ வடிவமேயாம். வாக்கால் பஞ்சாக்கர ஜபமும் மனத்தால் பஞ்சாக்கரத் தியானமும் செய்யுமிடத்துக் கண்ணாற்காணும் பஞ்சாக்கரம் நடராஜ விக்கிரகமன்றி வேறொன்றின்மையின், அம்மூர்த்தியினது தியானம் திரிகரணமும் ஒத்துவருதற்கு ஒவ்வொருவருக்கும் உரியசாதனமாம்.

அந்நடராஜப்பெருமான் திருவடி நகரமாகவும், திருவுந்தி மகரமாகவும், திருத்தோள் சிகரமாகவும், திருமுகம் வகரமாகவும், திருமுடி யகரமாகவும் கொண்டு தகராகாசமென்னும் சிதம்பரத்தின்கண் அருணடஞ் செய்தலின் உண்மையை யாய்ந்தறி

பவர்க்குப் பூதாகாசம், மனுகாசம், சிதாகாசம் என்னும் மூன்றுகா சத்தின் கண்ணும் பஞ்சாக்கரவடிவமாய் எம்பெருமான் நடித்து, ஜீவர்கட்கு இம்மை மறுமை வீடென்னு மூன்றையும் அருள்புரி கின்றுரென்பது நன்கு விளங்கும்.

பூதாகாய நடன சேவையால் இம்மைப் பயனும், மனுகாச நடன சேவையால் மறுமைப் பயனும், சிதாகாச நடன சேவையால் வீடும் சித்தியாகின்றமையின், இம்மூன்று சேவையும் பரிபாக முடையவர்களால் செய்யத்தக்கனவாம்.



## 2. அவதார மகிமை யறிவது நன்றெனல்.

(9 - 1 - 11.)

“எப்போது தருமத்திற்குக் குறைவும் அதருமத்திற்கு வளர்ச்சியு முண்டாகின்றனவோ அப்போது என்னை நான்படைத்துக் கொள்ளுகிறேன் (அவதாரஞ் செய்கிறேன்)” என்றும், “நல்லோரைக்காத்தற்பொருட்டும் தீயோரை யழித்தற்பொருட்டும் தருமத்தைநிலைபெறச்செய்தற்பொருட்டும் அவ்வவ் யுகங்களில் அவதாரஞ் செய்கின்றேன்” என்றும், “மேன்மையுடைய எனதவதாரத்தையும் செயலையும் எவன் இவ்வாறுண்மையாக அறிகின்றானோ அவன் தேக நீக்கத்தின் பின்னர் மீண்டும் பிறக்கின்றதில்லை, என்னையடைகின்றான்” என்றும், பகவத்கீதை 4-வது அத்தியாயத்தில் கண்ணபிரான் அர்ச்சுனனுக்குத் திருவாய் மலர்ந்தருளியிருத்தலால், பிறப்பின் துக்கத்தை நீக்க முயலுகின்றவர்கள் அவதாரத்தின் தன்மையை யறிதல் ஆவசியகமாம்.

காலமானது அமூர்த்தமா (ரூபமில்லாததா)யிருந்தும் இலை பூ முதலிய வற்றையுண்டாக்குமாறுபோன்று நிட்களமா யிருந்தும், சர்வகாரியங்களையு முண்டாக்கும் பரமேசுவரனுக்கு ரூபம்(அவதாரம்). ஜீவர்களது இருவினைகளாலுண்டாகின்றதென்பது சாஸ்திர நிச்சயமாம். ஜீவர்கட்குக் காமம் வெகுளிகளாற் செய்யும் நல்வினை தீவினை காரணமாகப் பிறப் புண்டாகு மாறுபோன்று பரமேசுவரனுக்குப் பிறப்புண்டாவ தின்றாம். தனக்குத் தந்தையும் தலைவனுமின்றி யேகனாய், ஜீவர்களின் இருவினைகளையனுசரித்து அவர்கட்குச் சுகதுக்கங்களைத் தருதலால் ராகத்துவேஷ மற்றவனுயுள்ள பரமேசுவரனுக்குத் தனது கருமவசத்தால் பிறப்புண்டாதலும் அதை ஒருவன் தருதலுமில்லையாம்.

பிசாசானது மனிதர்முதலிய உடம்பின்கண் பிரவேசித்துத் தனது பிரயத்தனத்தினால் அம்மனிதர் முதலிய வுடம்பின்கண் வெவ்வேறுதன்மை யுடையனவாய சேட்டைகளைச்செய்வதுபோல, பரமேசுவரனும் காலதேசநிமித்தங்கட்கேற்றவாறு பெரும்பான்மையாக மனிதரது உடம்பின்கண் பிரவேசித்துத் தன் பிரயத்தனத்தினால் அவ்வுடம்பின்கண் நல்லோரைக் காத்தல், தீயோரை யழித்தல், அறநெறியைப் போதித்தல், அறநெறியி லொழுகும் வகையைத்தானே யப்பியசித்துக்காட்டல் முதலியசேட்டைகளைச் செய்வன். அப்பிசாசானது தனதுகருத்து முடிந்த பின்பு தான் பிரவேசித்திருந்தவுடம்பிலிருந்து நீங்கி விடுவதுபோல, பரமேசுவரனும் தனது சங்கற்பம் முற்றுப்பெற்றபின்பு தான் பிரவேசித்திருந்த வுடம்பினின்று நீங்கி விடுவன் என்பர் ஒரு சாரார்.

யார் எவ்விதமாகக் கூறினும் பரமேசுவரனுக்கு ஒவ்வொரு சமயத்தில் அவதாரஞ் செய்தலுண்டென்பது ஆஸ்திகரியாவராலும் அங்கீகரிக்கப்பட்ட விஷயமாகலின், அது பற்றி மிகுதியாக விசாரிப்பதை விட்டு, பரமேசுவரனது அவதாரவிசேடங்களையும் அவற்றால் நாம் அறிந்தொழுகும் முறைமைகளையும் ஆராய்ந்தொழுகுவது நமது முக்கியக் கடமையாம்.

உலகைப்படைத்தல் பற்றிப் பிரமனென்னும் பெயரையும், காத்தல் பற்றி விஷ்ணுவென்னும் பெயரையும், அழித்தல் பற்றி உருத்திரனென்னும் பெயரையும் பெற்றுள்ள பரமேசுவரன் கொண்டுள்ள லீலாவிக்கிரகங்களுள் சிவன், சத்தி, கணேசன், சூரியன், விஷ்ணுவென்னும் ஐந்து விக்கிரகங்களை ஜீவர்கள் உபாசனைவாயிலாகத் தத்துவஞானமடைந்து, அதனால் முத்திபெறுதற்குத் தக்க சாதனமாம். இவ்வைந்து விக்கிரகங்களை முக்கியமான அவதாரங்களாம். இவ்வைந்து விக்கிரகங்களையும் அபேதமாகக் கருதி யுபாசித்தல்வேண்டும். இவ்வைந்தனுள் யாதாவதொன்றை யுபாசிக்கினுங் குற்றமின்று; ஆனால் ஏனைய விக்கிரகங்க ளிடத்துத் தோஷதிருஷ்டி கூடாது.

காலதேச நிமித்தங்கட் கேற்பப் பலஅவதாரங்கள் நடைபெற்றிருப்பினும், அவ்வவதாரங்களுள் இந்து தேசத்தில் நிகழ்ந்த தசாவதாரங்களே சிறப்புடையன வென்று கருதப்படுகின்றது. அவை, மச்சம், கூர்மம், வராகம், நரசிங்கம், வாமனன், பரசுராமன், ஸ்ரீராமன், பலராமன், கண்ணன், கற்கி என்பனவாம். புத்தர்

வதாரம் பரமேசுவரனின் சனகன் முதலிய 15-அவதாரங்களுள் ஒன்றும்.

பிருதிவிமுதலிய பூதங்களினின்றும் பிராணவாயு உப்புவாயு முதலியவற்றின் சம்பந்தத்தால் தாவரவர்க்கப் பிராணிகளும், அதன்பின்னர்க்கந்த் மூலப்பிராணிகளும், கிருமி கீடம் வண்டுமுதலிய பிராணிகளும் பட்சிகளும்பிறந்து, அவையெல்லாம் இறந்துமண்ணாக, அந்தமண்ணிலிருந்த பிராணவாயுவினால் தவளைமுதலியபிராணிகளுண்டாயின; அப்பால் அந்தப்பிராணவாயு மலைகள் கற்கள் பாறைகளாகிய இவற்றின் மீது மோத அவை மான் கரடி யானை ஒட்டகமுதலியனவாகப் பிறந்தன; அவை யெல்லாம் பிறகு மாண்டொழிந்தன ; ஒருபெருமழையினால் அவற்றின் பிராணவாயுவின் அம்சங்கள் சமுத்திரத்திற் போய்ச்சேர அவை அச் சமுத்திரத்தின்கண் மீன்களாயின; அம்மீன்கள் பாசிமுதலியவற்றை யுண்டிறந்தொழிந்தன. இறந்தொழிந்த வவற்றினின்றும் காலும்வாலுமுள்ள வொருவகைப் பிராணிகளுண்டாயின; அவை குரங்குகளாயின; பிறகு அவை வாலில்லாக் குரங்குகளாயின. அக்குரங்குகள் சீதோஷ்ணங்களின் மிகுதியைப் பொறுக்கமுடியாது குகைமுதலியவற்றின்கண் ஒதுங்கி வசித்துப் பகுத்தறிவு பெற்று மனிதர்களாயின என்று கூறுவார் மச்சம்முதலிய தசாவதாரங்களும் எமதுகொள்கையைச் சாதிக்கு மியல்புடையன வென்பர். இவ்வவதாரங்கள் அறிவின் வளர்ச்சியைக் காட்டுந் தன்மைக்காக வமைந்தனபோலும். சிருஷ்டிக்கிரமம் ஒருவகைத்தாயிராதென்பது சொப்பனவுலக சிருஷ்டியினால் அறிதற்குரியதா யிருத்தலின், அதுபற்றிமுடிவாகக் கூறுவது ஒருவகையாலும் அமையாது.

" புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்"

என்று மாணிக்கவாசகர் கூறுவது மிங்காராய்ந் தறியத்தக்கதாம்.

பரமேசுவரன் பராபட்ச மற்றவனாதலின், அவன் அவ்வப்போது வேண்டிய அவதாரங்கொண்டு தீயோரையழித்தலும் நல்லோரைக்காத்தலும் கருணையேயாகும். ஈசன் தீயோரையழித்தல் மறக்கருணையெனவும் நல்லோரைக்காத்தல் அறக்கருணையெனவும்

சாஸ்திரங்கள் கூறும். தீயோரையழித்தல் தந்தை நல்வழியொழு காதமைந்தரைத் தண்டிப்பது போலவாம்; நல்லோரைக் காத்தல் நல்வழியொழுகு மைந்தரை யன்புடனுபசரிப்பது போலவாம்.

பகவான் நரசிங்காவதாரங்கொண்டபோது இரணியனை யழித்தது மறக்கருணையும், பிரகலாதனைக்காத்தது அறக்கருணையுமாம்; இராமாவதாரங்கொண்டபோது இராவணன் முதலியோரை யழித்தது மறக்கருணையும் விபீஷணன் முதலியோரைக்காத்தது அறக்கருணையுமாம்; கிருஷ்ணாவதாரங் கொண்டபோது கம்சன் முதலியோரைக் கொன்றது மறக்கருணையு,பாண்டவர்முதலியோரைக் காத்தது அறக்கருணையுமாம். கண்ணபிரான் சிசுபாலனை வதைத்தபோது அச்சிசுபாலனது உடம்பினின்று ஓரொளிதோன்றிக் கண்ணனோடேகமாயிற்றென்று புராணங்கூறுவதால் மறக்கருணையின் பெருமை நன்குவிளங்கும்.



## 3. நல்வழி யொழுகினல் நற்கதி வருமெனல்.
(16 - 1 - 11.)

அரசன், போதகாசிரியன், தாய், தந்தை, தமயன் என்னும் இவ்வைவரும் தெய்வமாக வணங்கத்தக்க மேன்மை யுடையவராகலின், அவர்களை ஒவ்வொரு நாளும் மறவாது வணங்கித் துதிப்பவருக்கு எல்லாமேன்மையு முண்டாகும். அரசனை விஷ்ணுவாகவும், போதகாசிரியனைப் பிரம்மாவாகவும், தாயைப் பார்வதியாகவும், தந்தையைப் பரமசிவனாகவும், தமயனைச் சூரியனாகவும் எண்ணி நடத்தல் வேண்டும்.

"கூழானாலும் குளித்துக்குடி, கந்தையானாலும் கசக்கிக் கட்டு" என்பது பழமொழியாதலின், உணவுகொள்ளு முன்னே சுத்தமான நீரில் முழுகிச் சுத்தமான ஆடைதரித்துக் கொள்ளுதல் ஒவ்வொருவருக்கும் முக்கியமான கடமையாம். ஒவ்வொரு நாளும் நீராடி நல்லுடை தரித்து வருபவர் பெரும்பான்மையாக நோய்க்கு இடங் கொடுப்பவராகார்.

தம்முடைய குற்றங்களைப் பிறர் பலரறியச் சொல்லும்போது தமக்குப் பெருந்துன்ப முண்டாவதை யூகித்துணர்பவர் பிறருடைய குற்றங்களை மறந்தும் பலரறியச் சொல்லாரென்பது நீதிநூற் றுணிபாயிருத்தலின், பிறருடைய குற்றங்களைப் பலரறியச் சொல்லாதிருத்தலை யெவ்வகையாலும் அப்பியசித்து வருதல் வேண்டும்.

பிறருடைய குற்றங்களைச் சொல்லும்படி நேரிட்டால் அவர்க்கு இதமான சொற்களால் தனிமையான விடத்தில் மனதில் வருத்தந்தோன்றுதபடி யிணங்குமாறு சொல்லி அவரை நல்வழியிலொழுகுமாறுசெய்யவேண்டும். அவ்வாறு சொல்லுபவரே மேன்மக்களாவர். இங்ஙனம் சொல்லி நல்வழிப்படுத்துபவரைச் சற்குருமூர்த்தியாகக்கொண்டு வழிபாடு செய்தல் வேண்டும். இவர்களாலன்றோ ஒவ்வொரு காலத்தில் பாமரரும் சன்மார்க்கத்தில் நடக்க முயலுகின்றனர்.

"தன்மனை யாளைத் தனிமனை யிருத்திப், பிறர்மனைக் கேகும் பேதையும் பதரே" என்று பெரியோர் கூறி யிருத்தலை யுற்று நோக்குமிடத்துப் பிறரது மனைவியரை விரும்பி நடப்பவர் பெருமூடராவரென்பது நன்கு விளங்குதலின், பிறரது மனைவியரைப் பெற்றதாயென்று கருதி யொழுகுவோர்க்கு எப்போதும் ஒரு கெடுதியு முண்டாகாது. அவர் எல்லா நன்மைகளையும் பெறுதற்குரியராவர். இதுபற்றி யன்றோ பொய்யில் புலவர் "நலக்குரியார் யாரெனி னுமநீர் வைப்பிற், பிறற்குரியா டோடோயா தார்" என்று கூறினர்.

பெரும்பான்மையாக (மனிதக்) கொலை வியபிசாரத்தினாலேயே யுண்டாகின்ற தென்பது சமாச்சார பத்திரிகைகளாலும் பிறவாற்றாலும் அறியப்படுகின்றதாகலின், பிராணபத்திற் கேதுவான வியபிசாரத்தைச்செய்து பழி பாவங்களுக் காளாகாமலிருத்தலே மனிதப்பிறப்பின் முக்கியப்பயனும். கௌதமமுனிவரது மனைவியாகிய அகலிகையைப் புணர்ந்ததனாலன்றோ தேவராஜனாகிய இந்திரன் தனது மேன்மைகளெல்லாவற்றையு மிழந்து "ஆயிர மாதர்க்குள்ள அறிகுறி" உடம்பின்கண் அமையப் பெற்றான்? வியபிசாரஞ் செய்பவர் எவ்வளவு மேன்மை யுடையவராயினும் அவர் தவறாது அவமான மடைவாரென்பது இந்திரனது கதையால் செவ்வையாகப் புலப்படுகின்ற தல்லவா?

ஒவ்வொருவரும் நியாயவழியாகப் பொருள் சம்பாதித்தல் வேண்டும்; அவ்வாறு சம்பாதித்த பொருள் குடும்பவளவிற்குப் போதாததாயிருப்பின், கூடுமானவளவு செலவைச் சுருக்கிக்கொண்டு அப்பொருளைக்கொண்டே குடும்பத்தைப் பாதுகாத்தல் வேண்டும். அநியாய வழியிற்சென்று பொருள் சம்பாதித்துக் குடும்பத்தை விருத்தியாக்க முயல்வது கூடாது. அநியாய வழியில் வந்த பொருள் முடிவில் துன்பத்தையே யுண்டுபண்ணும்;

சந்ததிக்கும் கெட்ட பெயரை நிலைநிறுத்தும். "போதுமென்ற மனமே பொன் செய்யு மருந்து," "செல்வ மென்பது சிந்தையின் நிறைவே" என்னும் வாக்கினைக் கருதிப்பார்த்தால் திருப்தி பொருள் தேடுவதனாலேயே யுண்டா மென்பது பெறப்படாது. பொருள் வருவாய் சுருக்கமாயுள்ளவர்க்குத் தத்தங் குடும்பத்தைப் பாதுகாத்தலே பேரறமாகும்.

ஒருவர்க்குப் பொருள் வருவாய் மிகுதியாயிருந்தால், அவர் அப்பொருளை நான்குபாகமாக்கி யிரண்டு பாகத்தைக் குடும்பத்திற்கும், ஒரு பாகத்தை அறத்திற்கும் செலவுசெய்து மற்றொரு பாகத்தைத் தமக்குப் பொருள்வருவாய் சுருங்கியபோது உதவியாகும்படி சேர்த்து வைத்துக்கொள்ளல் வேண்டும். அவ்வாறு செய்யாது போவாராயின், அதர்மத்தைத் தேடினவராவர். "இதம் சரீரம் பரோபகாரார்த்தம் - இந்தச்சரீரம் பிறர்க்குபகாரம் செய்தற்பொருட்டாம்" என்னும் பெரியாரது நன்மொழியைக்கைசோர விடாது எவ்வகையாலும் மேற்கூறியபடி பரோபகாரமேசெய்தல் வேண்டும்.

"பலநாள் திருடன் ஒருநாளைக் ககப்படுவான்" என்னும் பழமொழிப்படி பிறர்பொருளை யபகரித்து வாழ்பவன் எப்பொழுதாவது அகப்பட்டுத் தண்டனை யடைவான். இம்மையில் தண்டனை யடைதல் ஏதோ சில காரணங்களால் தவறிப்போனாலும், மறுமையில் தண்டனை யடைதல் தவறாது. பரமேசுவரன் சர்வவியாபகனும் முற்றறிவனும் ஆதலால், அவன் இல்லாதவிடமும், அறியாத விஷயமும் இல்லை. ஆகவே, சர்வ சக்தியுமுடைய பரமேசுவரன் அவனைத் தண்டியாது விடான், விடான்.

பிறரை வஞ்சித்துக் கொண்டபொருள், கொண்டவப்போது நிலையா யிருப்பதுபோலக் காணப்படினும், அது நீரோடு கூடிய வுப்பு காலவடைவில் உருவின்றி யொழிவதுபோல வொழிந்து போம்; போகும்போது சும்மா போகாது; பெருங்கவலையையாவது அவமானத்தையாவது பெருந் தண்டனையையாவது தன்னளவிற் கேற்பத் தந்தேபோகும். இதற்குப் பரிதானம் (லஞ்சம்) வாங்கிப் பணத்தினால் முன்னுக்கு வந்த அதிகாரிகள், அப்பரிதானம் வாங்குதல் வெளிப்பட்டபோது பொருட்கேடு, மனக்கவலை, அவமானம், தண்டனை என்பவற்றில் ஏதாவதொன்றைப் பெறுதல் நிச்சயமாயிருத்தலே தக்கசான்றாம்.

எப்போதும் நாம் பேசும் பேச்சு, கேட்பவருக்கு இனிமை யுடையதாகவும் பொய் கலவாததாகவும் பிறர்க்குத் தீமையை விளைவிக்காத தாகவுமிருத்தல் வேண்டும். மெய் பேசுதல் பிறர்க்குத் தீமையை விளைவிப்பதாயின், அதனை விட்டுவிடல் வேண்டும்; பேசினல் அது பொய் பேசுவதற்குச் சமானமாம். பொய்பேசுவது பிறர்க்கு நன்மையை விளைவிப்பதாயின் அது பொய்யாகாது; மெய்பேசுவதற்கு ஒத்ததாம்.

சிலர் எவ்வகையாலும் தமக்கு ஒரு தீமையையுஞ் செய்யாதவனைக் காரணமின்றி நிந்தித்தலையே பயனாகக்கொண்டு களிப்புறுகின்றனர்; அது முடிவில் தமக்கு அவமானத்தையாவது பெருந்துன்பத்தையாவது தருவதை யறிந்தால் அவர் அவ்வாறு செய்யார். குற்றமில்லாத மனிதர் ஒருவரு மின்மையின், பிறரைக் காரணமின்றியும் நிந்தித்தல் அடாதகாரியமாம்.

எப்போதும் வயதாலும் அறிவாலும் நல்லொழுக்கத்தாலும் மேம்பட்டவர்களோடே சிநேகஞ் செய்தல் வேண்டும். அவ்வாறு செய்வதால், அறிவும் ஒழுக்கமும் நல்லோர் பலராலும் நன்குமதிக்கப்படுதலும் இம்மையிற் புகழ்பொருள் முதலியனவும் மறுமையில் நற்கதியும் உண்டாகும். நிந்தகன், குலங்கெட்டவன், பித்தன், பலரோடு பகைகொண்டவன், சமயநேர்ந்தபோது துன்பப்படுத்துபவன், வியபிசாரஞ் செய்பவன், பொதுமகளோடுறவு செய்பவன், அற்பகுணமுடையவன், லோபி என்னும் இவர்களோடு ஒருபோதுஞ் சிநேகஞ் செய்தல் கூடாது. செய்தால் இம்மையிலும் மறுமையிலும் கெடுதியுண்டாம்.



## 4. ஒழுக்கமே யெவர்க்கு முயர்நிலை தருமெனல்.

(23 - 1 - 11.)

"சிறு துரும்பும் பற்குத்த வுதவும்" என்பது பழமொழி யாதலின், மிகவற்பமான பொருளும் ஒவ்வொருசமயத்தில் பேருதவி செய்வதாகும். எதனையும் இது மிகவற்பமானதென்று இகழலாகாது. மலமூத்திரங்களும் ஒவ்வொரு சமயத்தில்மருந்தாகவுபயோகப் படுதலை யுற்று நோக்கினல், எதனையும் இகழ்தலாகாதென்பது நன்கு விளங்கும். கிணற்றில் தவறிவிழுந்து தவிக்கின்றவன், குளத்

தில் விழுந்து பிழைக்கும்வழி காண வருந்துகின்றவன் முதலி யோர்க்கு மிக விழிவானவர்களும் ஒவ்வொரு சமயத்தி-லுதவி செய் துஅவர்களைக் காப்பது வெளிப்படை யல்லவா?

சிறுவர்களுட் சிலர் நண்டைப்பிடித்து அதன்காலை யொடித் து விடுதல், தும்பியைப் பிடித்து அதன் இறக்கையைச் சிதைத்து விடுதல், பொன்வண்டு முதலியவற்றைப் பிடித்து அவற்றின் கழு த்துக்களை நூலோடு சேர்த்துக்கட்டிப் பறக்கவிடுதல் முதலிய தீய காரியங்களைச் செய்கின்றார்கள். வயதுவந்தவர்களும் இத்தகைய தீயகாரியங்களை யொவ்வொரு சமயத்துச் செய்கின்றார்கள். அவர் தம்முடைய காலையோ கையையோ ஒருவன் வெட்டிவிட்டால், அப்போது தமக்குண்டாகும்துன்பம்போலஅவற்றிற்குமுண்டாகு மென்பதை யறிவாராயின், மறந்தும் அத்தீயகாரியங்களைச் செய் யார், செய்யார். சிலர் தவளைமுதலிய பிராணிகளின் கால் முதலிய அவயவங்களைக் கத்தியா லறுத்து விட்டு, அவை துள்ளிப் பதைப் பதைத் தமது நேசர் அல்லது மனைவியர் முதலியோருடன் வே டிக்கையாகப் பார்க்கின்றனர். அவர்க்குக் கருணையென்பது ஒரு சிறிதுமில்லைபோலும்! "கோதாட்டொழி", "தன்னுயிர்க் கின்னா மை தானறிவா னென்கொலோ, மன்னுயிர்க் கின்னா செயல்" என்பவற்றை யூகித்துணர்ந்தவர் அத்தகைய காரியங்களி லொரு போதும் பிரவேசியார், பிரவேசியார்.

நல்வினையால் இன்பமும், தீவினையால் துன்பமும் உண்டா கின்றனவென்பது மனவுணர்(பகுத்தறி)வுடையாரியாவராலு மங் கீகரிக்கப்பட்ட விஷயமாம். வியபிசாரஞ் செய்தல், பொய் பேசு தல், திருடுதல் முதலிய தீவினையால் எப்போதாவ தொருசமயம் தவறாது துன்ப முண்டாதலைச் சிறிதூன்றி யறிபவர் தீவினைகளைச் செய்யாது தம்மனைவியையன்றி வேறு மாதரை நோக்காமை, இரந்தார்க்கிடுதல் முதலிய நல்வினைகளையே செய்வார். சிலர் இவை தீவினையாமென் றறிந்தும் அவற்றைச் செய்கின்றனர். அவர் தேள் கொட்டுமென் றறிந்தும் அதன் கொடுக்கில் கையை வைப் பவருக் கினமானவர்போலும்; அறிந்து செய்த குற்றத்திற்குத் தண்டனையதிகமா மென்பதை யறியார் போலும்.

"நன்றென்ப சிலவே தீதென்ப சிலவே, யொன்றினும் படா தன சிலவே" என்று பட்டினத்தடிகள் வினையின் பாகுபாடு கூறி

யிருக்கின்றதற்குத் தாம் இலக்காக வேண்டிச் சிலர் நல்வினையும் தீவினையும் கலந்து செய்வதோடு அவ்விருவினைகளுள் ஒன்றினும் சேராத வினையும் செய்கின்றனர். அவ்வினையாவது காரணமின்றிப் பல்லைக் கடித்தல், நகத்தைக் கடித்தல், யாதாவதொரு செத்தையைக் கிள்ளிக்கொண்டே யிருத்தல், உதட்டைக் கசக்கிக்கொண்டே யிருத்தல், குள முதலியவற்றில் மூழ்கும்போது நீரினைக் கையாலடித்தல் முதலியனவாம். இவ்வினை தீவினை போலத் தமக்கும் பிறர்க்கும் துன்பந்தராதாயினும் இதனால் விளையும் நன்மை யொன்றுமின்றாம். இப்பயனற்ற வினை கல்லாரிடத்தேயன்றிக் கற்றாரிடத்தும் காணப்படுகின்றது. அவர் யாது பயன்கருதி இவ்வினையினைச் செய்கின்றனரெனின், வினையின் பாகுபா டறியாமையினாற்றான் அதனைச் செய்கின்றனரென்று கூறலாம்.

மெய், வாய், கண், மூக்கு, செவி யென்னும் புறவிந்திரியமும் இவற்றிற்குத் தலைமையாயுள்ள மனமென்னும் அகவிந்திரியமும் தன்மய மானவர்க்கன்றி மற்றையோர்க்கு முற்றும் வசமாகாமலிருத்தலின், அவை தன்மயமாகாதவர் கல்வி, அறிவு, ஒழுக்க முதலியவற்றால் மிகமேன்மையுடையவராயிருப்பினும்அவரை எப்போதாவதொருபோது கெடுத்துவிடும். கெடுத்துவிடுவதா யிருத்தலின் எப்போதும் அவற்றின் வழியே செல்லாது விழிப்பா யிருக்கவேண்டும்; இதுபற்றித் தான் "மனம்போன போக்கெல்லாம் போகவேண்டாம்" என்று கூறப்பட்டிருக்கின்றது.

இந்திரியங்களை யெவ்வாறு அடக்கினும் அவை யொவ்வொருபோது அடக்கவடங்காது அனுகூலமாய சப்தாதி விஷயங்களில் பரவிச் செல்வதாயிருத்தலின், அவற்றின் தன்மையை யறிந்தவர் தாயோடாயினும் சகோதரியோடாயினும் புத்திரியோடாயினும் தனியிடத்தில் வசித்தலை விரும்பார். வசித்தால் ஒருசமயம் காம மயக்கம் மீறுவதால் கெடுதியுண்டாயினுமுண்டாகும். இது விஷயத்தில் ஒவ்வொருவரும் மிகு விழிப்பாயிருத்தல் வேண்டும். சந்திரன் தனதாசிரியராகிய பிருகஸ்பதியின் மனைவியாகியதாரையோடு கூடி நீங்காத பழியை யடைந்ததற்குக் காரணம் அத்தாரையுடன் அவன் தனியிடத் திருந்தமையல்லவா? இதுபற்றியன்றோ ஆசாரக் கோவை "ஈன்றாள் மகள்தன் னுடன்பிறந்தா ளாயினும்,சான்றோர் தமித்தா லுறையற்க, வைம்புலனுந் தாங்கற் கரிதாகலின்" என்று கூறிற்று.

"இருப்பது பொய் போவதுமெய்" என்று பெரியார் கூறியிருத்தலைக் கவனித்துப் பார்க்கின், நாமும் தவறாது மரணமடைவோமென்பது செவ்வையாக விளங்கும். தம்முடைய மரணத்தைப்பற்றி யொவ்வொருநாளும் நினைப்பவர்க்கன்றி மற்றையோருக்கு உலகத்தினிலையாமை விளங்காது. உலகத்தினிலையாமையைச் சந்தேக விபரீதமின்றி யறிந்தவர் யாதொரு பிராணிக்கும் எவ்வகையாலும் தீங்கான காரியங்களைச் செய்வதற்கு உடன்படுவதின்றாம். 'சத்திய நன்னிலை சாவைத் தினநினை' என்னும் பழமொழிப்படி தம்முடைய மரணத்தை விடாது நினைத்து வருபவர் தவறாது நன்னிலையை யடைவர்.

பிறர் பொருளை வஞ்சித்துக்கொள்வது, உலோபகுணத்தால் உடுக்காதும் உண்ணாதும் பிறர்க்கீயாதும் பொன்காத்த பூதம் போலப் பொருளைச் சேர்த்துவைப்பது, பொய்சாட்சிகூறிப் பொருளைப்பெறுவது முதலிய தீயசெயல்கள் நினையாத நேரத்தில் மரணம் வருமென்பதைக் கருதாதவர்களிடத்தே நிகழ்வனவாம். நினையாத நேரத்திலே மரணம் வருமென்பதை யுள்ளவாறறிந் திருந்தால் அவர்க ளவ்வாறுய செயல்களைச் செய்வரோ ?

"மெய்யே வெல்லும் பொய்யல்ல" என்பது சாஸ்திரவசனமாதலின், மனம்வாக்குக் காயமென்னுந் திரிகரணங்களாலும் பாவமான காரியங்களை நினைத்தலுஞ் சொல்லலுஞ் செய்தலும் ஒருபோதுங் கூடா. அரிச்சந்திரன் புகழுடம்பால் விளங்குவதற்குக் காரணம் அவனிடத்து விளங்கிய மெய்யே யல்லவா? விசுவாமித்திரன் முதலியவர்களால் அளவிறந்த துன்பங்களுண்டாய விடத்தும் மெய்ம்மையையே மேற்கொண்டிருந்தது பற்றியல்லவா அவ்வரிச்சந்திரனுக்கு உலகம் புகழும் மேம்பாடுண்டாயிற்று? மெய்ந்நெறியொழுகுவோரே எல்லாவற்றாலும் மேம்பட்டு விளங்குவரென்பது அரிச்சந்திரனது சரித்திரத்தால் நன்குவிளங்கும். இதுபற்றி யல்லவா வள்ளுவனார் " பொய்யாமை யன்ன புகழில்லை யெய்யாமை, யெல்லா வறமுந் தரும்" என்றார்.

அஞ்ஞானம் அகங்காரம் அவா ஆசை கோபமென்னு மைவகைக்குற்றங்களும் பிறவித்துக்கத்திற்குக்காரணமாம். இவை தத்துவஞானத்தாலன்றி வேறெதனாலும் ஒழிவனவன்றாம். தத்துவஞானம் அனுபவமுடைய தேசிகரை யடுத்து அவர் உபதேசித்த

வழியில் நின்றுலுண்டாம். இத்தத்துவ ஞானத்தைச் சற்குருமூர்த்தியினிடத்துப் பெற முயலாது பிறவிக்கேதுவான காரியங்களைச் செய்ய முயல்வது கரும்பிருக்க இரும்பு கடிப்பதுபோலாம்.



## 5. பூரணபாவம் பெறுமுறை கிளத்தல்.

(30 - 1 - 11.)

சுகதுக்கங்கள் இராப்பகல் மாறிவருவதுபோல் மாறி மாறி வருகின்றன. இவை இவ்வாறு வருவதற்குக் காரணம் பூர்வகன்ம வினைகளாம். இவ்விருவினைகளும் நம்மாற் செய்யப்பட்டனவாதலின், இவற்றின் பயனான சுகதுக்கங்களை நாமே அனுபவிக்க வேண்டும். இவற்றுள், ஒன்றை விரும்பி மற்றொன்றை வெறுப்பது தகுதியாகாது. இவ்விரண்டையும் சமநோக்காயிருந்தனுபவிப்பவனே ஞானியாவன். பகவான் கீதையில் அருச்சுனனை நோக்கி "இறந்தவர்களைக் குறித்தும் உயிரோடிருக்கின்றவர்களைக் குறித்தும் வித்துவான்கள் துக்கமடையார்கள்" என்றருளியது இங்கு நன்கு கவனிக்கத்தக்கதாம்.

ஆத்மா என்றும் நிலைத்துள்ளதாகலின், அதற்குப் பிறப்புமில்லை, இறப்புமில்லை. ஆத்மா ஒரு தேகத்தை விடுதல் மரணமென்றும், மற்றொரு தேகத்தைக் கொள்ளுதல் பிறப்பென்றும் சாஸ்திரங்கள் கூறுகின்றன. இவ்வுண்மை யறியாதவர்கள் ஆத்மா இறந்ததென்றும் பிறந்ததென்றும் கூறுகின்றார்கள். ஆத்மா இறப்பதாயின், செய்தகன்மங்கள் பயனற்றனவாம்; முன்னில்லாதிருந்து பிறப்பதாயின், செய்யாத கன்மங்கள் பயன்தரவருவனவாம். ஆத்மாவிற்கு மரணம் பழையவஸ்திரத்தை விடுவது போலவாம்; பிறப்புப் புதியவஸ்திரத்தைத் தரிப்பது போலவாம்.

சரீரமானது வாலிபம், யௌவன முதலியவற்றால் மாறி மாறி வரினும் அதிலுள்ள நான் நான் என்னும் அறிவு மாறாது ஒரு திறத்ததா யிருத்தலின், அறிவுவடிவ ஆத்மா சரீரத்திலும் வேறென்பது வெளிப்படையாக விளங்கும். இது வினைவசத்தால் சுகதுக்கங்களை அனுபவிக்கும்படி ஒரு சரீரத்தை விடுவதும், மற்றொரு சரீரத்தை யெடுப்பதுமாயிருக்கின்றது; அதனால், பெருந்துன்பங்களை யடைகின்றது. எவன் பிறப்பிறப்பிற்குக் காரணமான

அஞ்ஞானத்தைச் சற்குரு மூர்த்திவாயிலாகக் கெடுத்துச் சுபாவ நிலையைப் பெறுகின்றானோ அவனே ஜீவன்முத்த னெனப்படுவான்.

அஞ்ஞான மானது காரணஞ்ஞானம் காரியாஞ்ஞானமென விருவகைத்தாம். செம்பிற்களிம்பு, அல்லது ஆகாயத்தில் வளைவு போல ஆத்மாவின்கண் ணிருக்கும் அஞ்ஞானம் காரணஞ்ஞானமெனப்படும். ஆகாயமுதலிய சர்வபூதங்களின் உற்பத்திக்குக்காரணமாயிருத்தலால், இது காரணஞ்ஞான மெனப் பெயர்பெற்றது. அதனாலுண்டான காரியாஞ்ஞானம் நால் வகைத்தாம். அவை பிறத்தல், இருத்தல், வளர்தல், திரிதல், குறுகல், இறத்தலென்னும் சட்பாவவிகாரமுடைய தேகத்தில் நானென்னும் புத்தியும், பார்க்கும்போதே யழியுமியல்புள்ள பொருள்களில் நித்தியபுத்தியும், எப்போதும் துன்பத்தையே தருமியல்புள்ள வீடு மனை காணி ஆபரணம் வஸ்திரமுதலியவற்றில் சுகபுத்தியும், அசுசியான மாம்சம் மச்சம் மது முதலியவற்றில் சுசிபுத்தியுமாம். இவ்வஞ்ஞானப்பகுதிகளை விசாரித்து நிட்டைகூடி யொழித்தவர்களுக்கே பிறவி யொழியும்.

இஃதுண்மை, இஃதுண்மையன் றென்றறிதற்கு முக்கிய காரணம் விசாரமேயாம். "கண்ணாற் கண்டதும் பொய், காதாற் கேட்டதும் பொய், தீரவிசாரித்ததே மெய்" என்று வழங்கிவரும் பழமொழியும் இதற்குத்தக்க சாட்சியாம். அரணையின் கால் எத்தனை என்று அளவற்றகாலம் விசாரித்தறிந்தாலும் அதனாற் பயனில்லாமைபோல, பிறவியையொழிக்க முயலுகின்றவர்களுக்கு அளவுகடந்து பொருள்தேட விசாரித்தல் முதலியன பெரும் பயன் தருவனவன்றாம். அவர்களுக்குரிய விசாரம், நான் யார்? கடவுள் யார்? உலகென்பது எப்படிப்பட்டது? இவ்வுலகின் காரணம் யாது? இவ்வுலக சம்பந்தம் உற்று நோக்கு மிடத்துத் துன்பமே தருவதாயிருத்தலால் இஃதெப்போது நீங்கும்! எதனால் நீங்கும்! என்பனவேயாம்.

நிரம்பிய கல்வியும், நல்லுணர்வும், நல்லொழுக்கமும், நிலைத்த மனமும், பூரண நிஷ்டையுமுடைய சற்குருமூர்த்தி வாயிலாகச் செய்யும் விசாரத்தினாற்றான் தத்துவஞான முண்டாகும். தத்துவ ஞானத்தைச் சந்தேக விபரீதமில்லாமற் பெற்றவர்களுக்கே அஞ்ஞானம் நீங்கும்.

சிலசமயம் தத்துவ ஞானத்தால் உலகசம்பந்தம் நீங்கினது போலக் காணப்படும். அது கொண்டே திருப்தியடைதல்கூடாது. மேலும் மேலும் விசாரஞ்செய்து தத்துவ ஞானத்தை ஸ்திரமாக்கிக்கொள்ளல் வேண்டும். பாசிபடர்ந்த குளத்தில் கல்லையெறியும் போது அப்பாசி யொதுங்கியிருந்து மறுபடியும் பரவிவிடுவது போல உலகசம்பந்தமும் வந்துவிடும். இவ்விஷயத்தில் மிகு விழிப்பாயிருப்பவர்க்கே நன்னிலை சித்திக்கும்.

கௌசிக ரென்னும் விசுவாமித்திர முனிவர் ஒரு முறை காமத்தால் தவத்தை யிழந்தாரென்றும் மற்றொருமுறை கோபத்தால் தவத்தை யிழந்தாரென்றும் இராமாயணங் கூறுதலால், உலகசம்பந்தத்தைவிட்டுத் தவஞ்செய்பவருக்கும் ஒவ்வொரு சமயத்தில் காமத்தாலும் கோபத்தாலும் கேடுண்டாமென்பதைத் தத்துவ விசாரஞ்செய்பவர் செவ்வையாக வறிந்து கூடியானவளவு காமத்தையும் கோபத்தையும் அடக்கவேண்டும். காமத்தின் வசமாகவும் கோபத்தின் வசமாகவும் செல்லாது அவற்றைத் தமது வசமாக வுடையவர்களுக்கே பரமேசுவரன் தேசிகமூர்த்தியாகத் திருமேனிகொண் டெழுந்தருளிவந் தனுக்கிரகஞ் செய்வான்.

ஞானதேசிகரை யடுத்து, அவர்க்கு முழுமனதுடன் தொண்டுபுரிபவர், எவ்வளவு யிழிதகைமையை யுடையவராயிருப்பினும் கூடியசீக்கிரத்தில் மேனிலையடையவேண்டுமென்னுங்கருத்துடையவராவர். இதற்குச் சாட்சி சசிவர்ணன் சரித்திரமும் பிறவுமாம்.

சிஷ்யர்கள் சத்குருமூர்த்தி தம்மிடத் தன்பாயிருக்கும்போது அம் மூர்த்தியை விஷ்ணுவாகவும், கோபிக்கும்போது உருத்திரராகவும், உலகவியாபாரமாயிருக்கும் போது பிரஹ்மாவாகவும், அமைதியாயிருக்கும் போது கங்கையாகவும், சந்தேகத்தோடுகூடிய அஞ்ஞானத்தை யுபதேசத்தால் நீக்கும்போது சூரியனாகவும் நினைக்கவேண்டும்.

காற்றானது உஷ்ண மிகுந்தபோது மேலெழும்பிச் செல்வதும் சீதமிகுந்தபோது கீழிறங்கிச் செல்வதுமாயிருத்தல் போல, மனமானது விரும்பிய பொருள் கிடைக்காதபோது கலக்கத்தை யடைவதும், அது கிடைத்தபோது சாந்தியை யடைவதுமா யிருக்கின்றது. இச்சாந்தியானது க்ஷணநேரத்திற்குமே லிருப்பதில்லை.

இரட்டை யிராட்டினத்தொட்டிபோல மனம் கலக்கத்தையும் சாந்தியையு மடைந்தேவருதலால், நமக்கு ஒருபோதும் பூரணத்திருப்தி யுண்டாகா திருக்கின்றது. பூரணத்திருப்தி யெப்போதுபெறப்படுகின்றதோ அப்போதுதான் துக்கத்திற்குக் காரணமான கலக்கமும் சுகத்திற்குக் காரணமான சாந்தியும் ஒழியும். எப்போது மனது விஷயவாசனை நீங்கிய தியானத்தைப் பூரணமாகப் பெறுகின்றதோ, அப்போதுதான் பூரணத் திருப்தி தடையில்லாமலுண்டாகும்.

புலியின்பற்கள் வளைந்திருத்தலால், அது வாயைமூடும்போது மேல்வாய்ப் பற்களும் கீழ்வாய்ப் பற்களும் தம்முள் பற்றுதலுடையனவாய் விரைவிற் கழற்றக் கூடிய நிலைமையற்றனவாம்; அதுபோலத் தியானஞ் செய்யும்போது மனமும் கடவுளாகாரமும் விரைவிற் பிரிபடாதிருக்க வேண்டும். அவ்வாறிருந்தாற்றான் பூரணபாவம் சித்திக்கும். பூரணபாவமாவது, உலகநோக்கற்றிருப்பது. இப்பாவனையின்பயன் "ஒழிந்தேன் பிறவி யுறவென்னும் பாசங், கழிந்தேன் கடவுளு நானுமொன் றானேன்" என்று திருமந்திரங் கூறுவதால் நன்கு விளங்கும்.



## 6. பரமேசுர பத்தியின் பயனைக்கூறல்.

(6 - 2 - 11.)

காணப்பட்ட புகையைக் கொண்டு காணப்படாத நெருப்பு உண்டென்றறிவதுபோல, காணப்பட்டவுலகைக்கொண்டு காணப்படாத கடவுளுமுண் டென்றறிதல் வேண்டும். நெருப்பின்றிப் புகையுண்டாகாமை போலக், கடவுளின்றி யுலகமு முண்டாகாது. கடம் தானே யுண்டாகாது அறிவுள்ள வொருவனாலுண்டாவது போல, உலகமும் அறிவுள்ள ஒருவனாலுண்டாயிருத்தல் வேண்டும்; ஒருவகையாலும் அது தானே யுண்டாதல் கூடாது. சூரியன், சந்திரன், நட்சத்திரம் முதலியபொருள்கள் அவயவமுடையனவாயிருத்தலால் அவை காரியப்பொருள்களாம். காரியப் பொருள்களாயிருத்தலால், அவை ஒரு கர்த்தாவை யுடையனவா யிருத்தல் வேண்டும். அக்கர்த்தா நம்முடைய வறிவாற்றல்களால் குறிப்பிட்டறியக் கூடாதவரா யிருத்தலால், அவர் கடவுள் என்று சொல்லப்

படுகின்ருர். அவர்க்குப் பெயர் இன்னதுதா னென்றும், உருவம் இன்னதுதா னென்றும் குறிப்பிட்டுச் சொல்வதற்குக் கூடாமை யா யிருத்தலால்,மதவாதிகள் தத்தம் புத்திக்கெட்டியவாறு பெய ரும், உருவமும் கற்பித்துக் கூறுவாராயினர். இது மணிவாசகப் பிரபு "ஒருநாம மோருருவ மொன்று மிலார்க் காயிரந்,திருநாமம் பாடிநாம் தெள்ளேணங் கொட்டாமோ" என்று திருவாய்மலர்ந் தருளியிருத்தலால் நன்கு விளங்கும்.

காலகணிதக் கருவியென்னும் கடிகாரமானது தவறின்றி நடை பெறுவதுபோல,சூரியன் முதலியபொருள்கள் தவறின்றி உதயா த்தமன முடையனவாயிருக்கின்றன. இவை இவ்வாருக நடைபெ றுவதற்குக் காரணமான புருஷன் நம்மிலும் பேரறிவுடையவனு யிருத்தல்வேண்டும். இப்பேரறிவுடைய மகான் நாம் ஒருபோதும் செய்யக்கூடாத காரியங்களுக்குக் கர்த்தாவா யிருத்தலால் அவன் அளவுகடந்த வல்லமை யுடையவனு யிருத்தல் வேண்டும். பிரு திவி, அப்பு, தேயு, வாயு முதலிய வெல்லாப்பொருள்களும் காரி யமா யிருத்தலால், அவற்றிற்குக் கர்த்தாவானவன் எல்லாவிடங் களினு மிருத்தல்வேண்டும்; இவ்வாறு பேரறிவும் பேராற்றலும் சர்வ வியாபகமுமுடைய வவனே ஈசுவரனென்று சொல்லப்படுகி ன்ருன். ஜடப்பொருள்க ளெல்லாம் காரியமா மென்பது அறிவு டையோர் கொள்கை. காரியம் - செய்யப்பட்டது; கர்த்தா - செய் பவன்.

சிலந்திப் பூச்சியானது தன்னிடத்துத்தோன்றும் நூலிற்குத் தானே முதற்காரணமும் நிமித்த காரணமுமாயிருத்தல்போல ஈசு வரனும் உலகத்திற்கு முதற்காரணமும் நிமித்தகாரணமுமாயிருக் கின்ருன். இதனுலவன் ஜகத்யோனி என்று சொல்லபடுகின்ருன். சிலந்திப்பூச்சியானது தன்னிடத்திற் ருேன்றிய நூலினது இரு ப்பிற்கும் ஒடுக்கத்திற்குந் தானே காரணமா யிருத்தல்போல, ஈசு வரனும் தன்னிடத்திற் ருேன்றிய உலகத்தினது இருப்பிற்கும் ஒடுக்கத்திற்குந் தானே காரணமா யிருக்கின்ருன். பொன்னிலிரு ந்துண்டாய ஆபரணம் ஒடுங்கும்போது பொன்னி லொடுங்குமே யல்லாமல் மற்ருென்றில் ஒடுங்காதென்பது நியமமாதலால், ஈசுவர னிடத்திருந்துண்டாய வுலகமும் அவனிடத்தி லொடுங்குமே யல் லாமல் மற்ருென்றி லொடுங்காது. மற்ருென் றென்பது ஈசுவர னுக்கு வேருக விருக்கின்றதென்பதற் கொருபிரமாணமு மில்லை.

இஃது "உலகம் யாவையுந் தாமுள வாக்கலும், நிலைபெறுத்தலு நீக்கலு நீங்கலா, லலகி லாவிளை யாட்டுடை யாரவர், தலைவர்" என்று இராமாயணங் கூறுவதாலும் விளங்கும்.

இவ்வுலகப் படைப்புக் கங்காப்பிரவாகம் போல அநாதியாக நடைபெற்று வருகின்றது. ஒவ்வொரு காரியமும் யாதாவதொரு நிமித்தம் பற்றியே செய்யப் படுகின்றதென்பது யாவரு மறிந்த விஷயமாம். பைத்தியக்காரனும் நிமித்தமில்லாமல் ஒன்றையும் செய்வதில்லை. இல்லையாகவே, உலகப்படைப்பிற்கு ஒரு நிமித்தமிருத்தல்வேண்டும். அந்நிமித்தத்தினைச் சாஸ்திரங்கள் ஜீவர்களது கன்மங்களென்று கூறுகின்றன. யாதொரு நிமித்தமு மில்லாது ஈசன் உலகைப்படைத்தா னென்பது யுக்திக்குப் பொருந்தாது. நியாயாதிபதி இராகத்துவேஷ மில்லாது வாதிப் பிரதிவாதிகளை விசாரித்துத் தண்டிக்கத்தக்கவரைத் தண்டித்தும், விடத்தக்கவரை விட்டும் வருவதுபோலப் பரமேசுவரனும் ஜீவர்களது கன்மங்கட்கேற்றவாறு அவரவர்கட்குத் தனு, கரண, புவன, போகங்களைத் தருகின்றான். ஜீவர்களாகிய நாம் உய்யும் பொருட்டு நமக்குத் தனு, கரண, புவன, போகங்களைத் தந்தருளிய பரமேசுவரனை நாம் உயர்நிலை யடைதற்பொருட்டுத் திரிகரண சுத்தியாக வணங்குவோமாக.

பரமேசுவர பக்தி யாவர்க்கும் பொதுவான சொத்தன்று; யாவரிடத்தும் அஃதிருப்பதாகக் காணப்படினும், உண்மையாக நோக்குமிடத்து அருமையாகவே காணப்படும். பரமேசுவரன்செய்துள்ள உபகாரத்தை யுள்ளவா றறிந்தவ ரிடத்திற்றான் பக்தி பூரணமாக நிரம்பி யிருக்கும். உள்ளவாறு பத்திசெய்பவ ரிடத்து இராகத்துவேஷமுதலிய தீக்குணங்களுள் ஒன்றுமிராது. இராகத்துவேஷ முதலியவற்றை யுடையவர்கள் ஒருபோதும் பக்தியென்னும் பாக்கியத்தை யடைவதே யின்றாம். திருவாசகம் "பத்தி வலையிற் படுவோன் காண்க" என்று கூறுவ தன் பொருளை நல்லாசிரியனிடத்து மாறுபாடின்றி யறிந்தவர்க்கன்றோ பத்தியென்னும் பாக்கியம் பாங்காகக் கிடைக்கும்; பரமேசுவர சித்தியு முண்டாம்.

கண்ணப்ப நாயனார் ஆறுநாட் செய்த சிவபூசையால் சிவபதவி யடைந்தது பத்தியினா லல்லவா? திண்ணனாரென்னும் கண்ணப்பர் தமதுபரிவாரத்துடன் வேட்டைக்குச்சென்று திருக்காளத்தி

மலையை யடைந்து காளத்தியப்பரைத் தமது பரிவாரகங்களைத் துறந்து ஐந்துநாள்பூசித்து, ஆறும்நாள் காளத்தியப்பரதுகண் ஊனமாயிற்றென்று தமது கண்ணைக்கருவியால் பிடுங்கி, அவரது கண்ணி லப்பினுரென்பது சாமானிய சரித்திரமாமோ? இச்சரித்திரம் பத்திசெய்பவர் பரமேசுவரனையன்றி வேறெதனையும் ஒரு பொருளாக மதித்தல் கூடாதென்பதனைச் செவ்விதாக விளக்குவதாம்.

கண்ணப்பநாயனுர்போலப் பத்தி செய்பவருக்கே லோகவாசனை, தேகவாசனை, சாஸ்திரவாசனை யென்பன வொழியும். வஸ்திரத்திலுள்ள அழுக்கை நீக்க அதனை உவர்மண்ணோடு சேர்ப்பதுபோல, மனத்திலுள்ள ஷ வாசனைகளை யொழிக்க, அதனைப் பக்தியோடு ஒருமைப்படுத்த வேண்டும். பத்தியால் பரவசமான மனந்தான் உண்மையை யறிதற்குத் தக்கசாதனமாகும்.

யான் நல்லகுலத்திற் பிறந்தவன், யான் நல்லொழுக்கமுடையவன், யான் திரண்ட ஐசுவரியமுடையவன், யான் சிறந்த அழகுடையவன், யான் நல்ல யௌவன முடையவன், யான் சகலசாஸ்திரங்களிலும் தேர்ந்த வறிவுடையவன், யான் இந்திரியமனோ நிக்கிரகமென்னுந் தவத்தால் மேம்பாடுடையவன், யான்பெரிய பூமிக்குரியவனென்னும் மதம் பத்திமான்களிடத்து ஒருபோது மிருப்பதில்லை. இங்குக்கூறிய வெட்டு மதங்களுள் யாதாவதொன்றிருந்தாலும் அதுபத்திவிருக்ஷத்தின் அடிவேரையுலரச்செய்வதாகும். இம்மதங்கள் மிகக்கொடியன வென்பது பத்திச்சுவை நனி சொட்டச் சொட்டப்பாடிய திருவாத வூரடிகள் "சாதிகுலம் பிறப்பென்னுஞ் சுழிப்பட்டுத் தடுமாறும், ஆதமிலி நாயேனை" என்றுதிருவாய்மலர்ந்திருத்தலால் செவ்வையாக விளங்கும். நிரம்பிய பத்தியுடையவர்க்கே பூரணபாவம் வாய்க்கும்.

பூரணபாவம் வாய்த்தவர்க்குப் பிறவி வருவதில்லையென்பது சத்தியமாகலின், பிறவித் துக்கத்தையொழித்தற் பொருட்டு, எவ்வகையாலாவது பூரணபாவத்தைப்பெற முயலவேண்டும். பூரணபாவம் சற்குருவின் அனுக்கிரகம் பூரணமாயிருந்தாற்றான் சித்திக்கும். அது குருநாதன் கூறிய வுபதேசவழியில் மனத்தை நிலைபெற நிறுத்தினவர்க்கே வாய்க்கும். அவ்வாறு நிறுத்தவலியில்லாதவர் தவவேடங் கொள்வது உலகத்தாரை வஞ்சிக்கும் பொருட்டேயாம்.



## 7. ஆசைமனத்தை யடக்குதல் நன்றெனல்.

(13 - 2 - 11.)

ஒவ்வொருவருக்கும் துன்பத்திற்குக் காரணமா யிருப்பது ஆசையாம். ஆசையினால் ஆசைப்பட்ட பொருள் சித்திப்பதற்குத் தடையா யிருந்தவர்கள் மீது கோபமுண்டாகின்றது; கோபத்தினால் தடைசெய்தவர்களைத் தாம் வருத்துதல், தம்மை அவர் வருத்துதல் முதலிய தீமைகளுண்டாகின்றன. ஆசையையொழித்தவர்க்குக் கோபமில்லாமையால், அவர்க்கு யாதொருகெடுதியும் மற்றவர்வாயிலாகவுண்டாவதில்லை. ஆசைகோபத்தின் வாயிலாகத் துன்பத்தைச் செய்வதால் அதனையொழித்தவர்க்கே மனோசாந்தியுண்டாகும். ஆசையானது ஆபத்திற்கெல்லா மூலமாயிருப்பது பற்றியன்றோ திருமந்திரம் "ஆசை யறுமின்க ளாசை யறுமின்கள், ஈசனோ டாயினு மாசை யறுமின்கள், ஆசைப் படப்பட வாரும் பெருந்துன்பம், ஆசை விடவிட வாநந்த மாமே" என்று கூறிற்று.

ஆசையானது (கால் நான்கு, தலை யொன்று ஆகிய) தனது அவயவங்களைப் பிரதிகூலமான பொருள்களைக் கண்டவிடத்துத் தனக்குள்ளே யடக்கிக்கொள்வது போன்று எவன் சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றமென்னும் ஐந்து விஷயங்களும் உண்மையாக நோக்குமிடத்துத் துன்பமே தருவனவாமென்றுள்ளவா றறிந்து, அவற்றின்கண் தனது மெய், வாய், கண், மூக்குச், செவியென்னும் ஐந்திந்திரியங்களையும் செல்லவொட்டாது தனக்குள்ளே யடக்குகின்றானோ அவன்றான் ஆசையை யொழிப்பதற்கு அதிகாரி யாகின்றான். ஆசையின் சொரூபத்தையுள்ளபடி யறிந்து, அதைக் கெடுத்தவனேநிலைபெற்றதத்துவஞானத்தையடைவான். "(எவன்) எப்போது மனத்தின் கணுள்ள விருப்பங்களை யெல்லாம் விடுகின்றானோ தன்னிடத்திற் றன்னாலேயே ஆநந்தமுடையவனாகின்றானோ அப்போது (அவன்) நிலைபெற்ற ஞானியென்று சொல்லப்படுகின்றான்" என்று பகவத்கீதை கூறுவதால் இது நன்கு விளங்கும்.

இந்திரியங்களுக்குத் தலைமையாயுள்ளது மனமாம்; அஃது ஒவ்வொருவர்க்கும் சத்துருபோலவும் மித்துருபோலவும் இருக்கின்றது. ஆசையோடுகூடியமனம் சத்துருபோல்வதாம்; அஃதொழிந்தமனம் மித்துருபோல்வதாம். ஆசையோடு கூடியமனம் பிறப்

பிற்குக் காரணமாம். அஃதற்றமனம் முத்திக்குக் காரணமாம். நிர்மலமான மனமே நிஷ்டை செய்வதற்குத் தக்க கருவியாம்.

ஆசையோடு கூடிய மனம் வேங்கைப்புலிக்குச் சமானமானது. அது சப்த, பரிச, ரூப, ரச, கந்தமென்னும் விஷயவடிவக் காட்டிற் சஞ்சரிக்கும் சுபாவமுடையது; தனது வசமாயுள்ள புருஷனை யெவ்விதத்திலாவது கொல்லமுயலும்; இதனைக்கொல்லுதற் கேற்ற இயமநியமாதி சாதனங்களை யவசியஞ் சம்பாதித்தல் வேண்டும். இவ்வியமநியமாதி சாதனங்களைச் செவ்வையாகப் பெற்றுற்றான் அதனைச் கொல்லமுடியும். அது கொல்லப்பட்டால் வாக்வியாபாரமும் காயவியாபாரமும் ஒரு பிரயத்தன மில்லாமலே ஒழியும். மனோவியாபாரத்தைக் கெடுக்கமுயலாது வாக்வியாபாரத்தையும் காயவியாபாரத்தையும் கெடுக்க முயலுதல் விருக்ஷத்தை யழிக்க முயன்றவன், மீண்டு முளைப்பதற்குரிய அதன் வேரைக் களையாது கிளை முதலியவற்றைக் களையமுயல்வது போலவாம்.

தானல்லாத வுடம்பினிடத்து யானென்பதும் தன்னுடையவாகாத வீடு, விளைநிலம், பொன், பூண், ஆடைமுதலியவற்றினிடத்து எனதென்பது மாகிய வபிமானத்தைச் செய்துகொண்டு செவிமுதலிய இந்திரியங்களின் வழியாகச் சத்தமுதலியவிஷயங்களிற் செல்வது அஞ்ஞானிகளுக்குரிய மனமாம். இம்மனம் விர்த்திபேதத்தால் மூவகைத்தாம். விருப்பு வெறுப்பு முதலிய விர்த்திகளையுடைய மனம் இராசதகுணமனமாம்; சோம்பல் நித்திரை முதலியவிர்த்திகளை யுடைய மனம் தமோகுண மனமாம்; பொறுமை, அன்பு, அருள் முதலியவற்றையுடைய மனம் சத்துவகுண மனமாம். இம்மூன்றனுள், சத்துவகுணமனமாத்திர முடையவர் தாம் உபசாந்தியைப்பெறுவர். எவர் உபசாந்தியைப் பூரணமாகப் பெறுகின்றாரோ அவரே பூரணாநந்த வடிவமாக விளங்குவர்.

மனமானது ஆத்மாவோடு கூடியபோது யான் என்னும் ஞானத்தையும் விஷயங்களோடு கூடியபோது எனது என்னும் ஞானத்தையு மடைகின்றது. எப்போது இது யான் எனது என்னும் விகற்பத்தைவிட்டுச் சிவாகாரமாகி ஸ்திரநிலையை யடைகின்றதோ அப்போதுதான் அது நமதுவசமாகவாம். "ஓடுமன நம்மினுடனுறவு செய்யு மாயின், உள்ளநிலை மெள்ளவெளி யாகும்" என்று பெரி

யார் கூறுகிறபடி மனம் நமது வசப்பட்டு உறவாகுமானால், உலக நிலை, ஜீவநிலை, பரநிலை, பந்தநிலை, முத்திநிலை என்பன உள்ளவாறு விளங்கும்; அவ்வாறு விளங்கிய விடத்திற்றான் சிவாகாரநிலை பூரணமாக விருக்கும். சிவாகாரநிலை ஸ்திரமாகப் பெற்றவர்கட்கே உலகத்தில் உவர்ப்புப் பூரணமாக விருக்கும்.

பரலோகத்தை யடைய வொட்டாது விரோதஞ் செய்யுங் குணங்கள் காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மற்சரம் என்பனவாம்; இவை நமது மனத்தினிடத்துக் குடிபெற்றிருந்தே நம்மை மேனிலையடைய வொட்டாவாறு கெடுதியை விளையச்செய்தலின் 'அரிசட்வர்க்கம்' என்று சொல்லப் படுகின்றன. ஆதாரமாகிய மனமுள்ள பரியந்தம் ஆதேய மாகிய விக்குணங்கள் ஒழிவனவன்றாம். மனநாசஞ்செய்ய முயலாது இக்குணங்களை நாசஞ் செய்வதால் பெரும்பயன் சித்தியாது. மனமுள்ள பரியந்தம் காம முதலிய விக்கொடிய குணங்கள் முற்றுங் கெடாவாகலின், மன நாசத்தை யவசியஞ் சம்பாதித்தல் வேண்டும்.

பூனைமுதலிய பிராணிகளை அவைசெய்யுந் துஷ்டச் செய்கைக் காற்றாது அடிக்க முயலும்போது, அப்பிராணிகள் தப்பித்தோடும் வழி கிடையாதவிடத்து, அடிப்பவர்மீது சீறிப்பாய்வதும் அவரைக்கொல்ல முயல்வதும் பிரசித்தமாம்; அதுபோல, வசப்படாது இந்திரியங்களின் வழியாக விஷயங்களிற்றாவியோடு மியல்புள்ள மனத்தை நன்னிலையடைய வேண்டிக் கெடுக்க முயலுங்கால், அதுவஞ்சித்தோடும் வழிகிடையாதவிடத்து நம்மை மோகாந்தகாரத்தில் சிக்கி யல்லற்படுமாறு செய்கின்றது. இது சற்குருமூர்த்தி வாயிலாக வுபதேசம் பெற்றுச் சாதனஞ்செய்யும் புருஷர்களுக்கு நன்குவிளங்கிய விஷயமாம். சாதனஞ்செய்யும்போது பராக்காக விராது காமாதிவிர்த்திகளைத் தோன்றும்போதே யடக்கப்பழகி மனத்தை ஒருமுகமாக்கல் வேண்டும்; அவ்வாறு ஒருமுகமாகவாக்கிய விடத்திற்றான் அது பல்லும் நகமுமிழந்த புலிபோலத் தனது வலிகெட்டுச் சொன்னபடி நடக்கும்; ஏவலாளிபோல நிறுத்தியவிடத்து நிலையாகநிற்கும். நிறுத்தியவிடத்துப் பிறழாது நிலைபெறநிற்கும் மனமுடையாரே ஏகாந்த சீலராவர்.

நமது தமிழ் நாட்டிலுள்ள மண்டலங்களுள் ஒன்றாகிய தொண்ட மண்டலத்துள்ள திருநின்றவூ (தின்னனூ) ரின்கண்ணிருந்த

பூசலார் நாயனார் நற்கதியடைந்ததற்குக்காரணம் மானதபூசையாயிருத்தலால், புறத்திற்செய்யும் பூசை அகத்திற்செய்யும் பூசையென்னுமிரண்டனுள் அகப்பூசையே மேன்மை யுடையதாம். இதுபற்றியன்றோ திருநாவுக்கரசு சுவாமிகள் "அன்ப ரகமலாற் கோயி லில்லை யையனை ரூரனார்க்கே" என்று திருவாய் மலர்ந்தருளினர்.

பூசலார் நாயனார் ஆசைகோப மகந்தைகளை யொழித்துத் தேகாலயத்திற் சிதாகாச தேவதையைத் தரிசிக்க, மனத்தினிடத்துச் சிவாலயத்தைச் சிற்பசாஸ்திரப்படி கற்பித்துக் கும்பாபிஷேகஞ் செய்யும் நாளொன்றை நியமித்திருந்தனர். அப்போது காஞ்சீபுரத்தில் காடவர்கோனென்னு மரசன் சிவாலய மெடுப்பித்துத் தெய்வகதியாகப் பூசலார் நாயனார் குறித்த நாளையே தானுங் கும்பாபிஷேகஞ் செய்யும் நாளாகக் குறிப்பிட்டிருந்தான். சிவபெருமான் அவ்வரசனது சொப்பனத்தி லெழுந்தருளிவந்து "அன்பனே! நீ குறித்த கும்பாபிஷேகநாளை மாற்றிக்கொள்க; திருநின்றவூரிலே பூசலார் செய்யும் கும்பாபிஷேகத்திற்கு நாமெழுந்தருள வேண்டும்" என்று கூறியருளினர். அதனால் அவ்வரசன் புறத்திற் செய்யும் பூசையினும் அகத்திற் செய்யும் பூசை அத்தியந்த சிரேட்டமுடைய தென்றறிந் துய்வானாயினன். அகப்பூசையைச் செவ்வையாகச் செய்தவர்க்கே நன் மனத்தால் தீய மனத்தை யடக்கு முபாயம் இனிது புலப்படும்.



## 8. தியானாதி யேதுவைச் செவ்விதினுரைத்தல்.

(20 - 2 - 11).

ஒவ்வோரு பதார்த்தமும் பொது வகையாக வேனும் சிறப்பு வகையாக வேனும் இருத்தற்கும் விளங்குதற்கும் காரணமாயிருப்பது சத்திய ஞானாநந்த சொரூபமாயுள்ள கடவுளாம். காரணமில்லாவிட்டால் காரியம் எவ்வாற்றானு மிருப்பதற்கும் விளங்குவதற்கும் இடம்பெறா தென்பது, காரணமாகிய மண் இல்லா விடத்து அதன் காரியமாகிய கடம் இருப்பதற்கும் விளங்குதற்கும் இடம் பெறாதொழிதலால் நன்குவிளங்கும். உலகம் காரியவடிவமாக விருத்தலால் அஃதிருத்தற்கும் விளங்குதற்கும் காரணமான வொன்று அத்தியாவசியகமாக விருத்தல் வேண்டும். அக்காரண

மானவொன்றுதான் கடவுளென்னும் பெயரால் வழங்கப்படுகின்றது.

அக்கடவுள் மூர்த்தம் அமூர்த்தமென விருவகைத்தாய வடிவமுடையது. சரீரத்தோடு கூடியது மூர்த்தமாம்; சரீரத்தோடு கூடாது அறிவுமாத்திரமாக விருப்பது அமூர்த்தமாம்; அமூர்த்த வடிவம் பரமென்றும் மூர்த்தவடிவம் அபரமென்றும் சொல்லப்படும். மூர்த்தவடிவ வுபாசனை சகுணோபாசனையாம்; அமூர்த்த வடிவ வுபாசனை நிர்க்குணோபசனையாம். மூர்த்தவடிவ வுபாசனை செய்யாதவர்க்கு அமூர்த்தவடிவ வுபாசனை செய்தல் முடியாதாகலின், அமூர்த்தவடிவ வுபாசனை செய்தற்பொருட்டு மூர்த்தவடிவ வுபாசனை யத்தியாவசியகஞ் செய்யத்தக்கதாம்.

மூர்த்தவடிவ வுபாசனையால் அமூர்த்தவடிவ வுபாசனையும், அமூர்த்தவடிவ வுபாசனையால் "அறிவேசிவம் அல்லது சிவமே அறிவு" என்னும் தத்துவ ஞானமும், தத்துவ ஞானத்தால் பிறப்பிற்கு மூலகாரணமான பந்தநீக்கமும், பந்தநீக்கத்தால் ஆநந்த வடிவமாக விளங்கும் மோட்சமு முண்டா மென்பது சுருதி ஸ்மிருதி புராணேதி காசங்களின் சம்மதமா மாகலின், மோட்சத்திற்குப் பரம்பராசாதனமாயுள்ள சகுணோபாசனை மோட்ச விருப்புடைய வொவ்வொருவரும் அத்தியந்த விசுவாசத்துடன் செய்தற்குரியதாம். விசுவாச மில்லா விடத்துத் தொடங்கிய காரியத்தை முடிவுபெறச் செய்தல் முடியாதாகலின், சகுணோபாசனை செய்பவர் அதனிடத்து அத்தியந்த விசுவாச முடையவரா யிருத்தல் வேண்டும். சகுணோபாசனையாவது விஷ்ணு, சிவன், கணபதி, பார்வதி, சூரியன் முதலிய மூர்த்தங்களுள் யாதாவதொன்றை மனத்தினிடத்து இடைவிடாது தியானஞ் செய்தலாம்.

ஈசுவரத்தியானஞ் செய்வதற்குப் பத்திகாரணமாம்; பத்திக்கு விசுவாசம் காரணமாம். பத்தியானது தியானஞ் செய்வதற்குப் பரமசாதனமா மென்பது சைவ பரமாசாரியர்களுள் ஒருவராயும் சிவசுப்பிரமணியக்கடவுளது அவதார மூர்த்தியாயுமுள்ள திருஞானசம்பந்த சுவாமிகள் "பத்திப்பேர் வித்திட்டே பரந்தவைம் புலன்கள்வாய்ப் பாலேபோ காமேகா வாய்ப் பகையறு வகைநினையா, முத்திக்கே விக்கத்தே முடிக்குமுக் குணங்கள்வாய் மூடா வூடா நாலந்தக் காணமு மொருநெறியாய்ச், சித்திக்கே யுய்த்திட்டுத்

திகழ்ந்தமெய்ப் பரம்பொருள் சேர்வார் தாமே தானுக்செயுமவ னுறையுமிடம்'' என்று திருவாய்மலர்ந்திருப்பதனுல் செவ்வையாக விளங்கும்.

பத்தியாவது மனது பகவதாகாரமாவதாம். வயலிற்பாய்ந்த ஜலம் வயல்வடிவமாக விளங்குவது போலச் சித்தம் திருமால்முதலிய மூர்த்தங்களுள் யாதாவதொன்றினிடத்திற் சென்று அதன் வடிவமாக விளங்கவேண்டும். அவ்வாறு விளங்கிய விடத்திற்றான் பத்தி பூரணபாவத்தை யுடையதாம். உத்தானபாத மகாராஜனது புத்திரர்களுள் ஒருவனுன துருவன் தன் தந்தை தன்மீதுகாட்டிய வெறுப்பினுல் அவன் மீது வெறுப்படைந்து, தனதன்னையாகிய சுநீதியினிடத்துத் தவஞ்செய்ய வுத்தரவு பெற்று வனத்திற் சென்று சர்வவியாபகத்துவமும், சர்வஞ்ஞத்துவமும், சர்வசக்திமத்துவமும், நிஷ்களத்துவமும், சர்வப் பிரேரகத்துவமும், சர்வாத்மகத்துவமும், சர்வ சுதந்தரத் துவமும், சர்வேசுவரத்துவமும் உடைய நாராயணனை நோக்கித் தவஞ்செய்தபோது, நாராயணன் பிரத்தியட்ச மாகத் துருவனுக்கு முன் எழுந்தருளிவந்து ''அன்பனே! நீ விரும்பிய வரத்தைக் கேள்'' என்று திருவாய்மலர்ந்தருளிய சமயத்தில், துருவன் தான் தியானஞ் செய்த விதமாகவே நாராயண மூர்த்தியைத் தரிசித்து நற்கதியடைந்தான் என்று புராணங்கூறுவதால், தியானஞ் செய்வதி னியல்பு செவ்வையாக விளங்கும்.

பத்தியினுல் தியானமும், அதனுல் மனவடக்கமும், அதனுல் விவேகமும், அதனுல்போகத்தில் அருவருப்பும், அதனுல்மனோவிருத்திகள் (எண்ணங்கள்) அடங்குதலும் அதனுல்மோட்சவிருப்பமும், அதனுல் சற்குருசேவையும், அதனுல் தத்துவோப தேசமும், அதனுல் மெய்யுணர்வும், அதனுல் சீவன் முத்தியு முண்டா மாகலின், பத்தியை இடைவிடாது மேற்கொண்டொழுகுதல் வேண்டும். பத்தியேமுத்திக்குக் காரணமாமென்பது பத்தியினிடத்து விசுவாச முண்டாக்குதற் பொருட்டாம். உண்மையான பத்தி யாரிடத்திருக்கின்றதோ அவர்தாம் ஞானசாஸ்திர விசாரத்திற் குரியவராவர். பிறர் தம்மைப் பத்திமான்களென்று கருதும்படி வெளிவேஷத்தினுல் பத்தியுடையவரைப்போலக் காட்டிக்கொள்வது ஒருபோதுங்கூடாது. மாணிக்கவாசகர் ஜீவன்முத்தரானது பத்தியி

னுலா? ஞானத்தினுலா? ஞானத்தினு லென்பதை அவர் சரித்திரம் நன்கு விளக்க வில்லையா?

(தியான காலத்தில்) விருப்பு வெறுப்பு முதலியவற்ருல் சித்தங்கலங்குத லென்னும் க்ஷோபமும், (தியானத்தில்) நிலைபெருது மனம் பராமுகப் படுதலென்னும் விட்சேபமும், நித்திரை சோம்ப லென்னும் மூடமும் இல்லாது, இந்திரிய நிக்கிரகம், சந்தோஷம், தத்துவவிசாரம், சாதுசங்கம் என்னு மிந்நான்கையு முடையவரா யிருத்தல் வேண்டும். இந்திரிய நிக்கிரகமுதலிய நான்கும் முத்தியுலகத்துள்ள வாயிற்குக்காவற்காரர் போல்வனவாம். இந்நான்கையு முரிமையாகப் பெற்றவரே முத்தியுலகிற் செல்லு மியல்புடையவராவர்.

பலிச்சக்ரவர்த்தியின் புத்திரர்களுள் ஒருவனுன பாணுசுரனது கோட்டைவாயிலை மகாதேவர் தமது மக்களோடும் சேனையோடு மிருந்து காத்துவந்தனர் என்று புராணங் கூறுவதால், பரமேசுவரன் பக்தர்களிடத்து மிகுந்த பிரீதியுடையவனு யிருக்கின்ருனென்பது பெறப்படுகின்றது. சுந்தரமூர்த்தி சுவாமிகள் செப்பியவாறு பரவையார் வீட்டிற்குத் தூதாகப் பகவான் சென்ருரென்பதை நோக்குமிடத்துப் பத்தியுடையாரே பரமசம்பத் துடையவராவரென்பதுவிளங்கும். இதனுலன்ரே ஜடத்தை வெறுத்துத் தன்னிலை நின்றநம்மாழ்வார் "பத்துடை யடியவர்க் கெளியவன்" என்று கூறியருளினுர்.

எல்லாமாய் அல்லவுமாயுள்ள பரமேசுவரனை யடையும்வழி இருவகைத்தாம். அவ்விரண்டனுள், முன்னது "இருள்சேரிருவினையுஞ் சேரா விறைவன், பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு" என்று பொய்யில் புலவராகிய திருவள்ளுவர் கூறியவாறுபரமேசுவரனது புகழைக்கூறித் துதிசெய்தலாம்; பின்னது ஷை புகழையிகழாக்கி நிந்தித்தலாம். துதிசெய்து நற்கதியடைந்தவர் பிரகலாத வாழ்வார் முதலியவர்களாவர்; நிந்தித்து நற்கதியடைந்தவர் இரணியன், இரணியாக்ஷன், இராவணன், கும்பகர்ணன், கஞ்சன், சிசுபாலன், பாணுசுரன் முதலியவர்களாவர். காளமேகம்போன்ற கருநிற முடைய கண்ணபிரான் பாரதயுத்தத்தில் யான்படையெடேனென்று துரியோதனனுக்குக் கூறிய வுறுதிமொழி தவறிப்போமாறு (பாரதயுத்தத்தின்) மூன்ருநாள் சண்டையில் பீஷ்மாசாரி போர்

புரிய, கண்ணபிரான் பீஷ்மாசாரியைக் கொல்லச் சக்ராயுதத்தை யெடுத்துத் தேரினின் றிறங்கி ஒடி வந்தபோது அவர் தமது தேரினின்றிறங்கி யெதிரே வந்து "பொன்னிறத்தோன் பொற் கண்ணன் கஞ்சன் பொருதிறல்சேர், தென்னிலங்கை மன்னன் சிசுபாலன்-மின்னுபுகழ், ஆயிரந்தோள் வீரனுட னன்று நீ கொன்றருளத், தாமிருந்து செய்தார் தவம்" என்றுகூறியதனல் பகவானை யிடைவிடாது நிந்தித்தவர்களும் நற்கதியடைவா ரென்பது இனிது விளங்கும். கடவுளை நிந்தித்தலையே மேற்கொண்டு மற்றொன்றைப் பற்றி நினையாதிருப்பவர் கடவுளையே தியானித்திருப்பவராவர். இதனைக் கண்டாகர்ணன்கதை யுறுதிப்படுத்துவதாம்.



## 9. நிலையாமையறிந்தால் நிலைபெறல் வருமெனல்.

(27 - 2 - 11).

மக்களுக்கு வயது நூறென்பது சாதாரணமாகயாவரு மறிந்த விஷயமாம். ஒருவன் நூறுவருஷம் பிழைத்திருப்பானுயின், அவனுக்கு ஐம்பதுவருஷம் உறங்குங்காலமாகவும் ஏனைய ஐம்பதுவருஷத்திற் பாதிபால்யமாகவும் வயோதிக மாகவும் போம்;மற்றைப் பாதியோவெனின், இடையிடையே நேரிடும்நோய்களாலும், அவற்றையொழிக்க முயலுவதாலும், விருப்பு வெறுப்புக்களால் துக்கமடைவதாலும் ஒழியும். இவ்வாறாக வொழியும் வயதினுல் மக்கள் சுகமடைவது எவ்வாறும்? நூறுவயதுடைய மக்களுக்கே சுகமுண்டாவதில்லையாயின், அவ்வயதிற் குறைந்த மக்களுக்குச் சுகம் எவ்வாற்றாலுண்டாகும்? ஒருவன் எத்தனை வருஷம் பிழைத்திருப்பினும்அதனுல் அவனுக்குத் துக்கமே யுண்டாவதன்றி உண்மையானசுகம் ஒருபோது முண்டாவதேயின்றாம். துக்கமானது சுகப் போர்வையைப் போர்த்துக் கொண்டு நம்மை யேமாற்றுகின்றது; அதனுல் நாம் ஏமாந்து போகின்றோம். நாம் உண்மையான சுகத்தைப் பெறுவோமாயின், பிறந்திறக்குந் தொழிலை மேற்கொண்டு அல்லலடையாது எப்போதும் ஒரு தன்மையா யிருக்கும் நிலையைப் பெறுவோம்.

மேலே எறிந்தகல் தவறாது கீழேவிழுவது போலவும் கிழக்கே உதயமான் சூரியன் தவறாது மேற்கே அஸ்தமிப்பது போலவும்

நாம் தவறாது மரணமடைவோம். எதுதவறினும் மரணந்தவறுவதில்லையாதலின், மரணத்திற் கேதுவான ஜனனம் வாராத வழியை விரைந்து நாடுதலே ஒவ்வொரு மனிதனுக்கும் முக்கியமான கடமையாம். 'முடிசார்ந்த மன்னரு மற்றுமுள் ளோரு முடிவிலொரு, பிடிசாம்ப ராய்வெந்து மண்ணாவ துங்கண்டு". என்றுபெரியார் திருவாய்மலர்ந் திருப்பதைக் கவனியாது கெடுகின்றோம். அதிகாரத்தாலும், ஆண்மையாலும், பொருளாலும், பிறவாற்றாலும் மிக மேன்மை யுற்றவர்களும் இறந்தார்களே யன்றி, உயிரோடிருந்தார்க ளென்பது பெறப்படவில்லை. அறியாமையினால் அவர்கள் இறந்து போனார்கள். தேர்ச்சியுள்ளவயித்தியர், "தேவாமிர்தம்" போன்ற மருந்து, எண்ணக் குறைவுபடாத செல்வ முதலியவற்றை யுடைய நாம் எப்படி யிறப்போ மென்று நினைப்பது அறியாமையிலும் அறியாமையாம். மிகவும் வயது முதிர்ந்த ஒருகிழவனை நோக்கி ஐயா! உன்னுடைய தாய், தந்தை, சகோதரர், மித்திரர் முதலியோ ரிப்போ தெங்கே யிருக்கிறார்க ளென்று கேட்டால், அவன் அவர்கள் உயிரோடிருக்கிறார்களென்று சொல்லுவானோ? நம்முடைய வாழ்நாள் ஆற்றங் கரையிலுள்ள மரம்போல அஸ்திரமாயிருத்தலின், நாம் வாழ்நாளின் அஸ்திரத்தன்மையை அடிக்கடியெண்ணி நல்லனவற்றையே செய்யப் பழகல் வேண்டும்.

நம்மால் சுகானுபவத்திற் குரியதென்று நினைக்கப்படுகின்ற ஒவ்வொரு பொருளும் நம்மை விட்டு நீங்கும்போது "போனபிசாசு சும்மாபோகாது புளியமரத்தையு மொடித்துப் போயிற்று" என்னும் பழமொழிக் கிணங்க, ஏதாவதொருபெருந்துன்பத்தைத் தந்தே போகும். எப்பொருளிலும் எனது என்னு மபிமானங் குறைந்துவரப் பெரியாரை யடுத்துத் தகுந்த சாதனஞ் செய்துவரல்வேண்டும். யான் பருத்திருக் கின்றேன், அழகா யிருக்கின்றேன், பலத்திருக்கின்றேன் என்றற் றொடக்கத்தனவாகச் சொல்லப்படும் சரீரமும் நமக்குச் சொந்தமாவ தில்லை. இஃதெப்போதும்பஞ்சபூதத்திற்கேசொந்தமானதாம். நன்றாகவிசாரித்துப் பார்க்குமிடத்து எதுவும் நமக்குச் சொந்தமாவதின்றாம். பிறனொருவனுக் குரிய பொருளை யெனதென்று சொந்தம் பாராட்டித் துன்பக்கடலில் மூழ்கிக் கரையேற வறியாது பரதவிக்கும் அறிவிலியைப் போல், நாம் பூதங்களுக்குச் சொந்தமாயுள்ள உடல் பொருள்களை 'எனது' என்று சொந்தம் பாராட்டிப் பிறவிக்கடலில் விழுந்து துறைதெரியாது துன்புறுகின்றோம்.

பிறனது பொருளை அவன் அறியாதபடி வஞ்சித்துக் கொள்ளுதல் களவெனப் படுகின்றது. களவு செய்பவன் கள்ளன் அல்லது திருடன் என்று சொல்லப் படுகின்றான். ஞானசாஸ்திர வாயிலாக யானென்பது இத்தன்மையதெனவும் எனது என்பது இத்தன்மையதெனவுந் தெரிந்தோ னொருவன் மீண்டும் தானல்லாத சரீரத்தை யான் எனவுந் தனதல்லாத பொருளை எனது எனவுங் கருதுவானாயின், அவன் ஒருவகையான திருடனே யாவன். பூதங்களுக்குச் சொந்தமான உடல் பொருள்களை யான் எனது என்று கருதுதல் நியாயமாமோ?

"சென்றநா ளெல்லாஞ் சிறுவிரல்வைத் தெண்ணலாம், நின்றநாள் யார்க்கு முணர்வரிது" என்று நீதிநூல் கூறுவதை யுற்று நோக்குவோ மாயின், இதுவேண்டும், அதுவேண்டும் என்னும் விருப்பினாலும், இது வேண்டாம் அது வேண்டாம் என்னும் வெறுப்பினாலும் பலவகையான செயல்களைப்புரிந்துபலவகையான எண்ணங்களால் வருந்தமாட்டோம். (சுடாத) மட்பாத்திரம் தன்னிடத் தூற்றிய நீரால் கரைந்து கொண்டு வருவது போல நமது தேகமும் பிராரத்த போகானுபவத்தால் முடிவை யெதிர்நோக்கி நிற்கின்றது. இதனைக் கருதுவோமாயின், ஒருகணப் போதேனும் அவலமான காரியங்களைச் செய்வோமா?

ஆகாரம், நித்திரை, பயம், மைதுன மென்னுமிவை மக்களுக்கும் பசு பட்சி முதலிய வற்றிற்கும் பொதுவான தருமமாம். அவ்வாறாயினும், மக்கள் பசு முதலிய வற்றினும் மேன்மையுடையவராயிருத்தற்குக் காரணம் மனவுணர்வாம். செவிமுதலிய வறிவோடுமனவுணர்வு முடையவரா யிருக்கும் நாம் உண்பதும் உறங்குவதுமாகிய தொழிலையே மேற்கொண்டு பரலோகசாதனத்தைத் தேடாது போவோமாயின், நமக்கும் பசு முதலிய வற்றிற்கு முள்ளபேதம் ஒன்று மில்லை யல்லவா? பிறப்புப் பிணி மூப்பு முதலியவற்றா லுண்டாகுந் துன்பத்தைக்கருதுகின்றவர் காமாந்தகாரத்திற் சென்று கவலை யுறுவ தின்றாம்.

சுகதுக்கங்களால் மொத்துண்டு வருத்த முறாத பிராணிகளில்லை யாதலின், இவற்றிற்குக் காரணமொன் றிருத்தல் வேண்டும். அவை நல்வினை, தீவினைகளாம். நல்வினை தீவினைகள் நம்மாற் செய்யப்பட்டன வாதலின், அவற்றால் வரும் சுகத்திற்கும் துக்கத்திற்குங் காரணம் நாமேயாம்.

நமக்குச் சுகானுபவமும் துக்கானுபவமும் மற்றவர்களாலுண்டாயினவென்றெண்ணுமிடத்து முறையே அவர்மீது விருப்பும் வெறுப்புமுண்டாகின்றன. கருப்பு, சிகப்பு முதலியவற்றையறிதற்குக் கண் நேர் சாதனமாம்; ஆலோகம் (ஒளி) பரம்பரா சாதனமாம்; அதுபோல, சுகத்தோற்றத்திற்கு நல்வினை நேர் சாதனமாம்; நல்லுண்டி முதலியன பரம்பரா சாதனமாம். துக்கத்தோற்றத்திற்குத் தீவினை நேர் சாதனமாம். நஞ்சுண்டல் முதலியன பரம்பரா சாதனமாம். வினை விளைவு இவ்வாறாக விருக்கின்றதென்பதை யறிந்தவர் ஒருபோதும் விருப்பு வெறுப்பின் வசப்பட்டு மயங்குவதில்லை.

குணமே யுள்ளவரும், குற்றமே யுள்ளவரும் எக்காலத்திலுமிலராகலின், எவரையாவது இவரே நல்லவர், இவரே தீயவர் என்று வரையறுத்துக் கூறுதல் முடியாது. ஆனால், நாம் குணம் மிகுதியாக விருப்பவரை நல்லவரென்றும், குற்றம் மிகுதியாக விருப்பவரைத் தீயவரென்றுங் கூறுகின்றோம். குணம் மிகுதியாக விருப்பவரிடத்துக் குற்றங் கண்டவிடத்து அதை மனதிலடக்கிக் கொள்ள வேண்டுமே யல்லாது பிறரிடத்துக் கூறலாகாது. இதனை யறிவிக்க வேண்டியன்றோ திருப்பாற் கடலிலுண்டான நஞ்சைப் பரமேசுவரன் கண்டத்தி லடக்கி நீலகண்டனென்னுந் திருநாமத்தை யுற்றான்.

கடவுள் ஆணுமன்று, பெண்ணுமன்று, அலியுமன்று, பெரிதுமன்று, சிறிதுமன்று என்றற் றொடக்கத் தனவாகச் சாஸ்திரங்கள் கூறுவதால், கடவுள் சித்வடிவமென்பது பெறப் படுகின்றது. சித்வடிவமாயுள்ள கடவுளை யார் எவ்வாறு பாவித்து வணங்கினும் பயன் தவறாது சித்திக்கும்.



## 10. ராஜயோகம்பெறும் நன்னெறி கிளத்தல்.

(6 - 3 - 11.)

எந்தக்காரியமும், காரணமும் பிரயோஜனமுமின்றி யுண்டாவதில்லை யென்பது காரணகாரியங்களின் பாகுபாட்டினை யுணர்ந்தாரியாவருங் அங்கீகரித்த விஷயமாம். உலகம் காரியவடிவமாகவிருத்தலின், அதற்கொருகாரணமும் அதனது பயனைப் பெறுபவருமத்

யாவசியகமாக விருத்தல்வேண்டும். ஒவ்வொரு காரியத்திற்கு மத்தியாவசியகமாக முதற்காரணமும் நிமித்தகாரணமு மிருத்தல்வேண்டுமாதலின், உலகமாகிய காரியத்திற்கும் அத்தியா வசியகமாக முதற்காரணமும் நிமித்தகாரணமு மிருத்தல் வேண்டும். கடவடிவகாரியத்திற்கு மண்ணாகிய முதற்காரணமும் குலாலனாகிய நிமித்த காரணமும் வெவ்வேறாக விருத்தல் போல உலகவடிவ காரியத்திற்கு முதற்காரணமும் நிமித்தகாரணமும் வெவ்வேறாக விருப்பன வன்றாம். பிழைத்திருக்குமுடம்பின்கண் மயிருண்டாவதற்கும் நகமுளைப்பதற்கும் பிறவற்றிற்கும் அவ்வுடம்பே முதற்காரணமும் நிமித்தகாரணமுமாயிருத்தல் போல உலகவடிவ காரியத்திற்கும் பரமேசுவரன் முதற்காரணமும் நிமித்த காரணமுமா யிருக்கின்றான். அப்பரமேசுவரன் ஜீவகோடிகள் தத்தமதுவினைகளுக்கேற்றவாறு சுகதுக்கவடிவ போகங்களை யனுபவிக்கும்படி உலகைப்படைத்தானாதலின், ஜீவகோடிகளுள் ஒருவகுப்பாய் இது நன்று இது தீதென்றுப் பகுத்தறிதற் கேற்ற மனமுதலிய கரணங்களைப் பெற்றுள்ள நாம் அப்பரமேசுவரனது கருணையைப் பூரணமாகப் பெறுதற் குரிய சாதனங்களைமேற்கொண் டொழுகுவோ மாயின், இனி உலகில்வந்து பிறந்து பிறந் திறக்கும் உத்தியோகத்தை நிச்சயமாக விட்டு, அல்லலற் றிருப்போம்.

"சின்மாத்திரமா யுள்ள வெறுஞ்சிவன்" என்றும், "நன்றாய் ஞான கனமாகி" என்றும், "உரையுணர் விறந்து நின்றுணர்வோ ருணர்வே" என்றும், புலன்கள் பதினான்கு மறியாவறிவை" என்றுஞ் சாஸ்திரங்கள் கூறுவதால், பரமேசுவரனது வடிவம் கேவலம் சித் (அறிவு) வடிவமென்பது பெறப்படுகின்றது. கேவலம் சித் வடிவமாயுள்ள பரமேசுவரன் சித்திரக்காரனிடத் தடங்கியிருக்கும் சித்திரமெழுதுஞ் சத்தியைப்போன்று தன்னிடத்தடங்கி யிருக்கும் மாயாசத்திஜீவர்களதுபோகானுபவத்திற்கேதுவாகவெளிப்பட்டபோது உலககாரணமானான். உலகத்திற்குப் பரமேசுவரன் சித்பிரதானத்தால் நிமித்த காரணமாகவும் சடப்பிரதானத்தால் முதற்காரணமாகவு மிருக்கின்றான். இங்ஙன மிருக்குங் காரணத்தாற்றான் எல்லாம் அவனது வடிவமென்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. எல்லாம் பரமேசுவரனது வடிவமென்று காண்பவனுக்கு அவன் அவள் அது என்னும் வேற்றுமைதோன்றுவதின்றாதலின், அவன்

இது வேண்டும் அதுவேண்டாமென்னும் விருப்பு வெறுப்புக்களால் வருந்துவதேயின்றும்.

நாம் பரமேசுவரபத்தி வாயிலாகத் தத்துவஞான மடைந்து அதனல் சிந்தையும் மொழியுஞ் செல்லா நிலைமையதாய மோட்ச சுகத்தையடைய முயலாது, மேகத்திற்றோன்றி விரைந்து கெடும் மின்னலைப்போல விரைந்துகெடுமியல்பினதாயுள்ள உடம்பின்கண் யானென்னுமபிமானத்தைச்செய்து அதுகாரணமாக மனைவிமக்கள் முதலியோரிடத்தும் வீடு காணி முதலியவற்றினிடத்தும் எனது என்னு மபிமானத்தைப் பூண்டு வீணே வாழ்நாளைப் போக்குகின்றோம். பரமேசுவரன் உலகைப்படைத்ததன் காரணத்தைச் செவ்விதாக வாராய்ந்து பார்ப்போமாயின், ஒருபோதாவது அவ்வாறு செய்வோமா? பரமேசுவரபக்திசெய்தலிற் பயன்படாது கழிந்த நாட்களுக்காக வருந்தினு லன்றோ இனி யுள்ள நாளையாவது பயனுள்ளநாளாகச் செய்வோம்.

பரமேசுவரனைக் கேவலம் கல்வியறிவினு லடைய முடியாது. கல்விகரையில வாதலின் சுற்கவேண்டியவற்றை யெல்லாம் முற்றுங் கற்றல் நம்மனோர்க்கெவ்வாற்றானு முடியாது; கலைமடைந்தையும் படித்துவருகிறுள் என்றுசொல்லப்படுமாயின், கல்வியறிவில் நாம் எம்மாத்திரமாவோம். கற்கவேண்டியவற்றை யெல்லாங் கற்ற பிறகு ஈசுவரபத்தி செய்வோமென் றெண்ணுவது விபரீத புத்தியே யாகும். நம்முடைய வாழ்நாள் நீர்க் குமிழிபோல நிலையற்றதாகலின், அன்று செய்வோமென் றெண்ணுது இன்றேபத்திசெய்ய வேண்டும். ஈசுவரபத்தி மிகுதற் கேதுவான தேவாரம், திருவாசகம், திருவாய்மொழி, பட்டினத்தடிகள் பாடல், தாயுமானவர் பாடல், திருவருட்பா முதலிய நூல்களைப் படித்தலும் வேண்டும். அவற்றின் பொருளுணர்ச்சிக் கேதுவான இலக்கண நூல் தருக்கநூல்களைப் படித்தலும் தவறுகாது. லௌகிக விஷய சம்பந்தமான நூல்களையே படித்து இம்மைப் பயனென்றையே எதிர்பார்ப்பவன் எவ்வளவு மேன்மை யுடையவனுயினும் அவன் கேவலம் ஜடனேயாவான்.

கடவுள் உண்டு; நல்வினை தீவினையுண்டு; அவற்றின் பயனுன சுகதுக்கங்களுண்டு; தத்துவஞானத்தைப் பெறும விறந்தவர்க்குப் பிறப்புண்டு; வாழ்வெல்லாம் சொப்பனம்போல மாயமாய்ப்போவதுண்டு என்று ஐயந்திரிபின்றி யறிந்தவன் இம்மைப்பயனென்றை

யே கருதி என்றுமிடர்தருதலையேயியல்பாகவுடையசெல்வத்தைத் தேடுதலில் சித்தமுடையவ னுவனோ? செல்வத்தால் வாஸ்தவமான சுகத்தைப்பெற்றவரொருவராவதுண்டா?ஒருவனுக்கு நாள்தோறும் செல்வமிகுவது நாள்தோறும் நோய் மிகுவதுபோலாவாம். அதிகச்செல்வமுடையவர்களுக்கன்றோ ஆபத்து அடிக்கடி வருகின்றது.

"மையாடுங் கண்ணியு மைந்தரும் வாழ்வு மனையுஞ் செந்தி, பையாநின் மாயை யுருவெளித் தோற்ற மகிலத் துள்ளே,மெய்யாயிருந்தது நாட்செல நாட்செல வெட்டவெறும், பொய்யாய்ப் பழங்கதையாய்க் கனவாய் மெல்லப் போனதுவே" என்றுபட்டினத்தடிகள் திருவாய் மலர்ந்தருளியிருப்பதைச்சிறிது கவனித்துப்பார்ப்போமாயின் உலகத்தினியல்பு நன்குவிளங்கும்.

உலகத்தி னிலையாமையை யுணர்ந்தவர்களுக்கே கல்வி செல்வம் போகம் அதிகார முதலியவற்றின்கண் அருவருப்புண்டாம். உலகம் என்றும் நிலையாயிருப்பது,கடவுளிருந்தால் பார்த்துக்கொள்வோமென்று கருதுகின்றவர் பழிபாவங்களுக் கஞ்சாது தீவினையைப் புரிவர். அவர்க்கு ஒருபோதும் மன வொருமை யுண்டாவதில்லையாம்; ஆதலின், அவர் மறுமையிலே யன்றி யிம்மையிலும் துன்பக்கடலில் மூழ்கித் துறைதெரியாது திகைப்புறுவர். இவர் தோற்றத்தால் பெரியாரைப் போலக் காணப்படினும் படுவர். இவர்பா லணுகுதல் ஒருபோதுங் கூடாது.

மேகத்திலிருந்து பூமியில் விழுகின்ற நீரின்பெருக்குச் சமுத்திரத்தையே யடைவதுபோல மதவாதிகள் பற்பலவிதமாகச் செய்யும்வணக்கமும் யாதொருபெயரும்யாதொரு ரூபமுமுண்மையாகவின்றிச் சின்மாத்திரமாயுள்ள கடவுளுக்கேயாம்.எனதுகடவுளே மெய்த்தேவன், உனது கடவுள் பொய்த்தேவன், நான்செய்யும் வணக்கந்தான் கடவுளைச்சேரும், நீ செய்யும்வணக்கம் கடவுளைச்சேராது என்று வீணேபேசியல்லலுறாது எல்லாம் கடவுள் வடிவமாதலின், கடவுளென்று பாவித்து வணங்குகின்ற எவ்வுருவத்தின் வணக்கமும் பயன்படா தொழிவதில்லை யென்றுணர்ந்து ஒருமதவாதியையும் நிந்தைபுரியாது திரிகரணசுத்தியாகப் பரமேசுவரனை வணங்கியும் வாழ்த்தியும் தியானித்தும் வருகின்றவர்களது சித்தந்தான் சிதம்பரமாகவிளங்கும். எவரது சித்தம் சிதம்

பரமாக விளங்குகின்றதோ அவர்தாம் பேரானந்தக் கடல்வடிவ மாகவிளங்குவர்.

பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம், சூரியன், சந்திரன், சீவனென்னும் எட்டுருவமாவப் பரமேசுவரா னிருக்கின்றனென் றுணர்ந்தவர்க்கு "எங்குஞ் சிதம்பரம் பொங்கிவழிகின்றது" என்று பெரியா ரருளியதன்பொருள் செவ்வனே விளங்கும். எல்லாம் பரமேசுவரரூபமாயின், கொள்ளுவதுயாதாம்? தள்ளுவது யாதாம்? ஒன்று மின்றாம். கொள்ளுவதுந் தள்ளுவதுமின்றி யிருப்பவருக்கே சித்தசாந்தியாம் சிதம்பரம் தேஜோமயமாய் விளங்கும்.

எல்லாம் பிரஹ்மம் அல்லது சிவம் என்னுங் காரண நாட்டத்தைப்பெற்று இது, அது என்னுங்காரிய நாட்டத்தை விட்டால் ராஜயோகம் நலம்பெற வாய்க்கும்.



## 11. விசுவாசமேவர்க்கு மேனிலை தருமெனல்.

(13 - 3 - 1911).

"பிறவாதே தோன்றிய பெம்மான் றன்னைப் பேணாதா ரவர் தம்மைப் பேணா தானை" என்று திருநாவுக்கரசு சுவாமிகள் திருவாய் மலர்ந்திருத்தலால், நாம் பரமேசுவரனை யடையும் வழியாலடைந்தாற்றான் அவன் நம்மை யாட்கொள்வான்; அவ்வாறடையாவிட்டால் அவன் ஆண்டருளா னென்பது நன்குவிளங்கு கின்றது. பரமேசுவரனை நாம் அடையும்வழி திரிகரண சுத்தியாக அவனை வழிபடுதலேயாம். திரிகரண சுத்தியாக வழிபாடு செய்யாது பிறர் மதிக்கும் பொருட்டாவது பிறர் பொருளைக் கவருதற் பொருட்டாவது செய்யும் வழிபாட்டினைப் பரமேசுவரன் ஏற்றுக் கொள்வதே யின்றாம். இது பட்டினத்தடிகள் "கையொன்று செய்ய விழியொன்று நாடக் கருத்தொன் றெண்ணப், பொய்யொன்று வஞ்சக நாவொன்று பேசப் புலால்கமழு, மெய்யொன்று சாரச் செவியொன்று கேட்க விரும்புமியான், செய்கின்ற பூசையெவ் வாறுகொள் வாய்வினை தீர்த்தவனே" என்றருளியிருத்தலால் வெள்ளிடை மலைபோல் விளங்கும்.

அன்பா லகநெகிழ்ந் தின்புருவாகி யறிவாற் சிவமாய் விளங்கிய மணிவாசகப்பிரான் "தாழச்செய் தார்முடி தன்னடிக்கீழ்

வைத் தவரை விண்ணோர், சூழச் செய்தான்" என்றருளியதைக் கருது மிடத்துப் பரமேசுரனை மெய்யன்போடு வழிபாடு செய்பவர் இந்திரன் முதலிய விறையவ ரியாவரும்வணங்கும் பெருஞ் சிறப்பினை யடைவ ரென்பது பெறப்படுதலின், "கல்லாப் பிழையுங் கருதாப் பிழையுங் கசிந்துருகி, நில்லாப் பிழையு நினையாப் பிழையுநின் னஞ்செழுத்தைச், சொல்லாப் பிழையுந் துதியாய்ப் பிழையுந் தொழாப்பிழையும், எல்லாப் பிழையும் பொறுத்தருள் வாய்" என்று மனமுருகி வாய்குழறத் துதிப்பவரது மேன்மையை யாவர் அளவிட்டுக் கூறலமையும்.

"பொய்யுடை யார்க்கரன் போலக னும்மகன் ஞற்புணரின், மெய்யுடை யார்க்கர னம்பலம் போல மிகநணுகும்" என்றுமேற்படி சுவாமிகள் கூறியிருத்தலால் பொய்வளரு நெஞ்சினை யுடையவர் பரமேசனை யடைதலில்லை யென்பதும், மெய்வளரும் நெஞ்சினை யுடையவர் தவமுதவனை யடைதல் உண்மை யென்பதும் சித்தித்தலால், உண்மையான வொழுக்க முடையவர்க்கே நன்னிலை வாய்க்கும். உண்மையான வொழுக்கத்தை யுடையவர்களோடு நேசங்கொள்ளுதல் ஒவ்வொருவர்க்கு மத்தியாவசியகமானதாம்.

சித்தம் பகவதாகார மாவதென்னும் பக்தி ஒருபூங்கொடி போல்வதாம். "மகாதேவ" என்னும் அட்சரங்கள் நான்கும் அதன்கணுள்ள துளிர்கள் போல்வன வாம். விசுவாசமென்பது அக்கொடி வளர்தற் பொருட்டுப் பாய்ச்சும் ஜலம் போல்வதாம். சற்குரு முதலியோ ரிடத்துள்ள சிரத்தை விசுவாசமெனப்படும். சிரத்தையோடு பரமேசுவர பத்தி செய்பவர் எப்போதும் "மகாதேவ, மகாதேவ" என்று கூறிக்கொண்டே யிருப்பவர். விசுவாச மில்லாவிடத்துப் பத்தி முதலியன சித்தியாமையின், பிரயத்தன பூர்வகமாகச் சிரத்தையைச் சம்பாதித்தல் வேண்டும். உண்மையான விசுவாசத்தோடு பத்திசெய்பவர் இலௌகிக வியாபார மொழிந்துள்ளபோது "மகாதேவ, மகாதேவ" என்னுஞ் சித்தனையையே யுடையவரா யிருப்பவர். யாதேனு மொரு வார்த்தை அல்லது செயல் வாக்கிலாவது காயத்திலாவது நிகழும்போது அதற்கு மனம் நிமித்த காரணமாகும். மனம் நினைப்பதையே வாக்காற் சொல்லுதலும் காயத்தாற் செய்தலும் இயல்பாகவிருத்தலின், "மகாதேவ,மகாதேவ" என்றிடைவிடாது

கூறுகின்ற வர்களது சித்தம் 'மகாதேவ' ஆகாரமாகவே யிருக்கும். சித்தம் சிவாகாரவாகப் பெற்றவர்களுக்கே சிதம்பரம் (ஞானாகாயம்) சித்திக்குமென்பது ஞானசாஸ்திரங்களின் துணிபாகலின், "மகாதேவ, மகாதேவ" என் றிடைவிடா துச்சரித்துக் கொண் டிருத்தலும் திருசியானுவித்த முதலிய அறுவகைச்சமாதிகளுள் ஒன்றும். "வருகணத்து வாழ்ந்திடுமோ விழுமோ விந்த மலக்கூடென்று" உடம்பின் நிலையாமையினை யறிந்து "உள்ள போதேபா ருய்ய" என்று பெரியா ரருளியுள்ளதை மேற்கொண்டு 'மகாதேவ, மகாதேவ' என்று பூரண விசுவாசத்தோடு உச்சரித்துக் கொண்டிருத்தல் பிறவிக் கஞ்சுவோரது முக்கியக் கடமைகளு ளொன்றும்.

"குருவில்லா வித்தை குணந்தருவ தில்லை" என்பது பெரியார் வாக்கியமாதலின், எச்சாதனத்தையும் குருவின் வாயிலாகவே பெற்று அப்பியாசஞ்செய்தல் வேண்டும் குருவினைச் சாதிகுல முதலியவற்றை நோக்கியிகழுதல் ஒருபோதுங்கூடாது. குருவினைச் சாதிகுல முதலியன வில்லாத பரமேசுவரனுகப் பாவித்து வழிபாடு செய்து, அக்குரு மூர்த்திக்கு வழிபாடுசெய்யும் தம்மீது கருணை யுண்டாகுமாறு நடந்துகொள்ளுதல் வேண்டும். அவ்வாறு நடப்பவன் இம்மையிலேயே செம்பொருள் கண்டு (காரியகாரணங் கடந்த கடவுளைத்தரிசித்து) இனிப்பிறவாநிலையை யெளிதாக வெய்துவன். இந்நிலையை யடைவதற்கு முக்கியமாக ஆரம்பத்தி லிருக்கவேண்டிய சாதனம் விசுவாசமேயாகும். இதுபற்றித்தான் கைவல்லியநவநீதம் "மறைமொழி நம்பினுல் வீடுண்டே" என்று கூறிற்று.

ஒவ்வொருவனும் தத்துவ ஞானத்திறை்ற பெரியவனுக முயல வேண்டுமேயன்றி ஆடை, ஆபரணம், அதிகாரம், அருத்தம் (பொருள்) முதலியவற்ருல் பெரியவனுக முயல்வது கூடாது. "ஆயுள் நரை, பொருள், பாந்தவியமென்னுமிவற்ருல் ஒருவன் பெரியவனுகான்; தெரிந்தவனே நமகுப் பெரியவன் என்று ரிஷிகள் தருமத்தை யேற்படுத்தி யிருக்கிருர்கள்" என்று தர்ம சாஸ்திரங் கூறுவதால், நாம் எப்போதும் தத்துவஞான முடையவனையே பெரியவனுகக் கொண்டு, அவன் கூறியவாறொழுகுதல் வேண்டும். அவன் தத்துவஞானமுடையவனுகவிருந்தாலும், வயதால் நம்மிலும் சிறியவனுக விருக்கின்ருனே; அவனை யெவ்

வாறு பெரியவனாகக் கொள்ளுதலென்று கருதாதலை அறவே விட்டொழிதல் வேண்டும். முருகக்கடவுளிடத்துப் பரமசிவம் உபதேசம் பெற்றுக்கொண்டது வயதால் எவனும் பெரியவனாகான், தத்துவ ஞானத்தினாலேயே பெரியவனாவானென்பதை விளக்குதற் பொருட்டன்றோ?

குழந்தைப்பருவத்திலேயே தத்துவஞானம் பெற்றிருந்த ஆங்கிரசமுனிவரது புத்திரர் தமது பிதிர்க்களுக்கு வேத மோதி வைக்குங் குருவானார். அவர் வேதமோதி வைக்கும் போது அப்பிதிர்க்களைத் தத்துவ ஞானத்தினால் சிஷ்யர்களாகக் கருதிப் "பிள்ளைகாள்" என்றழைத்தார். அதனால், அவர்கள் சினங்கொண்டு அவரவ்வாறு கூறியதைத் தேவர்களிடத்திற்கூறி வருத்த முற்றார்கள். அதன் பொருட்டுத் தேவர்கள் ஒருங்கு கூடி யோசித்து தம்மிடத்திற் குறை கூறிக்கொண்ட பிதிர்க்களை நோக்கி, உங்களை அப்பிள்ளை அவ்வா றழைத்தது நியாயந்தான் என்று கூறினார்கள் என்று தரும சாஸ்திரங் கூறுவதால், தேசிகமூர்த்தி வயதாற் றம்மிற் சிறியவரா யிருப்பினும் அவரைச் சிறியவராகக் கொள்ளாது பெரியவராகவே கொள்ளல் வேண்டு மென்பது நன்கு விளங்கும்.

முந்திரிப்பழத்தின் கொட்டை அப்பழத்திற்கு மேலேயிருப்பதுபோல, சற்குருமூர்த்தி வாயிலாகத் தத்துவோபதேசம் பெற்றுச் சமாதிகூடித் தன்னிலையிற் பிறழாது நின்றவன் சோக மோகங்களுக் குட்படாது அவற்றிற்கு மேலாக விருப்பான். தத்துவ ஞானத்தின் பயன் சோகமோகமற்ற நிலையாகலின், சோக மோக மொழிதற் கேதுவான தத்துவ ஞானத்தைப் பெறுவதற்கு எவ்வாற்றானு முயலுதல் வேண்டும். புளியங்கொட்டை முதலியன புளியம்பழ முதலியவற்றுள்ளே கிடப்பனபோல, சம்சார சாகரத்துள்ளே மூழ்கிக்கிடப்பவன் மனிதப் பிறப்பெடுத்த தன்பயனை யெவ்வா றடைவன்? சப்தாதி விஷயங்களை நன்றாக வறிதற்கியைந்த செவி முதலிய விந்திரியங்களை யுடைய மனிதப்பிறப்பிலேதான் சுகதுக்கம், இலாப நஷ்டமுதலிய துவந்துவ மற்ற நிலையை யடைதல் முடியும். இந்நிலையினை யடைய முயலாது பராமுகமாகவிருப்பது பேதைமையினும் பேதைமையாம்.

நன்றாக யோசித்துச் செய்யுங் காரியம் முடியாமற் போவதில்லை யாகலின், எக்காரியத்தையும் நன்றாக யோசித்துச் செய்ய

வேண்டும். மனம் பராமுகப்படுதலையே யுடையதா யிருத்தலின், அதனை எவ்வாறு முகப்படுத்த வேண்டுமோ அவ்வாறு செய்யவேண்டும். "எறும்பூரக் கற்குழியும்" என்பது பழமொழியாகலின், ஆண்டவ னருளியபடி மனத்தை விஷயங்களின்தோஷதிருஷ்டி பூர்வகமாகத்தடுத்தால் அது மடங்கி நிச்சயமாக வொருமுகப்படும். ஒரு முகப்பட்ட மனமுடையவர்களுக்கே உலகுருவான பரமேசுவரன் குருமூர்த்தியாக வந்து கருணைபுரிவான்.



## 12. மனமொருமுகமாம் மார்க்கங்கூறல்.

(20 - 3 - 1911)

நாம் ஒவ்வொரு நாளும் சகலம் கேவலமென்னு மிரண்டு நிலையினைத் தவறு தடைந்து வருகின்றோம். சங்கற்ப (எண்ண)த்தோடுகூடிய நிலை சகலமும் அஃதற்றநிலை கேவலமுமாம். சாக்கிரம் (நனவு), சொப்பனம் (கனவு) என்னு மிரண்டவஸ்தையிலும் சங்கற்ப மிருத்தலின், அவ்விரண்டும் சகலமெனப்படும்; சுழுத்தியி (உறக்கத்தி)ல் சங்கற்ப மில்லாமையின் அது கேவலமெனப்படும். இச்சகல கேவலமென்னு மிரண்டவஸ்தையும் ஓய்வின்றி மாறிமாறி வருதலால் நாம் இவற்றின் வசப்பட்டு, யதார்த்த நிலையினைக் காண வகையறியாது திகைப்புற்று, விஷயவாசையால் வருத்த முறுகின்றோம். நினைவிறந்து நின்ற விடமென்னும் பாவனாதீத நிலையைச் சாக்கிராவத்தையின்கண் பெறுவோமாயின், யதார்த்தநிலை ஐயந்திரிபின்றி யுள்ளவாறு விளங்கும். அஃதுள்ளவாறு விளங்கினல் விஷயவாசையால் மொத்துண்டு வருந்துதல் ஒருபோது முண்டாகாது.

நினைவிறந்து நின்றவிடமென்னும் பாவனாதீதம் எளிதில் வாய்ப்பதன்று. ஈசுவரபத்தி, ஜீவகாருணியம், பாசவைராக்கியம், தத்துவஞானமென்னு மிந்நான்கையும் பூரணமாகப்பெற்றவர்க்கே அந்நிலை வாய்ப்பதாக விருத்தலின், அந்நிலையை யடைதற்பொருட்டு, ஈசுவரபத்திமுதலிய நான்கையும் பிரயத்தன பூர்வகமாக வத்தியாவசியகமாய்ச் சம்பாதித்தல் வேண்டும். இந் நான்கையும் சம்பாதித்த லின்றி விணே வாய்வேதாந்தம்பேசி எங்கும் ஈசனெனக்காணும் சகஜ சமாதியினைப் பெற்றிருக்கின்றோமென்பார்க்கு அப் பாவனாதீத நிலை வாய்ப்பதெவ்வாறும்?

மனம் செவிமுதலிய இந்திரியங்களின் வாயிலாகச் சப்தமுதலிய விஷயங்களிற்செல்லு மியல்பினதாகலின், அதை உள்முகப் படுத்தல் மலையைவில்லாக வளைப்பதுபோலாவாம். அதுஜன்மாந்ரப் பழக்கத்தால் விஷயாநந்தத்தையே சிந்தித்துக்கொண்டிருத்தலின் யாம் எவ்வளவு வருத்தமுற்று உள்முகப்படுத்தினும், உள்முகப் படாது வெளிமுகப்பட்டுப்போம். யோகாப்பியாசத்தினல் அதனை உள்முகப் படுத்தினும் அது நமது சோர்வையே எதிர்பார்த்திருந்து வெளிமுகப்பட்டுத் துன்பத்தை மிகுவிக்கும். அதனைப் பிரயத்தன பூர்வகமாக வுள்முகப் படுத்தல் பீப்பாயைக் குளமுதலியவற்றுள் அழுத்திப் பிடித்திருப்பது போலவாம். சப்தாதி விஷயங்கள் அநித்திய பதார்த்தமென்றும், துக்கசாதனமென்றும், நன்றாக வறிந்தவருடைய மனந்தான் விஷயத்தில் வெறுப்படைந்து, உள்முகப்படுந் தன்மையை யுடையதாம். மனம் விஷயத்தில் வெறுப்படைந் துள்முகப்படுவதற்குச் சித்ஜடவிசாரம் தக்கசாதனமாயிருத்தலின், அச்சாதனத்தை யவசியஞ் சம்பாதித்தல் வேண்டும்.

ஈசுவரபத்தியை மனம் வாக்குக் காயமென்னுந் திரிகரணத் தானுஞ் செய்யவேண்டும். (1) பூச்சிய (பூசிக்கத்தக்க) புத்தியின் மிகுதிப்பாட்டால் சித்தம் சற்குருமூர்த்தியருளியவாறு ஈசனது பலவடிவங்களில் ஒன்றனகாரமாகவேயிருப்பது மனத்தினற்செய்யும் பத்தியாம். (2) பஞ்சாட்சரஜபம், அஷ்டாட்சரஜபம் முதலிய ஜபங்களும், தேவார, திருவாசக, திருவாய்மொழி முதலிய வற்றின் பாராயணமும் வாக்கினற்செய்யும் பத்தியாம். (3) விரதம், உபவாச முதலியவற்றல் செவி முதலிய இந்திரியங்களைத் தத்தம் விஷயங்களிற் செல்லாவாறு தடுத்தல் காயத்தாற் செய்யும் பத்தியாம். இம்மூவகைப் பத்தியும் யாவரிடத்துப் பூரணமாக விருக்கின்றனவோ அவரது சித்தம் சுவரெறிபந்துபோலாகாது பச்சைமரத்தறைந்த ஆணிபோல ஸ்திரநிலையை யடையும்.

(1) பத்தினிப் பெண்கள், பத்தர்கள், தத்துவ ஞானிகளென்னுமிவர்களைப் பழித்தல், (2) வயிறு வளர்த்தற்பொருட்டு, பிறன் மனைவியை விரும்பி யொழுகுவோர், பெற்றதாயைக்காப்பாற்றாது மனைவி சொற்படி நடப்போர், பொய் கூறுவோர், கள்வர் குடியர் முதலியவர்களிடத்து ஈசுவர நாமத்தின் பெருமையை யெடுத்துக் கூறுதல், (3) ஒவ்வொரு நிமித்தம் பற்றி ஈசன்

ஒவ்வொருபெயரா லன்பரா லழைக்கப்படுகிறனென்பதையறியாது சிவன் பெரியவன், விஷ்ணு சிறியவன், விஷ்ணுபெரியவன், சிவன் சிறியவனென்று வேற்றுமைகொண்டு நிந்தை புரிதல், (4) அநாதி தாற்பரியமெனப்படும் வேதவாக்கியங்களில் விசுவாச மில்லாமை, (5) வேதத்தை யாதாரமாகக்கொண்டு மகாத்மாக்களியற்றிய சாஸ்திரங்களில் சிரத்தையில்லாமை, (6) இவரும் தாய்வயிற்றிற் பிறந்தவர்தாமே, இவர் சொல்வதெல்லாம் நம்பவேண்டுமோ, இவர் ஆகாயத்தி லிருந்தபடியே குதித்தனரோ என்று பலவா றெண்ணிச் சிவசொரூபமாந்தேசிக மூர்த்தியின் திருவாய்மொழி யில் நம்பிக்கையில்லாமை, (7) மகாதேவா, சங்கரா, பரமேசா, நாராயணு, கோவிந்தா, நரசிங்கா என்று கூறுவதால் என்ன பல னுண்டாகும்? அந்த நாமங்கள் ஸ்துதியை யறிவிப்பனவே யன்றி இகலோக பலத்தையாவது பரலோக பலத்தையாவது தருவன வல்லவென்னும் மயங்கியவறிவு, (8) (வைணவர்) ராம என்று கூறுமிடத்து ரா-என்பது பாவத்தைப் போக்குவதாயும், ம-என் பது அப்பாவம் வாராதபடி காப்பதாயு மிருத்தலின் ராம ராம என்று கூறும் நமக்கு என்ன பயமென்றுகருதி, கொலை களவு முதலியவற்றைச் செய்வதும், (சைவர்) "மகாதேவ" என்று கூறு மிடத்து அதன் நான்கெழுத்தும் அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்கு புருஷார்த்தத்தையும் தருவதாயிருத்தலின், 'மகாதேவ' என்று கூறும் நமக்கியாது தீங்கு நேரிடுமென்று மறைவாக மாமிசமுதலியவற்றை யுண்பதும் செய்யத்தகாதனவற் றைச் செய்வதும், (9) ஈசுவரநாம வுச்சாரணமொன்றே நமக்குப் போதும், அதனுலுண்டாகாத பயன் யாதிருக்கின்றது என்றெ ண்ணி இரந்தோர்க்கீதல், ஒரு பிராணியையும் புத்தி பூர்வகமாகக் கொல்லாதிருத்தல், மறந்தும் தீயனவற்றைத் தரும் சொற்களைச் சொல்லாமை முதலிய சற்கருமங்களை விடுதல், (10) கடம் படம் என்னும் பதம்போல், சிவா சங்கரா ராமா கோவிந்தா என்னும் பதமும் ஒன்றும்; இப்பதங்களுக்கு அப்பதங்களிலும் மேலாக வுள்ள விசேஷணம் யாதென் றெண்ணுதல் என்னும் இத்தோ ஷங்கள் வாராதபடி யார் திரிகரணத்தாலும் பத்தி செய்கிறரோ அவரே உண்மையான பத்தரெனப்படுவர். இத்தோஷங்களுள் ஒன்றுங் குறையாதிருப்பவர் தம்மைப் பத்தரென வேஷத்தால் பிறர்க்குக் காட்டுதல் அவாது பொருளை வஞ்சித்துக் கொள்ளுவ தற்கேயாம்.

நஞ்சினை நஞ்சாலும், இரும்பினை இரும்பாலும், அம்பினை அம்பாலும் கெடுப்பது போன்று அடிக்கடி உலகாகாரப் பட்டு வெளிமுகப்பட் டோடும் மனத்தை வைராக்கியத்தினாலும் தியானத்தினாலுங் கெடுக்க வேண்டும். உலகாகாரப் படுஞ் சங்கற்பம் அசுத்த சங்கற்பமெனப்படும். மனம் உலாகாகாரப் படுதற்குக்காரணம் விஷயவாசனையாம். இவ்விஷய வாசனை தீவிரதர வைராக்கியத்தோடு செய்யும் தியானத்தினாற்றான் சிறிது சிறிதாகக் குறையும். எவ்வளவிற் கெவ்வளவு அசுத்த சங்கற்பங் குறைகின்றதோ அவ்வளவிற் கவ்வளவு சுத்த சங்கற்பமிகும். சுத்தசங்கற்பமாவது மனம் எப்போதும் தியானஞ் செய்வதிலேயே தாற்பரிய முடைத்தா யிருத்தலாம். இச்சுத்த சங்கற்ப முடையவரது சித்தந்தான் உபசாந்தியினைப்பெற்றுப் பூரணபாவத்தைப் பெறும். "மக்களின் பந்த மோட்சங்களுக்கு மனமே காரணமாம். மனம் விஷயத்தைப் பற்றுவதே பந்தமாம்; அதினின்றும் நீங்குவதே முத்தியாம்" என்றமிர்தபிந்தோப நிஷத்துக் கூறுவதிங் கறியத் தக்கதாம்.



## 13. மந்திரஜபத்தின் மகிமையுரைத்தல்.

(27 - 3 - -1911.)

"மருந்தாகாத வேருமில்லை, மந்திரமாகாத வெழுத்துமில்லை" என்று பெரியோர்கள் கூறுவதால், ஒவ்வொரு மந்திரமும் ஒவ்வொரு நாமமென்றுகருதி,மனமொரு முகப்படுமாறு குருமூர்த்தியுபதேசித்த மந்திரத்தைச் சிரத்தையுடன் ஜபஞ் செய்தல் வேண்டும். ஜபிக்கும்போது குருமூர்த்திகூறியநியமப்படியே ஜபஞ்செய்தல்வேண்டும்; மனம் போனவாறாக ஜபஞ்செய்தல் ஒருபோதுங் கூடாது. சப்தகோடி மகாமந்திரங்கள் பெரியோர்களது அனுஷ்டானத்திலிருக் கின்றன வென்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. அவற்றுள், ஒவ்வொன்றும் சித்த சுத்தி யேதுவாக முத்திப்பேற்றைத் தருவதா யிருத்தலின், அதனை யொருபோது மிகழாது ஜபித்தலே சித்தசுத்தியை யடைய விரும்பும் மக்களது கடமையாம். "நானேயோ தவஞ்செய்தேன் சிவாயநம வெனப்பெற்றேன்" என்று "மாணிக்கவாசகசுவாமிக ளருளிச்செய் திருப்பதையும் "ஏடுநிலத்தி லிடுவதன் முன்னம்வந் தெங்கள் குழாம்புகுந்து,கூடு மனமுடை யீர்கள் வரம்பொழில் வந்தொல்லை கூடுமினோ,நாடுநகர

மு நன்கறிய நமோநாராய ணயவென்று, பாடு மனமுடைப் பத்த ருள் ளீர்வந்து பல்லாண்டு பாடுதுமே" என்று பெரியாழ்வார் திருவாய் மலர்ந் திருப்பதையும், இவ்வாறுகவரும் பிறவற்றையும் நண்குணர்ந்தவர்க்கு மந்திரத்தின் அருமை பெருமை செவ்விதின் விளங்கும்.

மழநாட்டிலே மங்கலமென்னு மூரிலே இடையர் குலத்திலே பிறந்த ஆனய நாயனர் ஸ்ரீ பஞ்சாட்சரத்தை இசைநூற் கூறிய வாறு வேய் (புள்ளா)ங் குழலிலமைத்து ஊதினதினு லன்றோ நன்னிலையை யடைந்தனர். இதனல் மந்திரத்தினை மனத்தினும் சிந்தித்தலும் வாக்கினுற் சபித்தலு முடையவரன்றி இன்னிசைக் கருவிகளிற் செப்பமாக வமைத்துக் கூறுபவரும் பரமேசுவரனது கருணைக்குப் பாத்திர ராவரென்பது இனிது விளங்கும். எதற் கும் அன்பே முக்கிய காரணமாகும். ஆனயநாயனர் அன்புமிக்குப் பஞ்சாட்சரத்தை வேய்ங்குழலி லமைத்துச் சபித்ததினு லன் றோ அவர்மேய்த்து வந்த பசுவினங்களை யன்றி மற்றைப் பற வை முதலிய வினங்களும் அன்பால் மெய்ம்மறந்து தம்தொழிலை விட்டிருந்தன. அன்புமிக்கு மந்திரஜபஞ்செய்வர்க்கு வசப்படாத பொருளொன்று மின்றுமென்பது இதனுல் நன்கு விளங்கும்.

காரணமின்றி யாதொரு பிராணியையுங் கொல்லாமை, பிற ர்க்குத் தீமையைத் தராத மெய்யினை யுரைத்தல், அன்னியரது பொருளை யபகரியாமை, இந்திரியங்களும் மனமும் புலிபோல் பாய்ந்து விஷயங்களி லோடித் துன்ப முண்டாக்கா வண்ணம் அவற்றைத் தடுத்தல், அன்னிய ரிடத்து மேன்மையான பொரு ளிருக்கக் கண்டு எனக்கிது வேண்டும், எவ்வாறிது எனக்குக் கிடைக்கு மென்று சிந்தியாமை, உடம்பு நீராடுவதாலும் மனம் உண்மை யுரைப்பதாலும் பரிசுத்தமாயிருத்தல், பிறர்செய்யும் தீமையைக் கூடுமான பரியந்தம் பொறுத்துக் கொள்ளுதல், "ஏது வரவேண்டு மதுவருக, வென்னை விடுத்தே தகல வேண்டும் அஃ தகல்க" என்னுந் தீர்மானத்தோடு போன பொருளுக்காக விரக்க முறாது வரும் பொருளுக்காக் கலக்கமுறாது பெற்றது கொண்டு மகிழ்தல், உயிரினியல்பு இத்தன்மையது, உலகினியல்பு இத்தன் மையது, கடவுளி னியல்பு இத்தன்மையது, அக்கடவுளை யடையு மார்க்க மித்தன்மையது என்று கூறும் தத்துவ சாஸ்திரத்தை வாலாற்று முறையாக வந்த குருமூர்த்தி வாயிலாக வோதுதல்,

பொன்னொன்றே பூணுவார் விரும்பியவாறு பல்வகைத்தாய ஆப ரணமாக விளங்குவது போலப் பரமேசனும் அவ்வம் மதத்தார் விரும்பியவாறு பலவாறாக விளங்குகின்றானென்று கருதி, ''தெய்வ மிகழேல் என்று ஞானத்தாயாராய ஔவைப் பிராட்டி யருளியதை மேற்கொண்டு சித்த விகற்ப மின்றித் தத்தமக்கு விருப்பமான கடவுளை வழிபாடு செய்த லென்னு மிவற்றை யுடையார்க்கே மந்திர ஜபத்தின் பயன் விரைவிற் சித்தியாகும்.

மனம் பெரும் பான்மையாகச் துக்கத்தினால் கலக்கமடைந்து காரியா காரியந் தெரியாது திகைப்புற்றிருத்தலின், அதனைத் துக்கத்தின் வயமாகாவாறு செய்தல்வேண்டும். துக்கம் வருவது சுகத்தை விரும்பிய வருக் காதலின், சுகத்தை விரும்பா திருத்தலே துக்கத்தைக் கெடுத்தற்குரிய வுபாயமாம். ''இன்பம் விழையா னிடும்பை யியல்பென்பான், றுன்ப முறுதலிலன்'' என்று வள்ளுவனார் கூறியருளி யிருத்தலை யுற்றுநோக்குவார்க்கு இது செவ்விதாகப் புலப்படும். வருவது வந்தேதீரும் வாரதது முயற்சி செய்யினும் வருவதேயின்று என்னுந் தீர்மானத் தோடிருப்பவர் தாம் சுகத்தை விரும்புவதில்லை; சுகத்தை விரும்பாமையின் அவர்க்கு அதைப் பின்பற்றி யுடனே வருந் துக்கமு முண்டாவ தில்லையாம். யாவர் அனுகூல பதார்த்த சம்பந்த ஞானத்தால் வரும் சுகத்தையும் பிரதிகூல பதார்த்த சம்பந்த ஞானத்தால் வரும் துக்கத்தையும் அடையா திருக்கின்றனரோ அவர்தாம் மந்திரயோகம், ஸ்பரிசயோகம், பாவயோகம், அபாவயோகம், மகாயோக மென்னும் நிதித்தியாசன வடிவ பஞ்ச யோகத்துள் ஒன்றாய மந்திரயோகத்தைச் செய்தற்குரியவ ராவர்.

துக்கம் உடம்பை உஷ்ணத்தை யுண்டாக்கி வெதும்பச் செய்வதும், நன்றிது தீதிது என்றுணரும் புத்தியைக் கெடுப்பதும் நாணம் ஆண்மை தருமம் ஐசுவரியம் கீர்த்தி சிந்தனை நல்லொழுக்க முதலிய வெல்லா வற்றையுங் கொடுப்பதுமா யிருத்தலின், அதனை மனோ சாந்தியினால் அத்தியா வசியமாக வொழிக்க முயலவேண்டும். மனோசாந்தி வருவதற்கேது தொடக்கத்தில் மந்திர யோகமா யிருத்தலின், அது மனோசாந்தியை விரும்பு மெவரும் செய்தற் குரியதாம். திருமூலநாயனார் ''ஒன்றுகண் டீருலகுக் கொரு தெய்வமும், ஒன்றுகண் டீருட லுக்குயி ரானதும், நன்றுகண் டீரது நமச்சிவா யப்பழம், தின்றுகண் டார்க்கது தித்தித்த வாறே'' என்றருளிய வாற்றால் இது நன்கு விளங்கும்.

பரமேசுவரன் சீவர்களது நல்வினை தீவினை யென்னும் இருவினைக் கேடாகச் சிருஷ்டி, ஸ்திதி, சங்காரம், திரோபவம், அனுக்கிரகமென்னும் பஞ்சக் கிருத்தியங்களைச் செய்கிறானென்பதை நன்கறிந்தவர் மனந்தான் பதைப் பற்றிருக்கும்; மற்றவரது மனம் சுகம் துக்கம் பேறு (இலாபம்) இழவு (நஷ்டம்) வெற்றி (ஜயம்) தோல்வி (அபஜயம்) நன்மை தீமை யென்னுந் துவந்துவங் (இருமை) களால் பதைப்புற்றிருக்கும் மனமுடையவர்க்குப் பரமசுகம் (நிரதிசயாநந்தம்) உண்டாவதே யில்லையாகலின், மனம் பதைப்பற்றிருத்தற் கேது ஈசனது பஞ்சகிருத்தி யங்களையுணர்ந்து எனக்கெனச்செய லொன்று மின்றென் றிருத்தலாம். இவ்வாறிருத்தற்கேது மந்திரயோக முதலிய வற்றால் பெறப்படும் மனோசாந்தியேயாம். பஞ்சகிருத்தியமென்னும் ஐந்தொழில்களுள் சிருஷ்டி (படைப்பு), ஸ்திதி (காத்தல்), சங்காரம் (அழித்தல்) என்னு மூன்றும் அநித்திய மாயிருத்தலையே யியல்பாக வுடைய தத்துவக்கூட்டமாகிய ஜடத்திற் குரியனவாம். திரோபவம் (மறைத்தல்), அனுக்கிரகம் (அருள் புரிதல்) என்னு மிரண்டும் நித்தியமாயிருத்தலையே யியல்பாகவுடைய வுயிர்க்குரியனவாம். இவ்வாறாகப் பஞ்சகிருத்தியங்க ளிருத்தலை யுணர்ந்து உயிர்தனக்கென வொரு சுதந்தர மில்லாததென்றும், தத்துவக் கூட்டங்களாகியஜடம் (உலகம்) எதையும் அறிந்துசெய்யாததென்றும் கொண்டசித்தத்தோடு பந்தமற மந்திரவடிவ ஈசனைச் சிந்தனை செய்பவர்தாம் பிறவாத நிலையைப் பெற்றுப் பேரின்பக் கடலாக விளங்குவர். இது திருப்போரூர்ச் சிதம்பர சுவாமிகள் சந்நிதிமுறையில் "ஐந்தொழிலுமெனதிவைகளாகுஞ் சிருட்டிமுத லானமுத் தொழில்சடத்து, மறிவிடத் தோரிரண் டும்வினைக் கீடாயவற்றையுயிர தியாமையால், முந்திவரு தன்னையும் பிறரையுங் கருதிரனிமுதிர் விழைவு வெகுளி மருவி, முன்னுசுக துன்பங்கள் மன்னியிரு வினைமேவி மூடப் பிறப்பிலாழும், பந்தமுறு முயிர்சுதந் தரமிலி சடம்பாச மானகரு விகண்முழுதுமே, மகருமற் றவைநடத் திடுமொருவ ஞனிவை பகுத்துன் சுதந்தரமறச், சிந்தனைசெய் பந்தமறு மென்றெனக் கருள்குரவ செங்கீரை யாடி யருளே" என்றருளி யிருத்தலால் இனிது விளங்கும்.



## 14. கருமபந்தங் கழல்நெறி யுரைத்தல்.

## (3-4-1911).

செய்பவனின்றிச் செயப்படுபொருள் (காரியம்) சித்திப்பதின்றென்பது நியமமாதலின் அறியப்படுபொருளாகியவுலகமும் ஒரு செய்பவனையுடையதாயிருத்தல்வேண்டும். அச்செய்பவனது வடிவம் இத்தன்மையதாயிருத்தல் வேண்டுமென்பதுகுறிப்பிட்டறிதற்கியலாதாயினும், ஒருவகையால் அவன் ஞானவடிவனா யிருத்தல் வேண்டுமென்பதுஊகித் துணருமிடத்துப் புலப்படுகின்றது. சாக்கிரமும் சொப்பனமும் சுழுத்தியென்னு மூன்றவஸ்தைகளுள், சாக்கிரம் சொப்பனமென்னு மிரண்டவஸ்தைகளில்உடம்பு காணப்படுகின்றது; மற்றோ ரவஸ்தையில் உடம்புகாணப்படுவதில்லை. சாக்கிரசொப்பனவவஸ்தைகளிற் காணப்படும் உடம்பு ஒன்றென்றுகூறுவது பொருந்தாது. சாக்கிராவஸ்தையிலுள்ள வுடம்பே சொப்பனவஸ்தையில் வந்து வியவகாரஞ்செய்கின்ற தென்பதற்கு ஒருபிரமாணமுமின்றாம். சாக்கிராவஸ்தையில் படுத்துறங்குபவன் சொப்பனவஸ்தையில் மற்றொருடம்போடு கூடிக்காண்டல் கேட்டல் முதலிய வியவகாரங்களைச் செய்வதால், சாக்கிராவஸ்தையிலுள்ள வுடம்பும் சொப்பனவஸ்தையிலுள்ள வுடம்பும் வேறுவேறென்பது நன்கு விளங்கும். அவ்விரண் டவஸ்தையிலும் புருஷன் வேறுபாடின்றி இருத்தலால் அவற்றினும் அவன் வேறுபட்டவனென்பது இனிது விளங்கும். சுழுத்தியவத்தையி லிவ்விரண்டுடம்பு மின்றி அந்தகாரத்தோடு கூடித் தாம் ஆநந்த வடிவாயிருப்பது கரணவியாபாரமுடைய ஒவ்வொருபிராணியுமறிந்த விஷயமாம். சாக்கிரம் சொப்பனம் சுழுத்தியென்னு மூன்றவத்தையிலும் மாறுபாடின்றிப் புருஷன் ஞானவடிவமா யிருப்பதுபோல உலகத்தின் சிருஷ்டிஸ்திதி நாசமென்னு மூன்றவஸ்தைகளிலும் மாறாதிருக்கும் கருத்தாவும் ஞானவடிவமா யிருத்தல்வேண்டும். ஞானத்திற்கு உற்பத்தி நாசமோரிடத்துங் காணப்படாமையின், ஞானவடிவ ஈசன் நித்தியனா (உற்பத்தி நாசமில்லாதவனா) யிருத்தல் வேண்டுமென்பது செவ்விதாகப் புலப்படும்.

எது எதனிடத்தினின்று முண்டாகின்றதோ அது அதனிடத்திலேயே யொடுங்குமென்பது நியமமாயிருத்தலின், ஈசனிடத்தினின்று முண்டாகிய வுலகமும் ஈசனிடத்திலேயே யொடுங்கவேண்டும். மண்ணினின்று முண்டாகிய கடம் மண்ணினிடத் தொடு

ங்குகின்றது? மண்ணோ கடத்தோற்றத்திற்கு முன்னும் அதனொடுக்கத்திற்குப் பின்னுமிருக்கின்றது. அங்ஙனமே உலகத் தோற்றத்திற்கும் அதன் ஒடுக்கத்திற்கும் காரணமாகிய ஈசனும் அதற்கு முன்னும் பின்னும் இருத்தல்வேண்டுமென்பது சிறிதுசிந்தித்துப் பார்ப்பவர்க்கு விளங்காமற் போகாது. உலகத் தோற்றத்திற்கும் ஒடுக்கத்திற்கும் காரணமாயிருப்பது ஜடவடிவமாமென்று கூறலாமே யெனின், ஜடவடிவமெல்லாம் காரியவடிவமா யிருத்தலின் அது பொருந்தாது. இவ்விஷயம் ஞானகாய நடனங்கண்டு நன்னிலையுற்ற மாணிக்கவாசக சுவாமிகள் திருக்கோவையாருள் "முன்னுமொருவனிரும் பொழின் மூன்றற்கு முற்றுமிற்றாற், பின்னுமொருவர்சிற் றம்பலத்தார்" என்று திருவாய் மலர்ந் திருப்பதினால் நன்கு விளங்கும். (பொழில்-உலகப்).

உலகம் பரமேசுவரனால் படைக்கப்பட்டதாயின், அவர் உலகை எங்கிருந்து படைத்தார், ஏன் படைத்தாரென்று சிலர் ஆட்சேபிக்கின்றார். இவ்வாட்சேபம் உற்று நோக்காதவர்க்கு விடைசொல்லக்கூடாத வாட்சேபம்போற் றோன்றும். நமக்குண்டாகும் சொப்பனம் எங்கிருந்துண்டாகின்றது, ஏனுண்டாகின்றது என்றுசிறிதுற்று நோக்கினால் அவ்வாட்சேபத்திற்கு விடை மிக வெளிதாகத் தோன்றும். சொப்பனமுண்டாவதற்கிடம் நம்மையன்றி வேறில்லாமையால் அஃதுண்டாதற்கிடம் நாமேயாம். அஃதுண்டாதற்குக் காரணம் நித்திரையாம். நம்மிடத்தினின்று சொப்பன முண்டாவதற்கு நித்திரை காரணமாயிருப்பது போலப் பரமேசுவரனிடத்தினின்று முலக முண்டாவதற்கு நம்முடைய கருமம் காரணமாயிருக்கின்றது. நாம் உலகத்திற் பிறந்து பிறந் திறந்திறந்து துன்பப்படுதற்குக் கருமங் காரணமா யிருத்தலால் எவ்வாற்றாலாவது கரும பந்தம் நீக்கமுயலுதல் வேண்டும்.

உலக காரணம் ஜடமன்று; அதன் தோற்றத்திற் கேது நம்முடைய கன்மமாமென் றெவருள்ளவாறறிகின்றாரோ அவர்தாம் பழிபாவங்கட்குப் பயந்து பரோபகார சிந்தைமேற்கொண்டு பதைப் பற்றிருக்கும் நிலையைப்பெறுவர். உலகம் எப்பொழுதும் இவ்விதமாகவே யிருப்பது; கருமத்தைக் கண்டவரார்? செத்தபிறகடைவதியாதோ என்று நாஸ்திகம்பேசி நல்லோரைப்பழிப்பவர்பதைப் பற்ற நிலையைப் பெறுவதே யின்றாம்.

இன்பமும் துன்பமும் கருமவசத்தால் வருகின்றன. அக்கரும கருத்தா யாமேயாயிருத்தலின், ஒருவரையும் நோதல் கூடாதெ ன்னும் ஸ்திரபுத்தி உலக சிருஷ்டியின் தன்மை யுள்ளவா றறிந்த வர்க்குத்தா னுண்டாகும்.

இயல்பாகவே ஞான சொரூபமாயுள்ள பரமேசுவரனைத் திரி கரணமுமொத்துத் துதிசெய்தாற்றான், அவர் ஞானகுருவாய்வந்து நமக்கு உண்மை நிலையினை யுபதேசஞ்செய்து என்றுமாறாத வின் புருவாக விருக்குமாறருள் செய்வர். உலக வின்பத்தைப் பேரின்ப மாக எதுவரைக்கும் நாம்நினைத்திருக்கின்றோமோ அதுவரைக்கும் பரமேசுவரனது கருணைக்குப் பாத்திரமாக மாட்டோம். விஷங்கல ந்ததேன் தன்னையுண்டார்க்கு முன்னர்ச் சிறி தின்பத்தைத் தந்து பின்னர்ப் பெருந்துன்பத்தைத்தருவது நிச்சயமாதல்போலத்தேடி ய பொருள்களும் தேடும் பொருள்களும் தம்மையுடையவர்க்கு முன்பு சிறிதின்பத்தையும் பின்பு பெருந்துன்பத்தையும் தருதல் நிச்சயமாமென் றுணர்ந்து அவற்றிலுள்ள அபிமானத்தை யகற்றி, உலககாரணமாய் ஞானவடிவாயுள்ள பரம்பொருளை யிடைவிடாது தியானஞ்செய்து, அந்தக்கரணங் குவியப்பெற்றுத் தேகத்தில் ஆன்மபுத்தி நீங்கப்பெற்று, கரும சாட்சியாய் நிலைத்து நிற்பவரே சாதுக்களாவர்.

சுகதுக்கமுதலிய துவந்துவங்கள் நிகழுவதற் கிடமாயுள்ள தேகம் நல்வினை தீவினை யென்பவற்றாலும் அவைவிருப்பு வெறுப் புக்களாலும், அவையானென தென்னு மபிமானத்தாலும் அஃ்து விவேகத்தாலும் அஃ்தஞ்ஞானத்தினாலு முண்டாவனவா யிருத் தலின் அஞ்ஞான மொழிந்தாற்றான் தேகமுதலியன வெல்லாமொ ழியும். அஞ்ஞானம்தத்துவ ஞானத்தாலன்றிவேறெதனாலும் ஒழி வதன்றாகலின்தத்துவஞானத்தைத் தேகமினிவாராதிருக்க விரும் புவோர் அத்தியாவசியகமடைதல் தகுதியாம். அத்தத்துவஞானம் யானென தென்னு மபிமான மில்லாமல் எவ்வகைப் பற்றுக்களை யும்விட்டுத் தன்மயமாக விளங்கும் சாதுக்கள் வாயிலாகத்தான் சித்திக்கும். சாதுக்கள் தாம் இனிப்பிறவாதிருத்தற்குரியதன்னிலை யை யுபதேசித்தற் குரியவராவர். அவர்களை யடைக்கலமாக வடைந்து அவர்களது திருநோக்கின்படியே யொழுக முயல் பவர்தாம் ஞானபூமி யேழனுள் முதற்பூமியை யடைந்தவராவர்.

"உடம்பினைப் பெற்ற பயனாவ தெல்லாம், உடம்பினி லுத்தமனைக் காண்" என்று நமது ஞானத் தாயாராகிய ஔவைப் பிராட்டியா ரருளிச்செய் திருத்தலைக் கடைப்பிடித்துத் தன்னையறிந் தின்ப முறலே சாதுக்களை யடுத்தவரது கடமையாகும்.



## 15. உலகியல் கடக்கு முபாயங் கூறல்.

10 - 4 - 11.

ஒவ்வோருமனிதனும் உணவையும் உடையையும் உறையுளையும் அவற்றிற் குரியசாதனங் களையும் தேடுவதிற் பெருநோக்குற்று உலகியலையே தனக்குரிமை யுடையதாகக் கருதியிருத்தல் வெளிப் படையாம். உணவு முதலியன அத்தியா வசியகமாக வேண்டப்படுவன வாயினும், அவற்றை யடைதலிலேயே கருத்தினைச் செலுத்தி, நான் யார்? எதனாலித் தேகச்சிறை யெனக்கு வந்தது? இது யாரால் நீங்கும்? அதற்குபாயம் யாது?என்றொரு போதாவது சிந்தியாது வாழ்நாளை வீணாளாக்குதல் பரிதாப கரமான விஷயமாம். உணவு முதலியவற்றைச் செவ்வையாகப் பெற்றாலும், அவை நமக்குப் பூரணமான வின்பத்தைத் தருவதேயில்லை; ஆதலால், அவற்றைத் தேகயாத்திரை நடைபெறுவதற்கு வேண்டியவளவாகப் பெற்று, பெற்றது கொண்டு திருப்தியுற்றுப் பூரணமான வின்பத்தைப் பெறுதற்குரிய சாதனத்தை யத்தியாவசியகமாகச் சம்பாதித்தலே அறிவுடையாரது முக்கியமான கடமையாம்.

சுகசாதனப் பொருள்கள் கிடைக்கும்போது களிப்பையும், துக்கசாதனப் பொருள்கள் கிடைக்கும்போது கவலையையு மடைகின்றவர்கள் பூரணமான வின்பத்தை யொருபோதும் பெறுவதேயின்றாம். ஒருகாலத்திற் சுகசாதனமா யிருக்கும் பொருள் மற்றொரு காலத்தில் துக்க சாதனமா யிருத்தலின், இதுதான் சுகசாதனப்பொருள், இது தான் துக்கசாதனப் பொருளென்று குறிப்பிட்டுரைத்த லியலாது. கோடைக்காலத்திற் சுகசாதனமாயிருக்குங் கலவைச் சாந்து (வாசனைத் திரவியங்களோடுகூடிய சந்தனக் குழம்பு) முதலியன மாரிக்காலத்தில் துக்கசாதனமா யிருக்கின்றன. ஒருகாலத்திற் சுகசாதனமாக விருந்த மனைவி மக்கள் முதலியோர் மற்றொரு காலத்தில் யமனைப்போல நடுங்கச்செய்யும் துக்கசாதன மாகின்றார்கள்: நாமே ஒருவருக்குச் சுகசாதனமாயிருக்

கின்றோம்; அவர் நமக்குத் தீங்கிழைப்பாராயின் அவர்க்குத் துக்க சாதன மாகின்றோம். அஃதாவது எவ்வாற்றாலாவது கெடுதிசெய் கின்றோம்; அல்லது கெடுதி செய்ய முயல் கின்றோம். இவற்றை யெல்லாஞ் செவ்வையாக வூகித்துப் பார்க்குமிடத்துத் துன்பமும் இன்பமும் மாறி மாறி வருகின்றன வென்றும், இவற்றால் நாம் ஓயாது மொத்துண்டு வருகின்றோ மென்றும், நன்கு விளங்கும். இவ்வாறு மொத்துண்டு வருதலைச் செவ்வையாக வறிந்தவர்தாம் உலகியலி னின்றும் நீங்க வுபாயத்தைத் தேடுவர். உலகியலாவது பணத்தைப் பாடுபட்டுத் தேடுதலும் அதனால் மாறி மாறி வரும் இன்பத்தை யடைதலுமாம்.

யாம் இளமைப்பருவ முடையவரா யிருக்கின்றோம்; அழகும் ஆண்மையு முடைய வுடம்பினை யுடையவரா யிருக்கின்றோம்; எண்ணக் குறைபடாத செல்வத்தை யுடையவரா யிருக்கின்றோ மென் றிறுமாப்புற்று, தமது வாழ்நாள் நீரிற்றோன்றுங் குமிழி போல நிலைபேறில்லாததா யிருத்தலைச் சிறிதேனுங்கருதாது கண்டதே காட்சி, கொண்டதே கோலமென்று சித்தஞ் சென்றவாறு சென்று தேடியபொருள் சித்தியாதபோது கவலையடைந்து வருகின்றவர் எவ்வாறுய்வதற்குரிய நெறிகண் டுய்வரோ? இவர் "இளமையு நில்லா யாக்கையு நில்லா, வளவிய வான்பெருஞ் செல்வமு நில்லா" என்று பெரியார் கூறியிருத்தலைக் கேட்டேனு மறியார் போலும்!

நியாயவழியாகத் தேடிய பொருள்களுள் சிலவற்றையாவது "பாத்திர மறிந்து பிச்சையிடு, கோத்திர மறிந்து பெண்ணைக் கொள்" என்னும் பழமொழிக் கிணக்கமாகச் சற்பாத் திரத்திற் செலவு செய்ய வேண்டும். சற்பாத்திராவார் சித்தசாந்தி பெற்றவர்களும், சித்தசாந்தியைப் பெற முயலுகின்றவர்களும், அவர்களிடத்து விசுவாசத்தோடு தொண்டு புரிகின்றவர்களு மாவர். இவர்களது விஷயமாக இடம்பங் கருதாது செலவிடும் பொருள் அணுவளவாக விருப்பினும் பயனால் மலையளவாம். இதுபற்றி யன்றோ பெரியார் "தான் சிறிதாயினுந் தக்கார்கைப் பட்டக்கால், வான்சிறிதாப் போர்த்து விடும்" என்றருளிச் செய்தனர். "எப்போதும் மூப்பும் மாணமு மற்றவன் போலப் பாவித்துக் கல்வியையும் திரவியத்தையும் சம்பாதித்தல் வேண்டும்; எமன் வாயிலகப்பட்டவன்போலப் பாவித்து விரைந்து தருமத்தைச் செய்தல்

வேண்டும்" என் ருன்றோர்கள் கூறியிருத்தலைச் சிறிது பொழுதாவது கருத்தூன்றியறிந்தவர் தருமஞ் செய்யாதிரார்! இரார்!! தருமஞ் செய்பவர்தாம் தருமவடிவாயுள்ள பரம்பொருளைத் தவறுதலடைவர்.

தருமத்தை யாதேனுமொரு பயனைக்கருதிச் செய்தல் கூடாது; ஈசுரார்ப்பணமாகச் செய்தல் வேண்டும்; பயனோக்காது சிவார்ப்பணம் அல்லது கிருஷ்ணார்ப் பணமாகச் செய்யும் கருமத்தால் சேறுநிறைந்த சிறுகுளத்திலெழும் குமிழிபோல அடிக்கடி சித்தத்தி லுண்டாகும் தீயவெண்ணங்க ளொழியும்; இவ்வொழி வினையே சாஸ்திரங்கள் மலவொழி வென்றுகூறும். தீயவெண்ணங்களொழிந்த மனந்தான் யாவுந் தானாயுள்ள பகவானைத் தியானஞ் செய்வதற் குரியதாம். தியானத்தாற் பரிபக்குவ மடைந்த மனமுடையவர்தாம் நான் யார்? ஈசனென்பவன் யாவன்? என்றற் றொடக்கத்து விசாரஞ் செய்வதற் குரியவராவர். ஈசுவரனது கருணை, சாஸ்திரத்தின் கருணை, சற்குருவின் கருணை, மனத்தினது கருணையென்னு மிந்நான்கையும் பூரணமாகப் பெற்றவர்க்கே தத்துவ விசாரமெளிதாக வுதயமாம்; ஏனையரிடத்துத் தத்துவ விசாரம் சொல்லளவாக விருக்குமல்லாது பயனளவாக விராது. (1) ஞான சாதனங்களைப் பெறுதல் ஈசுவரனது கருணையாம்; (2) ஞானசாஸ்திரங்களின் அர்த்தங்களை மறவாதிருத்தல் சாஸ்திரத்தின் கருணையாம்; (3) ஞான சாஸ்திர அர்த்தத்தை யனுசரித்ததும் தனதனுபவத்தை யனுசரித்ததுமாக வுள்ளவா றுபதேசஞ் செய்தல் குருவின் கருணையாம்; (4) சாஸ்திரார்த்தத்தை யனுசரித்ததும் சற்குரு வாக்கியத்தை யனுசரித்ததுமாகச் சமாதியைச் சம்பாதித்தல் மனத்தின் கருணையாம். இந்நான்கு கருணையும் சிறப்புவகையாக வுற்றுநோக்கு மிடத்துச் சாதுசங்கப் பழக்கமுடையார்க்கே சித்திக்கும்; சாதுசங்கப் பழக்கம் அத்தியா வசியகமாக வேண்டுமென்பது பற்றியல்லவா "சகமெனு மாயையை வெல்லத் தக்கோர்க் கெல்லாம் தப்பாத சகாயமாஞ் சாது சங்கம்" என்றும் "மேலாஞ் சாதனங்கள்வர மேவ வேண்டுஞ் சாதுசங்கம்" என்றும், "பெரியாரைத்துணைக்கொள்" என்றும் சான்றோர்கள் திருவாய் மலர்ந் தருளினர்.

வீட்டின் வாயிலைக் காப்பவர் வீட்டினுள்ளேபோவதற்குத் தக்கவரை விட்டு, மற்றையவரை யுள்ளே விடாது தடுத்து விடுவது

போல, துக்கமென்பது சிறிதளவேனு மின்றிச் சுகமே வடிவ மாகவுடைய மோட்சத்தின் வாயிற்காவலராகிய சித்தசாந்தி, விசாரம், (அதனாற் றோன்றிய) சந்தோஷம், சாதுசங்கம் என்னும் நால்வரும் அம்மோட்சத்தி னுள்ளே தத்துவஞான முடையவரை விட்டு மற்றையவரை யுள்ளேபோக விடாது தடுத்துவிடுவாராதலின், நாம் சாது சங்கப் பழக்கத்தால் சித்தசாந்தி முதலியவற்றைப் பெற்றுத் தத்துவஞான வாயிலாக ஜீவன்முத்தி ஸ்திதியை (யானென தென்னு மபிமான மில்லாமல் எவ்வகைப் பற்றையும் விட்டுப்பரமாநந்த வடிவமா யிருக்கும் நிலையை)ப் பெறுதலே தகுதியாம். சாதுசங்கப் பழக்க மில்லாதவர் கல்வி அறிவு முதலியவற்றால் எவ்வளவு மேன்மையுடையவராக விருந்தாலும் அவர்க்கு அவற்றாலாகும் பயன் அற்பமேயாம். சாதுசங்கப் பழக்கமுடையவர்க்குச் சிவராஜயோகமும், சிவராஜயோக முடையவர்க்குச் சிவஞானமு முண்டாகு மென்பது பற்றியன்றே அண்டங்கடந்த அரனடிபோற்றிப் பண்டைவினையின் பகுப்பினை யொழித்துப் பரமாநந்த வடிவமாய் விளங்கிய பட்டினத்தடிகள் "நல்லா ரிணக்கமு நின்பூசை நேசமு ஞானமுமே, யல்லாது வேறு நிலையுளதோ" என்றருளிச் செய்தனர்.

ஞான சாஸ்திரவாராய்ச்சியும், சாதுசங்கப்பழக்கமும், சமாதி யப்பியாசமும் பூரணமாகப் பெற்றவர்கட்கே உள்விழிப் பார்வை என்னும் ஞானக்கண் இன்ன தன்மைய தென்று செவ்விதாகத் தோன்றும். ஞானக்கண் பெற்றவர்தாம் நடுநிலையைப் பெறுவர். நடுநிலையைப் பெற்றவரே ஞானிகளாவர். ஒவ்வொருவரும் ஞானிகளாவதற்குச் சாது சங்கப்பழக்க மத்தியா வசியகமாக வேண்டப்படுவதா யிருத்தலால், அதனை யெவ்வாற்றாலாவது பெறமுயலுதலே நம்மனோரது சிறந்த கடமையாகும். ஞானவாசிட்டம் சிகித்துவசன் கதையிலே "உண்டான சிருட்டிதான்" என்னுஞ் செய்யுளில் "காட்சியுறுங் கலைநூலாற் கற்றோர் சார்வாற், றண்டாத பரிசயத்தாற் சிலகா லத்திற் றூவுமன நின்மலமாய்ச் சசிபோ னிற்கிற், பண்டாய வனுபூதி மயமாய்த் தானே பாக்கியவான் களுக்கிந்தப் பார்வை தோன்றும்" என்று கூறியிருத்த லிங்கு நன்றாக வுணர்தற் பாற்றாம்.



## 16. தன்மய மாகுஞ் சாதனங் கிளத்தல்.

## 17 - 4 - 1911.

கூழ் முதலிய வற்பவுணவையுண்டு வருபவன் பாலன்ன முதலிய வுணவு கிடைத்தபோது அவ்வற்ப வுணவை விரும்பாது விடுவதுபோல, உலகவாழ்வை மெய்யெனக் கருதிச் சிற்றின்பத்தை யனுபவிப்பவன் பேரின்பங் கிடைத்தபோது தான் சிற்றின்பத்தை விரும்பாது விடுவன்.

சிற்றின்பம், விரும்பிய பொருள் கிடைத்தபோது மனமொருமுகப் படுதலா லுண்டாகின்றது; அவ்வின்பமும் உண்மையாக நோக்குமிடத்துத் தனது நிஜவடிவ வாநந்தமேயாகும். மனம் ஒருமுகப்பட்டகாலத்தில் தனது நிஜவடிவ வாநந்தம் விளங்குகின்றது; அம்மனம் ஒருமுகப்படாது பல தலைப்பட்டோடிய விடத்து அவ்வாநந்தம் விளங்குவதின்றாம்.

விரும்பிய பொருள் கிடைத்தபோது மனம் ஒரு முகப்படுதல் க்ஷணகால மாத்திரமே யாகலின், அப்போது விளங்கும் தனது நிஜவடிவ ஆநந்தம் சிற்றின்பமெனப் படுகின்றது. மனம் எப்போதும் ஒரு முகப்பட்டிருக்கும் வகையை யறிந்து அதனை எப்போதும் ஒருமுகப்படச் செய்திருக்கின்றவனுக்குத் தான் தனது நிஜவடிவ வாநந்தம் நன்றாக விளங்கும். அவ்வாறு தனது நிஜவடிவ வாநந்தம் செவ்வையாக விளங்கப் பெற்றவன் சிற்றின்பத்தை யொருபோதும் விரும்புவதே யின்றாம். சிற்றின்பத்தை விரும்பாமைக் கேதுவாகிய ஆநந்தந்தான் பேரின்பமென்று பெரியோர்களால் கூறப்படுகின்றது. இது மனம் வாக்குக் காயங்களின் தற்போதச் செயலொழிந்து சிவஞானியாய் விளங்கிய திருவாதவூரடிகள் "தினைத்தனை யுள்ளதோர் பூவினிற்றே னுண்ணாதே, நினைத்தொறுங் காண்டொறும் பேசுந்தோறு மெப்போது,மனைத்தெலும் புண்ணெக வாநந்தத் தேன்சொரியுங், குனிப்புடை யானுக்கே சென்றாதாய் கோத்தும்பீ" என்று திருவாய் மலர்ந்தருளியிருப்பதால் நன்கு விளங்கும்.

அன்பரை யன்னைபோ லன்புடன் காக்கும் அச்சுதனடியைப் போற்றி உயிர்ச்சார்பு உடற்சார்பு பொருட்சார்பென்னுஞ் சார்புகளை யொழித்து ஞாநாநந்த வடிவமாய் விளங்கிய நம்மாழ்வார் "அற்றது பற்றெனி, லுற்றது வீடு" என்றருளியிருப்பதால், தானல்லாத வுடம்பை யானென்றும் தன்னோடு சம்பந்த மில்லாத

பொருளை யெனதென்றுங் கொள்ளு மிருவகைப்பற்றும் அற்றவர்க்கே வீடு (மோட்சம்) சித்திக்குமென்பது பெறப்படுகின்றது. யானென தென்னும் இருவகைப் பற்றும், மனம் விஷயவின்பத்தைக் கருதி யோடாது மடங்கி யொருமுகப்பட்ட விடத்து வெளிப்படும் தனது நிஜவடிவ வாநந்தம் பூரணமாக விளங்கிய விடத்திற்றா னொழியும். இது சித்திக்கப் பெறாதவர்க்கு விஷயாநந்த விச்சை யொருபோதும் நீங்குவதே யின்றாம்.

மனம் செவ்வையாக வொருமுகப்படுதல்தான் நிஷ்டையாம்; மனம் செவ்வையாக வொருமுகப்பட்ட விடத்திற்றான் வாக்கின் றொழிலும், காயத்தின் றொழிலு மொழியும். மனத்தைச் செவ்வையாக வொருமுகப்படுத்தக் கல்லாது வாக்கின் றொழிலையும் காயத்தின் றொழிலையும் ஒழிக்கக் கற்றல், அல்லது ஒழித்திருத்தல் பெரும்பயனளிப்பதன்றாம். வாக்கின் றொழிலைத்தடுத்தலும் காயத்தின் றொழிலைத் தடுத்தலும் சாதக புருஷர்களுக்கு ஒவ்வொரு சமயத்திலத்தியாவசியகமாக வேண்டப்படுவனவாயினும், அவற்றாலேயே பெரும்பயன் சித்திக்குமென்றுகருதுதல்கூடாது.

வாக்கின் றொழிலை யடக்குவதால் இம்மைப் பயனும், காயத்தின் றொழிலை யடக்குவதால் மறுமைப்பயனும், மனத்தின் றொழிலை (மனோராச்சியத்தை) யடக்குவதால் வீடு முண்டாகுமென்பது சாஸ்திர நிச்சயமாதலின், இம் மூன்றடக்கத்தையும் அவசியம் பெற முயலல்வேண்டும். இம்மூன்று அடக்கத்துள் மனவடக்கம் மேலான பயனைத் தருவதாயிருத்தலால், அவ்வடக்கத்தைப் பெறுதலே முக்கியமானதாம்.

மனத்தின் வழி தான் போகாது தன் வழியிலே மனத்தைச் செலுத்தக் கற்றவன்றான் பூரணமாக நிஷ்டையைப் பெறுதற்குரியவனுவான்; பூரணமாக நிஷ்டையைச் சம்பாதித்தவனே பேரின்பத்தை யெளிதாகப் பெறுவன்; பேரின்பத்தைப் பெற்றவனுக்கே முள்ளிப்பூவிலுள்ள தேனைப் போலத் துன்பத்துடன் அற்ப வின்பத்தைத் தருவதற் கேதுவாகிய விருவகைப் பற்றுமொழிந்து போம். இருவகைப்பற்று மெவனுக்கின்றோ அவனுக்கொரு கருமமுமின்றாம்; உலோகோபகாரமாகவன்றித் தன்பொருட்டாகக் கருமஞ் செய்வானாயின், அவன் ஞானியன்றாம்; இது திருட்டாந்தமாலை "நெய்யொடு பாலுஞ் சோறு நிறையவே யுண்டதற்பின், னெய்யொடு வெய்ய கூழை நுகர்ந்திடா வாறு போல,

வையமி லறிவா நந்தத் தமிர்திளு லார்ந்த ஞானி, செய்திடான் கருமமென்றுஞ் செய்யுமேல் யோகி யல்லன்" என்று கூறுவதனு லினிது விளங்கும்.

மனம் செவ்வையாக வொருமுகப் படுதற்கேது பரம்பொருளை (சிவத்தை அல்லது பரவாசுதேவனை) தன்னோடு ஒற்றுமையுற விடைவிடாது பாவித்தலாம். இங்ஙனம் பாவிப்பவர்க்கே (சவிகற்பசமாதி செய்பவர்க்கே) உண்மைவிளங்கி மனத்தின்கண்ணுள்ள ஆசை கோபம் அகந்தை முதலிய தீயகுணங்கள் தலைகாட்டா தொழியும். இவை யொழிந்தபோது மனம் வெளிமுகப்படாது உள்முகப்பட்டே நிற்கும்; உள்முகப்பட்டபோது தான், தான் சுபாவசித்தமாய்ப் பரமாநந்த சொரூபமாயிருத்தல் விளங்கும்; அது விளங்கியபோது உலகபந்தமற்று, உள்ளபடி யிருப்பது விளங்கும்; இதுதான் தானான தன்மயமென்று சொல்லப்படுவது. இது தாயுமான சுவாமிகள் "தன்மயஞ் சுபாவஞ் சுத்தந் தண்ணருள் வடிவஞ் சாந்தம்" என்றும், "தன்னிலே தானாக நினைந்து கனிந் தவிழ்ந்து சுக சமாதியாக" என்றும், "தன்மயமான சுபாவத்தின் மெள்ளத் தலைப்படுங்கால், மின்மயமான சகம்யா துறைத்தென்" என்றும், "தானான தன்மயமே யல்லா லொன்றைத் தலையெடுக்க வொட்டாது" என்றும் அருளியிருத்தலா லினிது விளங்கும்.

தானான தன்மயநிலை கிட்டுவது மனமாண்டவர்க்கே யாதலின், மனத்தைப் பிரயத்ன பூர்வகமாக மாய்க்க முயலவேண்டும். மனத்தை மாய்த்தலாவது மனத்தின்கண் தீயவெண்ணங்க ளெழாவாறு செய்தலாம். மனமானது சிறு குழந்தைகளைப்போ லோரிடத்தும் நில்லா தோடுந்தன்மை யுடையதாகலின், அதனைச் சப்தப் பரிசாதி விஷயங்களி லிந்திரியவாயிலாகப் போகும்போதெல்லாம் ஓட விடாது தடுத்துக்கொண்டே வந்தால், தீய வெண்ணங்களெல்லாம் மாண்டுபோம். தீயவெண்ணங்கள் ஒழிந்தமனமே சுத்தமனமாம்; சுத்தமனமுடையவர்தாம் ஓட்டையும் பொன்னையும் ஒக்கக் காண்பர். இந்நிலை வாய்க்கப் பெற்றவர் தாம் மண், பெண், பொன் முதலியவற்றால் (துக்கத்தை யுள்ளடக்கிக்கொண்டு) வரும் சிற்றின்பத்தை நாடுவதில்லை; அவர் தாம் பேரின்பமயமாய் விளங்குவர். பேரின்பமயமாய் விளங்கியவர் தாம் பிறப்பற் றிருப்பர்.



## 17. சும்மா விருக்கச் சுகோதய மாமெனல்.

## 24 - 4 - 1911.

"சும்மாவிருக்கச் சுகவுதய மாகுமே" என்று ஸ்ரீதாயுமானவர் திருவாய்மலர்ந்தருளியிருப்பதை யுற்றுநோக்கிச் சற்குருநாதனருளியவாறு சும்மாவிருக்க வப்பியாசஞ் செய்ய முயலுகின்றவர்களுக்குத்தான் சும்மா விருப்பவர்க்கே சுகவடிவமாய் விளங்குதல் சித்திக்குமென்பது செவ்வையாக விளங்கும். சும்மாவிருப்பதென்பது எளிதானகாரியமன்று. வானத்தை வில்லாகவேனும் வளைக்கலாம்; மணலைக் கயிறாகவேனும் திரிக்கலாம்; இன்னும் வேறெதையாவதுஞ்செய்யலாம். சும்மாவிருப்பதை மாத்திரம் சம்பாதிப்பது மிகவு மருமையான தாம். வேலையின்றிச் சும்மா விருக்கின்றேனென்றெவர் கூறுகின்றாரோ அவர் ஏதாவதொரு வேலையைச் செய்துகொண்டே யிருக்கின்றாரென்பது சிறிது கூர்ந்து நோக்கி னினிதாகப் புலப்படும். வேலையில்லாமையால் யானிப்போது கஷ்டமுற்றிருக்கின்றேனென்பவன் வேலையின்றி யிருக்கும் ஸ்திதியை யுணராமையினாற்றான் அவ்வாறு கூறுகின்றான்.

காண வியாபாரமுடைய ஒவ்வொருபிராணியும் உறங்குவதென்னுஞ் சுழுத்தி யவஸ்தை யொழிந்த வேளைய நனவு கனவென்னும் சாக்கிர சொப்பன வவஸ்தைகளில் ஏதாவதொரு தொழிலைச் செய்துகொண்டே யிருத்தலின், வேலையின்றிச் சும்மாவிருக்கும் ஸ்திதியைச் சாக்கிர சொப்பன வவஸ்தைகளிற் சம்பந்தப்பட்டு, அவற்றின் மயமா யுள்ளபோது சம்பாதித்தல் கூடாதென்பது பெறப்படுகின்றது; படவே, சும்மாவிருக்கும் ஸ்திதிஷை அவத்தைகளின் வயமாகாது தான் மாத்திரமாக விருக்கும் நிலையைப் பூரணமாகப்பெற்ற மகான்களுக்கே சித்திக்குமென்பது நன்றாக விளங்கும்.

ஒவ்வொரு காரியமும் தொடங்கும்போது துன்பந்தருவதாயிருத்தலைச் சிந்தித்துப்பார்த்து, சும்மாவிருக்கும் ஸ்திதியைப்பெற முயலல்வேண்டும். சும்மாவிருக்கும் ஸ்திதியைப்பெற முயலுகின்றவர்கட்குத் தொடக்கத்தி லுண்டாகும் துன்பத்திற்கு அளவே யின்றாகும். மனத்தையும் வாக்கையும் காயத்தையும் தத்தம் விஷயங்களில் பிரவிர்த்திக்காதவாறு செய்பவர்க்கே சும்மாவிருக்கும் ஸ்திதி வாய்க்கும்.

மனமுதலியவற்றின் வியாபாரங்களைத் தடுப்பது மிகவும் கஷ்டமான காரியமாமாதலின், தொடக்கத்திலுண்டாகும் துன்பம் சகிக்க முடியாததாகத் தோன்றும். அத்துன்பத்தைச் சகித்து இடையறாத முயற்சியோடு, அம்மனமுதலியகரணங்களின் வியாபாரத்தைப் பையப் பையத் தடுத்து வருகின்றவர்களுக்கே சும்மாவிருக்கும் மௌநஸ்திதி சித்தியாம். இதனை யடைந்தவர் எத்தகைய பதவியையும் விரும்பார். அவர்தாம் ஆசையற்றுப் பரமாநந்தவடிவமாய் விளங்குவர். சுருக்கமாகக்கூறுமிடத்துச் சாக்கிரா வஸ்தையிலேயே சுழுத்தி யவத்தையைப் பெற்றிருப்பதுதான் சும்மாவிருக்கும் ஸ்திதியாகும். இதனை அவசியம் பெறமுயலவேண்டும். "அறிபொருளை விட்டகன்று லழியுஞ் சித்தம் அந்நிலையே வியாபாரமனைத்து மில்லாச், செறிநனவிற் சுழுத்தியாம்" என்று பகவான் வசிஷ்டமகாமுனி கூறுதலால் அறிபொருளை (அறிபடுபொருளை) விடமுயலுதல் வேண்டும்; சப்தபரிச முதலியவை அறிபடுபொருளாம்; அவற்றின்கண் சித்தத்தைச் செல்லவிடாது விழிப்பாகவிருந்து தடுத்துத் தடுத்துவந்தால் அதனது வல்லமை நாளுக்கு நாளாகப் பையப் பையக் குறையும்; குறைந்து கொண்டேவந்தால், அது பல்பிடுங்கினபாம்பு போல அடங்கிநிற்கும். அவ்வாறடங்கும்போது பாராமுகமாகவிராது நன்றாக வடக்கினால், அது விஷய வியாபாரமற்றுக் கயிறற்ற வூசலுக்குத் தரையே யிடமாவது போல ஆத்மாவையே யிடமாக வடைந்து சிவாகாரமாக விளங்கும். அவ்வாறு விளங்கும்போது நினைப்பும் மறப்பும் இன்றாம். நினைப்பும் மறப்புமற்ற நிலையே நனவிற் சுழுத்தியாம். இந்நிலைதான் தத்துவ ஞானத்தின் வரம்பாம் (வரம்பு-எல்லை). "மோனமென்பது ஞான வரம்பு" என்று நமது ஞானத்தாயாகிய ஔவைப்பிராட்டியாரருளியிருப்பதிங்குச் செவ்வையாக வூன்றி யுணரத்தக்கதாம்.

சாக்கிரத்திலே நினைப்பும் மறப்புமற்றிருக்கும் நிலை மனோவியாபாரமில்லாமலும் சுழுத்தி யவஸ்தையை யடையாமலு முள்ள நிலையா யிருத்தலின், அது சகல கேவல மென்னுமிரண் டவஸ்தைகட்கும் வேறுபதாம். சாக்கிரத்திலும் சொப்பனத்திலும் மனோவியாபாரமிருத்தலின், அவ்விரண்டவஸ்தையும் சகல நிலையாம். சுழுத்தியில் மனமில்லாதிருத்தலின் அது கேவல நிலையாம். சகல கேவலங்களின் வேறாய் விளங்கும் சும்மாவிருக்கும் நிலையைப் பெறமுயலுதலே மனிதப்பிறப்பின் முக்கியக்கடமையாம்.

இந்நிலையை யடைந்தவனே மனிதப்பிறப்பின் பயனையடைந்தவனாவன். இந்நிலையை யத்தியாவசியகமாக ஒவ்வொருவரும் பெற வேண்டுமென்பது பற்றியன்றோ, நனவிற் சுழுத்தியைப் பெற்று ஞானாநந்த வடிவமாய் விளங்கிய திருவெண்காடனார், "சினந்தனை யற்றுப் பிரியமுந் தானற்றுச் செய்கையற்று, நினைந்தது மற்று நினையா ததுமற்று நிர்ச்சிந்தனாய்த், தனந்தனி யேயிருந் தாநந்த நித்திரை தங்குகின்ற, அனந்தலி லென்றிருப் பேனத்த னேகயிலாயத்தனே" என்று வற்புறுத்திக் கூறினர். இந்நிலை எந்நிலையினும் மேம்பட்டு இனிப்பிறவா திருக்குர் நிலையைத்தருவதாயிருத்தலின் சிவராஜயோகமென்னுமிதனை உலகத்தின் நிலையாமையினையும், நினையாதபோது நோயும் சாவும் வருமென்பதனையும், நன்றாகச் சீர்தூக்கிப்பார்த்து விரைந்து சென்று சற்குருமூர்த்தியை யடைந்து அம்மூர்த்திவாயிலாக வடைதலே தகுதியாம்.

"குருமார்க்க மில்லாத குருடருடன் கூடிக், கருமார்க்கத் துள்ளே கருத்தழிந்து கெட்டேனே" என்று பட்டினத்தடிகள் கூறுவதையுன்னி நோக்கி, இடம்பாசாரமுடைய குருமார்களை யொழித்துப், பொன்னைப் பொருளைப் புகழை விரும்பாது தன்னையளிக்குஞ் சதாசாரியனை யடுத்து ஏற்கத்தக்கவாறு தொண்டு புரிந்து கருமபந்தமொழிவதொன்றையே கருதியிருப்போர்க்கே, சிவசொரூபமாந் தேசிகமூர்த்தியால் சும்மாவிருக்கும் நிலை யுள்ளபடி யுபதேசிக்கப் படுமாதலின், நெறிப்பட்ட சற்குருவாயிலாகச் சும்மா விருத்தற்குரிய நேர்வழியை யடைதலே உத்தம பரிபாகிகளது கடமையாகும்.

ஒரு காலத்தி லொருபெரியவர் ஒருநாள் தம் மெதிர்ப்பட்ட கூலிவேலை செய்பவர்களை நோக்கி, அவர்கள் படும் கஷ்டத்திற்காக மிகவும் மனவிரக்கங்கொண்டு அவர்களை யழைத்துக் கிட்டவிருக்கச்செய்து, நீங்கள் ஏன் இவ்வாறு கஷ்டப்படவேண்டும்? நாளொன்றற்கு உங்களுக்குக்கிடைக்கும் கூலியை நான்கொடுத்துவிடுகிறேன், நீங்கள் நான் சொன்னபடி நடந்துகொள்ளுகின்றீர்களா வென்றுகேட்டார். அதற்கவர்கள் சம்மதித்து நீங்கள் சொல்லுகிறபடி நடந்து கொள்ளுகின்றோமென்றார்கள். அப்பெரியவ ரவர்களை ஸ்நானஞ்செய்து திருநாமந்தரித்துக்கொள்ளும்படி செய்து நீங்கள் சாவதானமா யோரிடத்தி லுட்கார்ந்திருந்து, ராம ராம, கிருஷ்ண கிருஷ்ண என்று சொல்லிக்கொண்டிருங்கள் என்

ரூர். அவர்கள் அப்படியே சில நேரஞ்சொல்லிவந்தபோது, அது பெருங்கஷ்டமாயும், தாங்கள் முன்பு செய்துவந்த வேலை சுகமாயும் இருக்கக்கண்டு இந்தத் தொந்தரவான வேலை யெங்களுக்கு வேண்டாமென்று போய்விட்டார்கள் என்று வழங்கிவரும் கதையை உற்று நோக்கும்போது சும்மாவிருக்கும் நிலையைப் பெறுவது பெருங்கஷ்டமெனத்தோன்றும்; பெருங்கஷ்டமென வெண்ணாது முயலுபவர்க்கே அஃது எளிதாகச் சித்திக்கும்.



## 18. அன்புடையவரே அடைவர் வீடெனல்.

(1 - 5 - 1911).

யாதாவதோன்றை நாமடைய வேண்டின், அஃதெவ்வாறு கிடைக்கும்? எப்போது கிடைக்கும்? என்று சிந்திக்கின்றோம்; அதனை எவ்வாற்றாலேனும் அடையவேண்டுமென்று முயல்கின்றோம்; அஃதடையப் பட்டால் களிப்புறுகின்றோம்; அடையப் படாமற்போனால் கவலையுறுகின்றோம்; இங்ஙனமாகப் பரமேசுவரனது பாதகமலங்களை யடையவேண்டிச் சிந்திப்பதுமில்லை; சிந்தித்தாலும் முயல்வதுமில்லை; முயன்றாலும் இடையிடையே நேரிடும் தடைகளால் அடையாதொழிகின்றோம். அத்தடைகளை யொழிக்கப் பிரயத்தனப்படுவோமாயின், அவை யொழியப்பெற்றுப் பரமேசுவரனது பாதகமலங்களைத் தவறாதடைந்து நன்னிலைக் காளாவோம்.

"வேண்டேன்புகழ் வேண்டேன் செல்வம் வேண்டேன் விண்ணும் மண்ணும்" என்றுலக போகங்களி லொன்றையும் விரும்பாது, ஏழைகள் முகம் பார்த்திரங்கித் தத்தமக் கியன்றவளவாக அவர்கட்கு உண்டி யுடை முதலியவற்றை யீந்து, ஒவ்வொருவரையும் தத்தம் சகோதரராகவும், மனைவியொழிந்த மற்றையமாதர்களை மாதாவாகவும், தம்முடம்பை மலமூத்திரக்கேணியாகவும், அறஞ்செய்வதுபற்றி நாளைக்குப் பார்த்துக்கொள்ளுவோமென்று கருதாது நாள்கழிதலை நமன் சமீபித்து வருவதாகவும் சிந்தித்துப் பரமேசுவரனது பாதகமலங்களை யடைதற் கேதுவாகிய கர்மங்களைச் செய்பவர்களே ஈடும் எடுப்புமில்லாத பரமேசுவரனது திருவடியை யடையப் பெறுவர். அவர்க்குத்தாம் பரமேசுவரனது திருவடியை யடைந்தபோது மகிழ்வும், அடையாத

போது கவலையுமுண்டாகும். பரமேசுவரனது பாததாமரையை யடைவது பெருங் கஷ்டமாமென்று கருதுதல் கூடாது; அவன் ஏழைபங்காளனாதலினால் சிற்றறிவு, சிறுதொழில் முதலியவற்றால் ஏழைகளாயுள்ள நம்மை அடிமை கொள்ளாதுவிடான், விடான்; அவன் நம்மை அடிமைகொள்ளா திருப்பதற்குக் காரணம் நமது தவறேயாம். அத்தவறாவது நாம் அவனிடத்து அன்பு செலுத்தாமையேயாம். நாம் அவனிடத்தில் பூரணமான அன்பைச் செலுத்துவோமாயின், அவன் நம்மையாட்கொள்ளாது விடுவதேயில்லை.

நாம் பரமேசுவரனிடத்து அன்பு செலுத்தாமலாயிருக்கின்றோம். சிதம்பரம் ஸ்ரீரங்கம் முதலிய திருப்பதிகட்குச் சென்று சுவாமிதரிசனம் செய்ய வில்லையா? விபூதி அல்லது நாமமுதலியவற்றைத் தரிக்கவில்லையா? "நமசிவய" என்னும் பஞ்சாக்கரம், "ஓம் நமோ நாராயணாய" என்னும் அட்டாக்கரமுதலிய மந்திரங்களைச் சபம் செய்யவில்லையா? பரமேசுவரனை நினைத்துத் தானதருமங்களைச் செய்யவில்லையா? ஏன் அவன் நம்மையாட்கொள்ளாது பராமுகமாயிருக்கின்றானென்று சிலர் வினவுதல்கூடும். இவையாவும் அன்பில்லா விடத்துப்பயன் தருவன வன்றா மாகலின், அன்பே எல்லாவற்றிற்கும் முக்கியமாகும். கண்ணப்பநாயனார் நீலகண்டனாகிய பரமேசுவரனது திருவடிக்காளாயது அன்பினாலன்றி வேறெதனால்? இதனாலன்றோ அன்பே வடிவமாகவிளங்கிய மணிவாசகப்பெருமான் "கண்ணப்பனொப்பதோ ரன்பின்மை" என்று திருவாய்மலர்ந்தருளினர். இதனால் பரமேசுவரனது பாதபங்கயத்தை யடைதற்குரிய சாதனம் அன்பன்றிப் பிறிதொன்று சாட்சாத்தாகவில்லையென்பது நன்றாக விளங்குகின்றது. இதுபற்றி யொருவைணவப் பெரியார் "நானடிமை கொள்ளவிடாய் நானேனெம்பெருமான், றானடிமை கொள்ளவிடாய் தானானன்" என்று கூறியதிங்கு நன்கூன்றி யறியத் தக்கதாம்.

பரமேசுவரனிடத்து அன்புசெலுத்துவது பல திறத்தனவாம். சிறுத்தொண்டநாயனார் அம்பிகை பாகனாகிய வெம்பெருமானுக்கு அன்பு செலுத்தியது தமதுபெறுதற்கரிய புத்திரனைக்கொன்று கறிசமைத்து உணவாகப் படைத்தன்றோ! சவரியென்பவள் எல்லாம் வல்ல விராமபிரானுக்கு அன்புசெலுத்தியது கடித்துக் கடித்துச் சுவைபார்த்து வைத்திருந்தபழங்களை யுண்ணக்கொடுத்தன்றோ? இவற்றையெல்லாம் நோக்குமிடத்துப் பரமேசுவரன்

நம்மிடத்துக் கருணை புரிவதற்குக் காரணம் நாம் அவனிடத்து மனமொழி மெய்களொத்துச்செய்யும் அன்பே யென்பது நன்கு விளங்கும். திரிகரணமும் ஒத்துச்செலுத்தும் அன்பில்லாவிடத்து எத்தகைய பூசையாலும் எத்தகைய சேவையாலும், எத்தகைய யாத்திரையாலும் பயனின்றும். தம்முளத் தன்பின்றி யுலகத்தார் வியந்து கொண்டாடச்செய்யும் பூசை முதலியவற்றை எல்லாம் வல்லவிறைவ னேற்றுக் கொள்ளுவதில்லை யென்பது "கையொன்று செய்ய விழியொன்று நாடக் கருத்தொன் றெண்ணப், பொய்யொன்று வஞ்சக நாவொன்று பேசப் புலால்கமழும், மெய்யொன்று சாரச் செவியொன்று கேட்க விரும்புமியான், செய்கின்ற பூசையெவ் வாறுகொள் வாய்வினை தீர்த்தவனே" என்று துறவினர்க் கரசாய்த் துன்பமற்றிருந்த பட்டினத்தடிக ளருளியிருப்பதைச் சிறி துற்று நோக்கினல் விளங்காமற்போகாது.

"அன்பு சிவமிரண் டென்பர றிவிலார், அன்பே சிவமாவ தாரு மறிகிலார்" என்று திருமூலமூர்த்திகள் திருவாய் மலர்ந்தருளியிருப்பதால் சிவத்திற்குருவம் அன்பே (ஆநந்தமே) என்பது பெறப் படுகின்றது. நாம் அன்புருவமாக விளங்கினுற்றுன் அன்புருவசிவத்தைவேற்றுமையின்றி யடைதல்கூடும். தேகமே ஆத்மா (மாதர்) போகமே முத்தி, உலகம்என்றுமழிவுறாதது; கடன்வாங்கியேனும் சுவைப்பட வுணவுண்ணல் வேண்டுமென்னும் விபரீத புத்தியினுற்றுன் நம்முடைய அன்புருவம் விளங்காதிருக்கின்றது. அன்புருவாய சிவத்தினிடத்துச் செலுத்தும் அன்பால் (பிரீதியால் அல்லது பத்தியால்) மன மொருமுகப்படுதல் வாயிலாக உண்டாகும் யதார்த்த ஞானத்தினுற்றுன் இவ்விபரீத புத்திநிவிர்த்தியாம்;நிவிர்த்தியாகவே, தடை நீங்கியபோது ஆற்றுநீர் கடனீராக விளங்குவதுபோல, சுபாவசித்தமாக அன்புருவாயுள்ள நாம் அவ்வாருகவுள்ள சிவமாகவே விளங்குவோம். சிவம்பிறப்பிறப்புமுதலிய துவந்துவங்களற்றதாகலின், அன்பின் வாயிலாகச் சிவமாயபோதுதான், நாம்மேற்படி துவந்துவங்களின்றி யேகவடிவாய் விளங்கும் நிலையைப்பெறுவோம். இங்குக்கூறிய இவ்விஷயம் திருநாவுக்கரசு சுவாமிகள் "என்னில்யாரு மெனக்கினி யாரில்லை, என்னி லும்மினி யாெருவ னுள, னென்னு ளேயுயிர்ப் பாய்ப்புறம் போந்துபுக், கென்னுள்ளே நிற்கு மின்னம்பரீசனே" என்றருளியிருப்பதால் நன்குவிளங்கும்.

ஒருவருள்ள விடத்திற்கு மற்றொருவர் அவரைக் காணச் செல்லும் போது அவரது தகுதிக்கேற்றவாறு மற்றவர் சென்றாற்றான் அவரைக்காணுத லியையும்; இல்லாவிடின், காணுதல் பெருங்கஷ்டமாகமுடியும். இது குசேலமாமுனிவரது திவ்விய சரித்திரத்தால் நன்குவிளங்கும். குசேலமாமுனிவர் அரசரைக்காணுதற்குரியவேடத்தோடு போகாமையினாற்றான் துவாரகையின் கோட்டைவாயிற் காவலரால் உள்ளேபோகமுடியாது சிலநேரம் வருத்தமுற்றனர். சூக்குமப்பொருள்க ளெல்லாவற்றினும் அதிசூக்குமமாயுள்ள பரம்பொருளை யடைந்து பிறப்பை யொழிக்கவேண்டின் நாமும் நம்முடைய மனத்தை (பத்தியோகமென்னும்) அன்பினால் அதிசூக்கும மாக்கவேண்டும். அதிசூக்கும மாக்குதலாவது மனத்தினிடத்து விஷயபோகத்தில் விருப்பும் துர் எண்ணமும் இல்லாதிருக்கச் செய்தலாம். அதிசூக்குமமான மனதைப் பெற்றாற்றான் நாம் அதிசூக்குமமான பரசிவத்தை யடைந்து துன்பமகலப்பெற்று இன்புருவமா யிருப்போம்.



## 19. பிறவியின் பயனைப் பெறுநெறி யுரைத்தல்.

(8 - 5 - 1911).

கடலலையாற் சுழன்று சுழன்று கொண்டிருக்கும் நுகத்தடியின் துளையில் ஆமையின் கழுத்து நுழைவதே யின்றாம். விரோதமுடைய யாதாவதொன்று தனக் கெதிரே தோன்றினால் தனது (கால்கள் நான்கு தலை யொன்று மாகிய) அவயவங்க ளைந்தையுமுள்ளே யிழுத்துக்கொள்வது ஆமையின் சுபாவமாயிருத்தலின், அதனது தலை யெங்ஙனம் நுகத்தடியின் துளையில் நுழைதல் கூடும்; கூடுமாயினும் அலையாலோயாது சுழன்று கொண்டிருக்கும் நுகத்தடியின் துளையில் நுழைதல் கூடுமோ? ஒருசமயம் தெய்வகதியால் நுழைதல் போல்வதாம் சீவனுக்கு மனித சரீரங்கிடைப்பது. இவ்வா றருமையாகக் கிடைத்துள்ள மனித சரீரத்தா லாம் பயனை யடையாது வீணே போய்விடுவோமாயின், நம்மையே நாம் வஞ்சித்துக்கொள்ளும் மதியிலிகளாவோம். மனித சரீரங்கிடைத்தது கேவலம் உலகபோகத்தை யனுபவித்துச் செத்துப் போவதற் கன்று; மற்றியாதுக் கெனின், சித்த ஜயஞ்செய்து மோட்சமடைதற்பொருட் டேயாம். மனித சரீரத்தின்கணன்றி யேனைய பசுபட்சிமுதலிய சரீரத்தின்கண் மனவுணர் வென்னும் பகுத்

துணர்வு செவ்வையாக விளங்குவ தில்லையாகலின், மனவுணர்வோடுங் கூடிய மனித சரீரத்தினுலாம் பயனை யடையாதுவிடுதல் தகுதியாகாது.

மன வுணர்வாவது இங்கே கேவலம் ஜடபதார்த் தங்களைப் பிரித்தறிவ தன்றும்; ஜடபதார்த் தங்களை முற்றும் பிரித்தறியக் கோடிகாலங் கிடைத்தாலும் அவை போதா. "இஃ திதனினும் வேறு"; அஃதாவது படம் கடத்தினும் வேறு என்றறிவதே பிரித்தறிவதன் ரூபமாம். காணப்பட்டும், கேட்கப்பட்டு முள்ள வுலக பதார்த்தங்கள் அளவிறந்தனவா யிருத்தலின், அவற்றை முற்றும் பிரித்துணருவது இப்புருஷ வாயுளால் முடியுமா? முடியாதென் பது யூகித்து நோக்கு மொவ்வொரு வர்க்கும் விளங்காமற் போகாது. லௌகிக வியாபார நிமித்தம் சிலவற்றை மாத்திரம் நாம் இஃ திதனினும் வேறு என்று பிரித்தறி கின்றும்; எல்லாவற்றையும் பிரித்தறிதல் கூடவே கூடாது; கூடுமாயினும் அவற்றுலாகும் பயன் நமக்கொன்று மின்றும்; பயனிருக்கு மாயினும், அது மிகு வற்பமேயாகும். காக்கைக்குப் பல்லெத்தனை? கடிக்கு மயிரெத்தனை? என் றறிவதாலாம் ப்யன் யாதோ? மேலே மனவுணர்வென் றது நான்யார்? அஃது உடம்பா? அதனினும் வேறு? வேறுயின், அணுவா? மகத்தா? சகுணமா? நிர்க்குணமா? என்றற் றெடக்கத் தனவாக விசாரித்தலும், இச்சரீரம் எனக்கேன் வந்தது? வருவானேன்? இதுவாது நீங்கிப்போமோ? அதற்குபாயம் யாது? என்றற் றெடக்கத் தனவாக விசாரித்தலும், பிறவுமாம். இவ்வாறு விசாரித்துத் தெளிந்தவர்க்கே சித்தத்தை ஜயிக்கு முபாயம் எளிதில் விளங்கும்; சித்தஜயம் பெற்றவரே முத்திபெற்றவ ராவரென்பது சான்றோர்களது துணிபா யிருத்தலின், சித்த ஜயம் பெறுதற் பொருட்டு ஆத்மா இன்னது அநாத்மா இன்னது என்னும் விசாரம் அவசியம் செய்தல்வேண்டும். இவ்விசாரம் மனித வுடம்பைப் பெற்ற ஜீவர்க்கன்றி மற்றைய ஜீவர்க்குப் பொருந்துவ தன்றுயிருத்தலின், மனிதவுடம்பைப் பெற்றுள்ள நாம் இனியாவது காலத்தை வீணுக்காது எடுத்துக்கொண்ட மனிதப்பிறப்பின் பயனை யடைதற் பொருட்டு, குருமூர்த்தியை யடுத்து அவரிடத்து ஆப்தம், அங்கம், ஸ்தானம், சற்பாவமென்னும் நால்வகைச் சேவையினையும் புரிந்து ஷ விசாரஞ் செய்தாற்றுன் பயன் பட்டவர்களாவோம்; தத்துவ வித்துக்களா (மெய்யுணர் வுடைய வர்களா)

லும் இவ்வதிகாரிபுருஷராவரென்று கருதப்படும் பாக்கியத்தையும் பெறுவோம். தத்துவ வித்துக்களால் இவ்வதிகாரி புருஷரென்று யாவர் கருதப்படுகின்றனரோ அவர் தவறாது குருவினது கருணைக்குப் பாத்திரராவர். குருவின் கருணையைப் பெற்றவர்க்குக்குறை வென்ன விருக்கும்? ஒரு குறைவுமின்றாம். பிறந்துபிறந் திறந்திறந்து வரும் குறைவிலும் வேறு குறைவு ஒன்றுமின்றாம்; அக் குறைவு குருநாத னனுக்கிரகம் பெற்றவர்க்கு நீங்கிப் போதலின், ஒருகுறைவு மில்லாது சுகவாரிதிபாய் விளங்குகின்றவ ரவரன்றிப் பிறரன்றாம்.

(1) குருமூர்த்தி விரும்பிய வாறு அவர்க்கு அனுகூலமான காரியங்களைச் செய்தல் ஆப்தமாம். (2) குருமூர்த்தியினது பாத தாமரை மலர்களை வருடல் (பிடித்தல்) அங்கமாம். கொடியவரில் மிகக்கொடியவனா யிருந்த சசிவர்ணன் அதிகாரி புருஷனானது இதனாலேயாம். அது "நன்றாய் முனிதாள் வழிபாடதனால் நானா விதமா னபிறப் பிணைவிட், டொன்றா கியவீ டணைருத்தமர்கட்குள சா தனநான் குமுதித் தனவே" என்று சசிவர்ண போதங் கூறுவதனால் இனிது விளங்கும். சற்குரு மூர்த்தியின் பாதம் வருடும் பாக்கியம் எவர்க்குக் கிடைக்கும்? அஃது உத்தமமான பரிபாகிகட்கன்றோ கிடைக்கும். அப்பணி யொன்றை மாத்திரம் உள்ளன் போடு செய்யப் பெறும் பாக்கியம் பெறுவோ மாயின், நம்மைப் பார்க்கிலும் மேம்பட்ட புருஷர் யாவரிருக்கப் போகின்றனர்? இதனாலன்றோ பட்டினத்தடிகள் "திருவடிபிடித்து வெருவுறல்விட்டு" என்று திருவாய் மலர்ந்தருளினர். (3) சற்குருமூர்த்தி இல்லற வொழுக்க முடையவரா யிருந்தால் அவரது இல்லற வொழுக்கங் குறைவற நடைபெறுதற்பொருட்டு, அவர்க்குரிய வீடு காணி முதலிய வற்றைப் பழுதுண்டாகா வாறு பாதுகாத்தலும், துறவற வொழுக்க முடைய வராயிருந்தால் அவ்வொழுக்கங் குறைவற நடைபெறுதற் பொருட்டுக் கமண்டல முதலியவற்றை நன்றாகப் பாதுகாத்தலும் ஸ்தானமாம். (4) குருநாதனைப் பிரத்தியட்சமாக வந்தகடவு ளென்று கருதுவதே சற்பாவமாம். இச்சற்பாவ மில்லாதவிடத்து வேறு சாதனங்கள் மிகுதியாகப் பயன்தருவன வன்றாமாகலின், சற்பாவத்தைப் பூரணமாகப் பெற்றவர்களே விரைவாகத் தத்துவஞான வாயிலாகச்சீவன்முத்தி ஸ்திதியைப் பெறுதற்குரியவராவர். திருமந்திரம் "குருவே சிவமெனக், கூறின னந்தி,

குருவே சிவமென் பதுகுறித் தோரார், குருவே சிவமாகிக் கோனு மாய் நிற்கும், குருவே யுரையுணர் வற்றதோர் கோவே" என்று கூறுவதின் கூன்றி யறியத் தக்கதாம்.

ஒருவன் நிஷ்காம கருமஞ்செய்து பாவத்தையும், ஈசுவரோ பாசனை(ஈசுவரத் தியானம்)செய்து மனக் கலக்கத்தையும் ஒழிக்கா திருப்பினும், அவன் சரீரம், வாக்கு, மனம், தனமென்பவற்றால்"உன்பற் றொழிய வொருபற்று மில்லை யுடையவனே" என்று மேலோர் கூறியவாறு ஒருபற்றுமின்றி, ஈசுவரபுத்தியால் குருசேவை செய்வானாயின், அதனால் அவனுக்கு நிஷ்காம கர்மத்தின் பயனான சித்தசுத்தியும் ஈசுவரோபாசனையின் பயனான ஏகாக்கிரகமும் (சித்தமொரு முகப்படுதலும்) உண்டாவதா யிருத்தலின், குருசேவையினும் மேலான சேவை ஒன்றுமின்றாம். இதனாற்றான் மாணிக்கவாசகர், தத்துவராயர் முதலிய மகாத்துமாக்கள் குருசேவயினையே பெரிதும் விரும்பி யிருந்தார்கள்.

(1) தேசிகமூர்த்தி கட்டளையிட்டவாறு நடந்துகொள்ளல் சரீரார்ப்பணமாம்; (2) குருநாதனை மறந்தும் நிந்தைபுரியாது சொப்பனத்திலும் ஸ்தோத்திரஞ் செய்தல் வாக்கர்ப்பணமாம்; (3) ஈசுவரபாவத்தால் குருத்தியானஞ்செய்தல் மனவர்ப்பணமாம்; (4) பொருள் விஷயத்தி லுலோபகுண மின்றிக் குருபரனிடத் தொழுகுதல் தனவர்ப்பணமாம்; இந்நான் கர்ப்பணமும் அதிகாரி புருஷர்களிடத் தவசிய மிருக்கும்.

"எண்ணரிய பிறவிதனின் மானிடப் பிறவிதா னியாதினு மரிதரிதுகாண்" என்று தாயுமானப் பெருந்தகையா ரருளியிருத்தலைச் சிரமேற்கொண்டு விரைந்து சென்று குருபரனை யடைந்து விசாரஞ்செய்து சித்தஜயம் பெற்றுச் சீவன் முத்தி ஸ்திதியைப் பெற்றவரே மனிதப் பிறப்பின் பயனைப் பெற்றவராவ ரென்பதொருதலையாம். ஒருதலை - நிச்சயம்.



## 20. உண்மை நிலையினை யுணர்நெறி கிளத்தல்.

(15-5-1911.)

மாசுபடர்ந்த கண்ணுடையவன் தான் காணுகின்ற வஸ்துக்களுள், எதனையும் பொதுவகையாக வறிவானேயன்றிச் சிறப்புவகையாக வறிவதில்லையாம். அவன் தனக்குரிமையாயுள்ளவர்களோடு

பார்வை விசேஷத்தைப்பற்றிப் பேசுங்கால் "உன்முகம் எனக்குப் பளிச்சென்றுதெரியவில்லை; திரைகட்டினாற்போற் றெறிகின்றது" என்று கூறுகின்றானென்பது நம்மனோருட் பலரறிந்த விஷயமேயாம். அவன் இது கடம், இது படம் (ஆடை) என்றற்றொடக்கத்தனவாகப் பொது வகையாக வறிவானேயல்லாமல், இக்கடமின்ன மேம்பாடுடையது, இக்கடமின்ன மேம்பாடில்லாதது, இப்படம் இன்ன மேம்பாடுடையது, இப்படம் இன்ன மேம்பாடில்லாதது என்று சிறப்புவகையாக வறிவதேயில்லையாம். கண்ணின்கண் மாசில்லாதவனோ தான் காணும் எதனையும் சிறப்புவகையாக வறிதற்குத் தடையே யின்றாம்; எவன் சிறப்பு வகையாக வொன்றை யறிகின்றானோ அவனதைப் பொதுவகையாக வறிந்தேயிருத்தல் வேண்டுமென்பது நியமமாம். மாசுபடர்ந்த கண்ணுடையவன் மாசு நீங்கப்பெற்றால் எதையும் செவ்வையாகக் காணுதற் குரியவனுவா னென்பதுபற்றிச் சொல்லவும் வேண்டுமோ? மாசுபடர்ந்த கண்ணுடையவன் மாசினையொழிக்கப் பலவகை யாலும் முயன்று வருவது மிகு பிரசித்தமாம். நமது பரலோக வியவகாரமும் இவ் விஷயத்திற் கிணக்கமாக விருக்கின்றதென்பது நாம் கவனித்துப் பார்த்தால் விளங்காமற் போகாது.

நாம் அநாதியாகவே அஞ்ஞானத்தினுல் மூடப்பட்டிருக்கின்றோம். அதனுல் நாம் நமது சொரூபத்தையும், ஈசுவர சொரூபத்தையும், உலக சொரூபத்தையும் பொதுவகையாக வறிகின்றோமே யன்றிச் சிறப்பு வகையாக வறிகின்றோ மில்லை. நாம் எவ்வியவகாரத்திலும் நான் நான் என்று வியவகரித்து வருகின்றோமேயன்றி, அந்த நானென்பது எத்தன்மையதென்று விசாரித்துணரா திருக்கின்றோம். ஒரு பொழுது நானிப்போ திளைத்திருக்கின்றேனென்று கூறுகின்ற நாம் மற்றொரு பொழுது எனதுடம்பு இப்போ திளைத்திருக்கின்றது, அல்லது பூரித்திருக்கின்றதென்று கூறுகின்றோம். இவ்வாறு கூறுவதனுல் ஒருபொழுது உடம்பு உடையவனுகவும், மற்றொருபொழுது உடைமையாகவும் வியவகரிக்கப்பட்டு விருகின்றதென்பது இனிது புலப்படும். நானிளைத்திருக்கின்றே னென்னும் போது உடம்பு நான் என்னுஞ் சொல்லின் பொருளாக விளங்குகின்றது; என்னுடம்பு பூரித்திருக்கின்றதென்னும்போது உடம்பு எனதென்னுஞ் சொல்லின் பொருளாக விளங்குகின்றது. நான் (உடையவன்) என்பதன் பொருளும் என

து (உடைமை) என்பதன் பொருளும், இங்கு ஒன்றாக இருப்பது பொருந்தாமையின், நான் என்பதன் பொருளை நாம் சிறப்பு வகையாக வுணரா திருக்கின்றோ மென்பது வெள்ளிடை மலை போல் விளங்கும்.

உலகம் காரியவடிவமாக விருத்தலால் இதற்கொரு கர்த்தாவிருத்தல்வேண்டும்; அக்கர்த்தா நம்மைப்பார்க்கிலும் விசேஷமாக வறிவாற்றல் முதலியவற்றை யுடைத்தாயிருத்தல்வேண்டும்; அக்கர்த்தாத்தான் சுவாமியென்று பொதுவகையாக வறிகின்றோமே யன்றிச் சிறப்புவகையாக அக் கர்த்தா இன்ன தன்மையனென்றறிகின்றோமில்லை. "குப்பை மேட்டின்மீதேறிக் கோழிபிடிக்காத குருக்களா வானத்தைக்கீறி வைகுண்டங் காட்டப்போகின்றார்" என்னும் பழமொழிக் கிணக்கமாக நின்று நான் (ஆத்மா) என்பது இத்தன்மையதென்று செவ்வையாக வறியாதுள்ள நாமா உலக காரணமாயுள்ள பரமேசுவரனது சொரூபத்தை யறியப்போகின்றோம். "அறையிலாடிய பிறகு அம்பலத்தி லாடவேண்டும்" என்னும் பழமொழிக் கிணக்கமாகத் தன்னை (ஆத்மாவை) யறிந்தவரன்றோ தலைவனை (ஈசுவரனை) அறிதற் குரியவராவர். தலைவனது சொரூபம் தற்போதம் (யானென தென்னுஞ் செருக்கு) உள்ளவருக் கொருபோதும் விளங்குவதே யின்றாம். தற்போதம் அற்றபோதுதான் தனது ஆத்மாவின் சொரூபமும் தலைவனது சொரூபமும் பகலவன்போல விளங்கும். தற்போத முள்ளவர்களுக்குத் தலைவனது சொரூபம் செவ்வையாக விளங்குவதில்லை யென்பது "மைப்படிந்த கண்ணாளுந் தானுங் கச்சி மயானத்தான் வார்சடையான் மாசொன் றில்லான், ஒப்புடைய னல்ல னொருவ னல்ல னோரூர னல்லனோ ருருவ மில்லி, அப்படியு மந்நிறமு மவ்வண்ணமு மவனருளே கண்ணாகக் காணி னல்லால், இப்படிய னிந்நிறத்த னிவ்வண்ணத்த னிவனிறைவ னென்றெழுதிக் காட்டொணாதே" என்று வாகீச முனிகள் (அப்பர் சுவாமிகள்) திருவாய் மலர்ந்திருத்தலானு மினிது தோன்றும்.

தனது (ஆத்மாவின்) சொருபமும் தலைவனது சொரூபமும் சிறப்புவகையாக வறியப்பெற்றவர்க்குத்தாம் உலகம் சிறப்புவகையாக வறியப்படுவதாகும். உலகத்தின்சொரூபம் சிறப்பு வகையாக விளங்கியபோது தான் உலகவாசை முற்றும் நீங்கும்; உலகவாசை

நீங்குவது சாமானியமாய காரியமன்று. உடம்பி னிடத்துநானென் னும் புத்தி செவ்வையாக நீங்கினவர்க்குத் தாம் உலகவாசை நீங் கும். உலகத்தின் பொது வடிவமாவது காரியவடிவமாக விளங்குத லாம்: அஃதாவது இது கடல், இஃதாறு, இது சூரியன், இது சந் திரன் என்றற் றொடக்கத்தனவாக விளங்குதலாம்; சிறப்பு வடிவ மாவது காரணவடிவமாக விளங்குதலாம்: அஃதாவது பரமேசுவர வடிவமாக விளங்குதலாம்.

அநாதியாக மூடியுள்ள அஞ்ஞானம் எவர்க்கு நீங்குகின்ற தோ அவர்க்குத்தாம் ஆத்மாவின் சொரூபம் ஈசுவரனின் சொரூ பம் உலகத்தின் சொரூபமென்னு மிம்மூன்றும் சந்தேக விபரீத மில்லாமல் விளங்கும்: ஏனையர்க்கோ வெனின், அச்சொரூபங்கள் பொது வகையாக விளங்குமேயன்றிச் சிறப்புவகையாக விளங்கு வன வன்றாம். இவற்றிற்கு உதாரணம் நாமாகவே யிருக்கின்றோம். ஆத்மாவின் சொரூபத்தைச் சிறப்பு வகையாக வுணராமை பற்றி யன்றோ, அநாத்மாவான தேகத்தி லான்மபுத்திசெய்து கோபதா பங்களால் வதைகின்றோம். விரோதி யொருவன் நம்மைநோக்கி "அடா! தடியா! இடிசுவரே! வேசிமகனே! காக்கை மூக்கா! சப் பைக்காலா!" என்றற்றொடக் கத்தனவாக நிந்தித்தால் அந்நிந்தை மொழிகளைக்கேட்டுப் பொறுத்துக்கொள்ளுகின்றோமா? பொறுக் காது "அடா! உன்னை விட்டேனோபார், என்னையா நீ இப்படிச் சொல்லுகிறாய், உன்னை எவ்வளவு ரூபாய் செலவு செய்தாயினும் சிட்சிக்கின்றேன்" என்று கோபாக்கினியாலெழுப்பப்பட்டுக் குதிக் கின்றோமல்லவா? அவன் உயிரை நிந்தித்தானா' உடம்பை நிந்தித் தானாஎன்று சிறிதுகூர்ந்து யோசித்துப்பார்ப்போமாயின், கோபாக் கினியா லெழுப்பப்பட்டுக் குதிக்கமாட்டோம். உடம்பு நாமானால ன்றோ அந்நிந்தை மொழிகள் நம்மைச்சாரும். நாம் உடம்பன்று; உடம்பிலும் வேறாய், அதற்குச்சாட்சியாயுள்ள சிதாநந்த வடிவம் என்று சிறப்புவகையாக நம்மைநா மறிந்திருப்போ மாயின், நாம் ஒரு போதும் கோபதாபங்களால் மொத்துண்டு வதைப்படமாட் டோம்.

"சத்தியம் ஞானம் அநந்தம் பிரஹ்மம்" என்று சுருதி கூறுவ தால் பரமேசுவரன் சச்சிதாநந்தவடிவனென்பது விளங்குகின்றது. நாம் அவஸ்தை மூன்றிலும் மாறாதிருக்கின்றமையால் சத்தாயும், அவற்றை யறிகின்றமையால் சித்தாயும், நம்மைப்பார்க்கிலும் பிரிய

மானபொருள் ஒன்றுங் காணப்படாமையால் ஆநந்தமாயு மிருக்கின்றோம்; இருக்கவே, நமது சொரூபமும் சச்சிதாநந்த வடிவமாம். உலகத்திலுள்ள ஒவ்வொரு பதார்த்தமும் அஸ்தி பாதி (இருத்தல், விளங்குதல்) பிரிய வடிவமா யிருத்தலின், உலகமும் சச்சிதாநாந்த வடிவமாம். இவ்வாறு சிறப்பு வகையாகப் பார்க்குமிடத்து எல்லாம் சச்சிதாநந்த வடிவமாக விளங்கும்; எல்லாஞ் சச்சிதாநந்த வடிவமாக விளங்குமிடத்து யானெனதென்னுந் தற்போதமுண்டாகாது. தற்போத மற்றவர்தாம் சதாநந்தவடிவமாய் விளங்கப்பெறுவர்.



## 21. மாறுதவின்பம் வரும்வழி வகுத்தல்.

22-5-1911.

இது நன்று, இது தீது என்றறிதற் கியைந்த விந்திரியங்களை வாய்ப்பாகப் பெற்ற ஒவ்வொரு பிராணியும் இன்பமொன்றையே கருதி, முயலுகின்றதென்பது பிராணிவர்க்கத்துள் ஒன்றாயுள்ள நமது அநுபவமே சான்று பகரும். நாம் எப்போதும் இன்பமொன்றையே நோக்கி முயன்று வருதலினால், நம்போன்று கரணவியாபாரமுடைய ஒவ்வொரு பிராணியும் இன்ப மொன்றையே நோக்கி முயலுகின்ற தென்பது யூகித்துணர விளக்கமாம். ஆடு மாடு முதலிய மிருக வர்க்கங்களும், காக்கை பருந்து முதலிய பறவை வர்க்கங்களும்,பிறவும் உறங்குங் காலமொழிந்த காலங்களில் யாது செய்கின்றன வென்று சிறிதூன்றிப் பார்ப்போமாயின், நம்மைப் போன்று அவையும் அருந்துதல் (உண்ணுதல்) பொருந்துதல் (புணருதல்)களி லவா வுடையனவாய் அவற்றா லின்ப முறுகின்றன வென்ப தினிதுபுலனாம். அருந்துதல் பொருந்துதல்கள் சித்திக்கா விடத்து யாதுண்டாகின்ற தெனின் ஒருவர் கூறாமலே விடைபெறப்படும். அஃதாவது துன்பமென்பதாம். இதனால் துன்பந்தோன்றிய விடத்தன்றி இன்பந் தோன்றுவ தில்லை யென்பது பெறப்படுகின்றது. அருந்துதல் பொருந்துதல்களிலேயே அவாவுற்று, அவற்றால் வரும் இன்பத்திற்காக அங்காந்து (வாய்திறந்து) கொண் டிருக்கும் நாம் இன்பத்தை யநுபவிக்கும் காலத்தும் துன்பத்தையே அநுபவித்து வருகின்றோம். அவ்வாறநுபவித்து வருகின்றோ மென்பது அவை நம்மைவிட்டுப் பற்றற நீங்கும்போது நன்றாக விளங்கும்.

அருந்துதலுக்கும் பொருந்துதலுக்கும் காரணமாயுள்ள பொருள்கள் மாறிமாறி வருவனவாயிருத்தலின், அவை எவ்வாறு மாறாத இன்பத்தைத் தருவனவாம்? மாறிப்போகின்ற வின்பம் தான் மாறும்போது எதைத்தந்து போகின்றதென்றாலோ துக்கத்தைத் தான் தந்துபோகின்றது? வேறெதைத் தந்துபோகின்றது? ஒன்றுமின்றே! வயிறுநிரம்பப் பலகார வர்க்கங்களோடும் பழவர்க்கங்களோடும் அன்னத்தை யாவலுட னுண்பவர்கள் துன்பத்தையன்றி வேறெதைப் பெறுகின்றார்கள்? இதை யூகித்துப்பார்க்குமிடத்து மாறிப்போகுமின்பமெல்லாம் இறுதியில் தம்மளவினும் பதினாயிரமடங்களவாகத் துன்பத்தை நிச்சயமாகத் தருகின்றன வென்பது விளங்காமற் போகாது. காணப்படும் பொருள்களுள் ஒவ்வொன்றும் துக்கமயமா யிருக்கின்றதே யன்றிச் சுகமயமா யுண்மையாக வில்லையென்பது அருந்துதல் பொருந்துதல்களைப் பற்றிச் சிறிது விசாரித்துப் பார்ப்பவர்க்கு நன்கு விளங்கும்.

காணப்படும் பொருள்களுள் யாதொன்றும் மாறாத வின்பத்தைத் தருவதற்குக் காரணமாவதில்லை; இறுதியில் எல்லாம் துன்பமயமாகவே இருக்கின்றனவென்று விளங்கிய வறிவுடையவர் தாம் மாறாத வின்பதத்தைப் பெறு மார்க்கத்தைத் தேட முயலுவர். மாறாதவின்பம் மனமொருமுகப்படுதலாலன்றி வேறெதனாலும் விளங்குவதன்றாகலின் அவ்வின்பத்தைப் பெறுதற்பொருட்டு மனமொருமுகப்படுதற்குரிய சாதனத்தை யவசியம் சம்பாதித்தல் வேண்டும். தன்னுடைய (ஆத்மாவினுடைய) சொரூபம் இன்பவடிவமாகவே இருத்தலின் அதுவே மாறாத இன்பமாம்; அது மன மொருமுகப்பட்டவிடத்து வெளிப்பட்டுவிளங்குகின்றதென்பது உறக்கத்திற்கு விழிப்பினின்றும் போகுஞ் சமயத்தைச் சிறிதுகவனித்துப் பார்த்தால் விளங்கும். இதைப்பார்ப்பதற்குவேறுசாதனம் ஒன்றும் வேண்டாம். கூரிய புத்தியொன்றே போதும்.

நாம் ஒவ்வொருநாளும் உறங்குமாறு பாய் முதலியவற்றிற் படுத்துக்கொண்டபோது நமக்கொருசுகந் தோன்றுகின்றதே, அந்தச்சுகம் எங்கிருந் துண்டாகின்றது? சுகசாதனப் பொருள்களுள் ஒன்றையும் விரும்பாதன்றோ அச்சுகந் தோன்றுகின்றது? சுகசாதனப் பொருள்களால் தோன்றுகின்றதென்று கூறுவோமென்றா

லோ அதுபொருந்தாது; விழிந்திருக்கும் நிலைமையைவிட்டு,உறங்கப்போகுஞ் சமயத்தில் அன்புள்ள மனைவி வந் தருகே படுத்துக் கொஞ்சிப் பேசிக் குலாவினும் அதைக்கவனியாது போகின்றோம்; சிலசமயம் தூக்கம்வருகின்றது, என்னுடனொன்றும் பேசவேண்டாமென்று வெறுத்தும் பேசுகின்றோம். இவ்வாறாக நாம் அச்சமயத்தில் ஒழுகுவதற்குக் காரணம் அச்சுகத்தின் மீதுள்ள விருப்பமன்றோ? வேறென்ன விருக்கின்றது? அச்சுகம் எதனால்வெளிப்பட்டுத்தோன்றுகின்றது? அஃதெதனாலுசுகம்? என்று விசாரித்துப் பார்க்கின்றோமில்லை; தக்கோரை யடுத்துச்சிறிதுநேரம்விசாரிக்கலாமென்றாலோ விஷய வாசனை மேம்பட்டிருத்தலால் அது நமக்கு முடியாதகாரியம் போலத் தோன்றுகின்றது. விழிப்பிலிருந்து உறக்கத்திற்குப்போகுஞ் சமயத்து வெளிப்படு மின்பம் எதனாது இன்பம்? அது வெளிப்பட்டு விளங்குகின்றதற்குக் காரணம் யாது என்று விசாரித்து, உறக்கத்திற்குப் போகுஞ் சமயத்தில் புத்தியைச் சிதறவிடாது பார்ப்போமாயின், நமக்கு உலகம் அஃதாவது காணப்படும்பொருள் துக்கத்தொகுதியா மென்பதும், பலதலைப்பட்டுவிரிந்து விஷயங்களிலோடும் மனம் திரும்பியுண்முகப்பட்டுச் செவ்வையாகக் குவிதலே இன்பத்தோற்றத்திற்குக்காரணமாமென்பதும் அது தன்(ஆத்ம) வடிவமாமென்பதும் விளங்கும்! தான் இன்பவடிவமென் றுணர்ந்தவன் தன்னைவிரும்புதலன்றி வேறெதனை விரும்புவான்? இன்பவடிவாகிய தன்னை(சுத்தவறிவை அல்லது சிவத்தை)யடையமுயலாது இன்பத்திற்கு மாறாயவடிவமுள்ள உலகப் பொருள்களை விரும்பி யுழலுதல் விழலுக்கு முத்துலை (மூன்றேற்றம்) இட்டடிறைத்தவன் செய்கைக் கினமாயல்லவா விருக்கின்றது.

விழிப்பிலிருந்து உறக்கத்திற்குப் போகுஞ்சமயத்தில் மனமானது இந்திரிய வாயிலாக விஷயங்களிலோடுவதை விட்டு ஆத்துமாவை நோக்கியே யுள்முகப்படுகின்றது;உள்முகப்பட்ட மனத்தினிடத்து ஆத்மாவானது செவ்வையாகப் பிரதி பலிக்கின்றது. ஆத்மாவின்பவடிவமாகவிருத்தால் அவ்வின்பம் அப்போது செவ்வையாக விளங்குகின்றது. அந்நிலை பிரயத்னபூர்வகமாகவடையப்படுமாயின், அப்போது அது சவிகற்பசமாதி யென்று சொல்லப்படும். உறக்கத் திற்குப் போகும்போது 'வெளிப்பட்டு விளங்கும்

இன்பத்தையுற்று நோக்கி நின்று உறக்கத்தைப் பிரயத்ன பூர்வகமாகத் தடுத்து நிற்க வப்பியசிப்பவனுக்குக் கீழ் கீழுள்ளசாதனங்களுள் ஒருசாதனமும் சிறப்பாக வேண்டப்படுவதின்றாம். அந்நிலையைப் பெற்றவன் போகப்பொருள்களுள் ஒன்றையும் விரும்பான். அவனிடத்திற்றான் வைராக்கியம் பூரணமாக விளங்கும். இது "கரும்புந் தேனுங் கலந்ததோர் காயத்தி, லரும்புங் கந்தமு மாகிய வாநந்தம், விரும்பியே யுள்ளம் வெளியுறக் கண்டபின், கரும்புங் கைத்தது தேனும் புளித்ததே" என்னும் திருமந்திரத்தாலும் நன்கு விளங்கும்.

"சுண்ணாம்பிலிருக்கிறது சூட்சுமம், சூட்சுமத்திலிருக்கிறது மோட்சம்" என்றபடி மாறாத இன்பம் மடைவதற்குரியவழி யுறக்கத்திற்குப்போதலைச்சிறிது சிறிதாக நாடோறும் கவனித்துவருகின்றவருக்குத் தவறாது விளங்கும். இஃதொரு அரிய பெரிய சாதனமாமாதலின், இதனைக் குருநாதன் கூறிய படியே செய் தப்பியசிக்க வேண்டும். மனம் போனவாறாக நடப்பவர்க்கு இச்சாதனை யொருபோதும் சித்தியாது. சத்துவகுண வுணவைச் சீரணிக்குமளவறிந்து சிறிது குறைவாக வுண்டு மறந்துந் தீயகாரியங்களைச் செய்ய நினையாதிருப்பவர்தாம் இதற் கதிகாரி புருஷராவர்.

"துன்பந் தோன்றி லெவருந் துறந்திங் கேகராய்த் தனித்தே, யின்பந் தேட லியற்கை யின்ப மொன்றே தோன்றில், அன்பதாக நீங்கார்" என்று குமாரதேவரருளி யிருத்தலைச் செவ்விதாக வுணர்ந்து மனிதப்பிறப்பின் பயனையடைதலே உத்தமமான புருஷார்த்தமாம்.



## 22. நாராயணன்துதி நலமேலாந் தருமெனல்.

(29-5-1911.)

"வைகலும் வெண்ணெய் கைகலந் துண்டான், பொய்கலவாதென் மெய்கலந் தானே" என்று சடகோப ரருளிச் செய்திருப்பதை நோக்குமிடத்து, நாம் பொய்யாயினவற்றை நினையாதும், பேசாதுமிருந்தாற்றான் மறைப் பொருளாய வாசுதேவன் நமதுசித்தத்தின்கண் தானும் பொய்கலவாது வீற்றிருந் தருள்வானென்பது பெறப்படுகின்றது. நாம் எதுகாறும் பொய்யுடலை வளர்த்தற் பொ

ருட்டும், அப்பொய்யுடல் காரணமாகச் சம்பந்தப்பட்டுள்ள மனைவி மக்கள் முதலியவர்களைப் பாதுகாத்தற் பொருட்டும்,பொய்பேசிப் பொருள்சம்பாதித் துழலுகின்றோமோ அதுகாறும் அச்சுதமூர்த்தி நமக்கருள்புரிவதே யின்றாம். பொய்யனைத்தையும் விட்டுமெய்ந்நெறியி லொழுகும் விமலரன்றோ பரந்தாமனருளுக்குப் பாத்திரராவர். இது "பொய்வளரு நெஞ்சினர்கள் காணாத காட்சியே" என்று தாயுமானார் திருவாய் மலர்ந்தருளி யிருப்பதாலும் நன்கு விளங்கும்.

அச்சுதனமலன் பொற்புள வடிமலர்ப்பேறு,ஐம்பெரும் பாதகத்தையும் விட்டு வான் (மேகத்தை) நோக்கும் பைங்கூழ் (பயிர்) போல நாராயணனே நமக்காதாரமா யிருப்பவன், அவனையன்றி வேறாதாரம் நமக்கெவ்விடத்தும் எக்காலத்து மில்லையென்று அவனது கருணை யொன்றையே நோக்கி யிருப்பவருக் கன்றோ வாய்க்கும். கொலை, களவு, காமம், கள்,பொய் என்னும் ஐம்பெரும்பாதகச் செயல்களைப் புரிந்து மனமும் சொல்லும் வேறுபட்டு நடப்பவர்க்குத் தேவதேவனுடைய திருமாலடிமலர் ஜன்மாந் தரத்திலும் சித்திப்ப தில்லையாம். கஜேந்திர னென்னுங் காட்டி யானை முதலை வாயினின் றுந் தப்பிநற்பேறுற்றதௌதனால்?கமலலோசனனது கருணையொன்றையே நோக்கி யிருந்ததனாலன்றா? நாமும் ஒரு முதலையால் பிடிக்கப்பட் டிருக்கின்றோம். அந்தமுதலை மகாக்கொடியது. அதனைவெல்வது மிகவும் அரியது. அம்முதலையாவது கோபமாம். அது நம்மைப் பிடிக்கும் போது எவ்வாறு பிடிக்கின்ற தெனின், நமது மனத்தைத் தன்வசமாக்கிக் கொண்டு, இதுசெய்யத் தக்கது இதுசெய்யத்தகாதது என்னும் புத்தியைக் கெடுத்து, நம்மையடிமையாக்கிப் பிடித்துக் கொள்ளு கின்றது; அதனால் நாம் பல அல்லல் (துன்பங்)களுக்காளாகிப் பிறவிக்கடலின் கரைகாணாது கலக்கமுற் றிருக்கின்றோம். அந்தக் கோபமாகிய முதலையாற் பற்றப்பட்டுத் துறைதெரியாது கலக்கமுறும்நாம் நம்பினவரைக் கைவிடாது காக்கும் நாராயணனடியை நனவினுங் கனவினும் மறவாது தியானஞ் செய்தாற்றான் அம்முதலையை வெல்லுதல் முடியும். நிரந்தரமாகச் செய்யுந் தியானத்தாற் சித்தம் வெளிமுகப் பட்டோடுதலடங்கிச் சாந்தியினைப் பெறுவதா யிருத்தலின், சித்தசாந்தி பெற்றவர்தாம் கோபத்தைக் கொன்றவராவர். சித்தசாந்திக் கேது திருமகள் கணவன் றிருவடித் தியானமா யிருத்தலின், அத்தியானத்

தினை யத்திபாவசியக மாகச் செய்தல் வேண்டும்; செய்தாற்றான் சித்தசாந்தியாகிய சக்கரத்தால் கோபமாகிய முதலையை வெல்லுதல்கூடும். பகவத்தியான மில்லாதவர்க்குக் கோபத்தை முற்றுங் கெடுக்கும்வழி யொருபோதும் சித்திப்பதில்லையாம்.

கோபத்தை முதலையாகக் கூறுவதன்றி (வெருவருகின்ற போக்முதலையையுடையது-பிறவிக்கடலானது அஞ்சத்தக்கசுகதுக்கவனுபவமாகிய முதலையினை யுடையது என்று) போகத்தை முதலையாகக் கூறுவதுமுண்டு. சரீரத்தில் யானென்னும் புத்தியால் காணி மனை முதலியவற்றி லெனதென்னும் புத்தியைச் செய்து, யானெனதென்னு மவ்விரண்டன் காரணமாக நாம்இடைவிடாது சுகதுக்கவடிவ போகத்தால் மொத்துண்டு வருகின்றோ மாதலின், நாமே கஜேந்திரனென்னுங் காட்டி யானையாம். சுகதுக்கவடிவ போகமே முதலையாம். நாம் எப்போது "சிந்தையாலும் சொல்லாலும் செய்கையினாலும் தேவர் பிரானையே, தந்தைதாயென்" றடைந்து "நாரணன் முழுவே ழுலகுக்கும் நாதன்" என்று மாதவனைத்தியானித்தும் துதித்தும் வணங்கியும் வரும்பரம சம்பத்தைப் பெறுவோமோ, அப்போதுதான் நாம் மதுசூதனனுடைய பேரருளால் சுகதுக்கவடிவ போகமாகிய முதலைவாயினின்றும் தப்பி யானெனதென்னும் அகங்கார வடிவ யானையுருவம் நீங்கிச் சிதாநந்த வடிவமாக விளங்கப் பெறுவோம்.

கோபத்தையும் போகத்தையும் முதலையாகக் கூறுவதன்றி, நம்முடைய யதார்த்த வடிவத்தை நமக்கு விளங்காவாறு மறைத்திருக்கின்ற அஞ்ஞானத்தையும் முதலையாகக் கூறுவதுண்டு. திரிகூடாசல மென்னும் மலையி லுள்ளதொரு தடாகத்தில் அகத்திய முனிவரது சாபத்தால் யானைவடிவங் கொண்ட இந்திரத்யும்மனென்னு மரசன், ஒருமகரிஷியின் சாபத்தால் முதலைவடிவமாகவிருந்த ஊகூ என்னும் கந்தருவன் பிடித்ததனால் எல்லையில்லாத துக்கத்தை யடைந்திருந்தாற்போல நாமும் அஞ்ஞானத்தின் வசமா யிருப்பதனால் எல்லையில்லாத துக்கத்தை யடைந்திருக்கின்றோம். முதலை வாயினின்றும் மீள அவ்வியானை சீதரனை நோக்கிப் பூரண விசுவாசத்துடன் நெடுங்காலம் நிரந்தரமாகச் செய்த பிரார்த்தனையாலன்றோ தாமோதரன் தயவுசெய்தெழுந்தருளிவந்து சக்கரத்தை யேவி அம்முதலையைக்கொன்று, அவ்வியானைக்கு முன்னுருவத்தைத்தந் திரட்சித் தருளினர். அங்ஙனமே நாமும் யானெ

னதென்னும் அபிமானத்தைச் செய்வதற் கேதுவாகிய அஞ்ஞான மாகிய முதலைவாயினின்றும் மீள"மிக்க ஞான மூர்த்தி யாய வேத விளக்கினையென், தக்க ஞானக் கண்க ளாலே கண்டு தழுவுவனே" என்று நம்மாழ்வாரருளியவாறு, நிர்க்குணோபாசனை யென்னும் ராஜயோகத்தை நிரந்தரமாகப் பூரண விசுவாசத்தோடு செய்தாற் றான் இருடிகேச னென்னு மெம்பெருமான் குருமூர்த்தியாக வெழுந்தருளிவந்து தத்துவ ஞானோபதேசமாகிய சக்கரத்தால் அஞ்ஞானமாகிய முதலையைக் கொன்று அறிவாநந்தமாயுள்ள நம்வடிவத்தை நமக்கருள் புரிவர்.

"யாவையு மெவருந் தானா யவரவர் சமயந் தோறுந், தோய்விலன் புலனைந்திற்கும்(விஷயமாகச்)சொலப்படா னுணர்வின் மூர்த்தி" என்றுபெரியாரால் கூறப்படும் திரிவிக்கிரமன் தீக்குணமும் தீச்செயலுமுடைய நம்மையு மாட்கொண்டருள் செய்வானோ வென்று கருதுதல்கூடாது. காட்டி யானையையுங் காத்தருளிய கருணாகரக் கடவுள் மனிதவடிவம் பெற்றுள்ள நம்மைக் காவாது விடுவனோ? இதுகாறும் அப்பிரான் நம்மை யாட்கொள்ளா திருப்பதற்குக் காரணம் நமது தவறேயாகும். அக்காட்டியானை பத்தியால் பரவசப் பட்டுத் துதிசெய்தாற்போல, பத்திமிக்கு"ஆடி யாடி யகங்க ரைந்திசை,பாடிப் பாடிக் கண்ணீர்மல்கி யெங்கும், நாடி நாடி நரசிங்கா வென்று" வாடி வாடி நின்றா லன்றோ நம்மைப் பரமேசுவரனாட் கொண்டருள்புரிவன்; அழுதபிள்ளையன்றோ பால்குடிக்கும்? இது பற்றியன்றோ "அழுதா லுன்னைப் பெறலாமே" என்று மணிவாசகப் பிரபுகூறியருளினார்.

இராமபிரான் "தந்தைசொன் மிக்கமந்திர மில்லை" என்பதை மேற்கொண்டு தம்பி யிலக்குவனுடனும் மனைவிசீதையுடனும் வனத்திற்குச் செல்லும் போது, சரயுநதியைக் கடக்க ஓடம் விடுபவனாகியகுகன் தம்மிடத்தில் நீக்கற்கரிய நேசங்கொண்டதால் அவனிடத்திற்றாமும் அவ்வாறுநேசங்கொண்டுஇந்தச் சீதை யுன்றோழி, என்றம்பியாகிய விவன் உன்றம்பி,நீயெனது தோழன் என்றுகூறிப்பெருங்கருணை செய்தருளினா ரென்பதை நோக்குமிடத்துப் பகவான் பத்தியுடையார் யாவராயிருப்பினும் அவரை யாட்கொண்டருளுகின்றா ரென்பது செவ்விதாக விளங்கும். திருமங்கை யாழ்வார் "ஏழை யேதலன் கீழ்மக னென்னா திரங்கி மற்றவர்க் கின்னருள் சுரந்து, மாழை மான்மட நோக்கியுன் றோழி யும்பி யெம்பி

யென் றெழிந்திலை யுவந்து, தோழ னீயெனக் கிங்கொழி யென்ற சொற்கள் வந்தடி யேன்மனத் திருந்திட, ஆழி வண்ணநின் னடியிணை யடைந்தே னணிபொ ழிற்றிரு வரங்கத்தம் மானே" என்றருளி யிருப்பதிங்கு நன்குணரத் தக்கதாம்.



## 23. காலங் கழிவதைக் கருதுதல் நன்றெனல்.

(5-6-1911).

நாம் ஒவ்வொருநாளும் நாள்கழிந்து வருவதை நலமாக நினைக்கின்றோமேயன்றி, அதுபற்றிச் சிறிதுங் கவனிக்கின்றோ மில்லை. ஒருநாள் கழிவது நாமிருக்க வேண்டிய நாள்களுள் ஒருநாள் குறைவதா மென்று கருதுவோமாயின், மீண்டுமீண்டு மொழியாத் துன்பத்திற்கேதுவாகிய காரியங்களைச் செய்தற்குடன் படமாட்டோம். அதைக் கருதாமையாற்றான், நாமெப்போது மிருப்போமென் றெண்ணி நல்லோர் யாதுகூறினும் அதைச்சிறிதுங் கருதாது பழிபாவங்களுண்டா மென்பதையும்பாராது பொருளை மிகுதியாகச் சம்பாதிக்கவேண்டும்; மிகுதியாகப் போகத்தை யனுபவிக்கவேண்டுமென்னு மாசையின் மிகுதியால் செய்யத்தகாத காரியங்களையுஞ்செய்ய முயல்கின்றோம்; கூடுமானால்,அவற்றைச்செய்தும் முடிக்கின்றோம். காலமானது சூரியன்,சந்திரன் முதலிய பொருள்களின் இயக்கத்தினால் நாள்,வாரம்,பட்சம்,மாதம்,இருது,அயனம் வருடமென்றற் றொடக்கத் தனவாகப் பிரிவுபட்டு நின்று நமது தேகத்திற்கு ஓரெல்லையை யுண்டாக்கிவிடுவதை யுற்றுப் பார்ப்போமாயின், நாம் காலத்தின் வசமாயிருப்பது பரியந்தம் பிறப்புப் பிணி மூப்பிறப்புக்கள் நம்மைவிட்டகலாவென்பது நன்கு விளங்கும்.

நீலகிரியில் நான் ஒருமாதம் சுகமாயிருந்தேன், கோடைக்கானலில் நான்மூன்றுவாரம் சௌக்கியமாயிருந்தேன், குற்றாலத்தில் நான் இரண்டுவாரம் உல்லாசமாயிருந்தேன் என்றற்றொடக்கத்தனவாகக் கூறுகின்றோமேயன்றி, நீலகிரியில்நானிருக்க வேண்டிய நாள்களுள் ஒருமாதம் ஒழிந்தது; கோடைக்கானலில் நானிருக்கவேண்டிய நாள்களுள், மூன்றுவாரம் கழிந்தன; குற்றாலத்தில் நானிருக்கவேண்டிய நாள்களுள் இரண்டுவாரம் போயின என்றற்றொடக்கத்தனவாகக் கூறுகின்றோமில்லை; கூறவு மெண்ண முண்டாவதில்லை.

நமக்கெவ்வளவிற் கெவ்வளவு நாள்கழிந்துகொண்டு வருகின்றதோ அவ்வளவிற் கவ்வளவு நம்மிடத்துச் சாவன்றோ நெருங்கிக்கொண்டு வருகின்றது. வியாதியாயிருக்கு மொருவனை நோக்கி மருத்துவன் (வைத்தியன்) "தாங்கள் பிழைப்பது அருமை; இன்னும் இரண்டுமூன்றுநாள்தான்உயிரோடிருக்கக்கூடும், செய்யவேண்டிய காரியங்களை யெல்லாம் செய்து விடுங்கள்" என்று கூறுவானானால் அந்நோயாளி "ஐயோ நாம் இறந்துபோகப் போகின்றோமே, என்ன செய்வோம்" என்று வருத்த முறுவானன்றோ? இவ்வாறாய சம்பவத்தைநாம் எத்தனைமுறையோ பிரத்தியட்சமாக வறிந்திருக்கின்றோம்; அறிந்தும் என்ன பிரயோஜனம்? "அவர் வியாதியாயிருக்கிறார், அதனால் சாகப்போகின்றார்" என்றுநினைக்கின்றோமேயன்றி அவரும் நம்போன் றிருந்தவர்தாம் என்று நினைக்கின்றோமில்லை. ஒருசமயம் நினைத்தாலும் விஷயவாசனைவந்து மேம்பட்டழுத்திக்கொள்ளுவதா லதனை யுடனே மறந்துவிடுகின்றோம். நோயுள்ளவன் மரணநாள் நெருங்கியிருப்பதறிந்து வருந்துவதுபோல நாள்கழியுந்தோறும் நமக்கும் மரணநாள் நெருங்கிவருகின்றதென்பதைச் செவ்வையாகவூன்றி யறிவோமாயின், நாமும் அந்நோயாளியினைப்போன்று நிச்சயமாக வருத்த முறுவோமல்லவா? மரணம் சமீபித்துவிட்ட தென்றறிந்தநோயாளி போனதெல்லாம் போகட்டும்; இனியாவது கடவுள் விஷயத்தில் மனத்தைச் செலுத்துவோ மென்று நினைத்து முயலுகின்றான். முயன்றுமென்ன பிரயோஜனம்? விஷயவாசனை நெய்விடுந்தோறுங் கொழுந்து விட்டெரியும் யாகாக்கினிபோல மிக்கோங்கியிருத்தலால் அது முடியாது போகின்றது. இப்போது மனது கடவுள் விஷயத்தில் பூரணமாகச் சென்றிருந்தாலன்றோ அப்போது அஃதாவது மரணம் நெருங்கிய சமயத்தில் அம்மனம் தனக்கு வாய்ப்புடைய சிநேகன்போல வந்துதவிசெய்யும்.

ஈசனால் வினைக்கேற்றவாறு நமக்குக் குறிப்பிக்கப் பட்டுள்ள நாள்கள் நாள், வாரம், பட்சம், மாதம், இருது, அயனம் வருடமென்றற் றொடக்கத்துப் பெயராகச் சூரியன் முதலிய பொருள்களின் இயக்கத்தின் வாயிலாகக் கழிந்துவருகின்றன. கழியுந்தோறும் மரணம் நெருங்கிக்கொண்டே வருகின்றதென் றுணர்ந்தவரன்றோ காலத்தின் வசமாகாதிருக்க அஃதாவது நித்திய நிரதிசயாநந்த அறிவுமாத்திரமாகவிருக்க முயலுவர். நித்திய நிரதிசயாநந்த

அறிவுமாத்திரமாக விருக்கும்நிலை பூரணமாக ஈசுவரோபாசனைசெய்தவருக்கன்றி மற்றவர்க்கொருபோதும்சித்தியாகாது.(உபாசனை-தியானம்.)தியானிக்கப்படும் பொருள் ஆகாரமாகச் சித்தவிருத்தி பிறழ்வின்றி யமைந்திருத்தல் உபாசனையாம். நமக்கு நாள் கழியுந்தோறும் மரணநாள் நெருங்கிக்கொண்டே வருகின்றது; அஃதிப்போது·வருமென்று தெரியாது; பிறந்தவர்களெல்லாரும் இறந்தேபோனார்கள்; நாமும் பிறந்திருக்கின்றபடியால் தவறாதிறந்துபோவோமென்னும் புத்தி ஸ்திரமாயிருப்பவர் தாம் இனியிருக்கும் நாளையும் வீணாக்குதல் கூடாதென்று " இருக்கினு நிற்கும் போது மிரவுகண் டுயிலும் போதும், பொருக்கென நடக்கும் போதும் பொருந்தியூண் டுய்க்கும் போதும், முருக்கிதழ் கனிவா யாரை முயங்கிநெஞ் சழியும் போதும், திருக்களா வுடைய நம்பா சிந்தையுன் பால தாமே" என்று பெரியார்கூறியவாறு தியானஞ் செய்வர். தியானம் பூரண பாவத்தை யடைந்தாற்றான் ஆசையும் கோபமும் அவற்றிற்கிடமான மனமும்கெடும்; இவை கெட்ட விடத்திற்றான் காலத்தின் வசமாகாத நிலை சித்தியாம். இடைக்காட்டுச் சித்தர் " மனமென்னு மாடடங்கிற் றுண்டவக் கோனே - முத்தி, வாய்த்ததென் றெண்ணேடா தாண்டவக் கோனே" "சினமென்னும் பாம்பிறந்தாற் றுண்டவக்கோனே - யாவுஞ், சித்தியென்றே நினையேடா தாண்டவக்கோனே" 'ஆசையெனும் பசுமாளிற் றுண்டவக்கோனே - யிந்த, வண்டமெலாங் கண்டறிவாய் தாண்டவக் கோனே" என்றருளியிருத்த லிங்கு நன்குணரத்தக்கதாம்.

நமனானவன் பிராணிகளது ஆயுட்காலமாகிய தானியத்தைச் சூரியனாகிய படியாலளந்து தினந்தோறுமுண்டுவருவதை யறிந்து தமது விருப்பத்திற் கியைந்த தெய்வத்தையிடைவிடாது தியானித்து வந்தாற்றான் அத்தியானம் மரண சமயத்திலும் மறவாது நிலைபெறும். தியானம் பூரண பாவமாகச் சித்தித்துவிட்டதென்பதற் கறிகுறி சொப்பனத்திலும் தியானஞ்செய்வதாகக் காண்டலாம். சொப்பனத்திலும் நிரந்தரமாகத் தியானஞ்செய்து வருபவர்க்குத்தாம் மரணகாலத்திலும் தியானம் மறவாமலிருக்கும். உறக்கத்தினின்றும் விழிக்கின்றபோது தியான பூர்வகமான வெண்ணத்தோ டிருக்கின்றவரே நிரந்தரமாகத் தியானம் செய்பவராவர்; தியானஞ் செய்துகொண்டே யுறக்கத்தினின் றெழுகின்றவர்கள் தாம் பரமேசனது கருணைக்குப் பாத்திரராவார். இது வாதவூர

டிகள் (திருக்கோவையாரின் திளைவளங்காத்து என்னும் திருப்பாசுரத்தில்,"தொழுதெழுவார்,வினைவள நீறெழ நீறணியம்பலவன்" என்று திருவாய் மலர்ந்தருளியிருப்பதனாலும் நன்கு விளங்கும்.

நம்முடைய வாழ்நாட்களுள் எக்காரியம் நம்மால் பெருமுயற்சியோடு செய்யப்பட்டுவருகின்றதோ அதனது சங்கற்பந்தான் நமது மரணகாலத்தில் முன்வந்துநிற்கும்; மற்றவற்றின் சங்கற்பம் முன்வந்து நிற்பதற்குத் தகுதியுடையதாவதில்லை. இரண்டு பொருள்களை வாங்கவேண்டி வியாபார ஸ்தானத்திற்குச் சென்றவிடத்து அவ்விரண்டு பொருள்களுள் எது நமக்கத்தியா வசியகமாக வேண்டப் படுவதாக விருக்குமோ அதனது சங்கற்பந்தான் முன்வந்து நிற்கின்றது. மற்றதன்சங்கற்பம் முன்வந்து நிற்பதில்லையென்பது நமக்கனுபவமாம். இது மேற்கூறியதற்குச் சான்றாம். நியாயாதிபதிகள் நியாயவாதிகள் முதலியவர்கள் இறக்குந் தருணத்தில் பெரும்பான்மையாகத் தாம் வருந்திக்கற்ற நீதி விஷயங்களைப் பற்றியும் பிறவற்றைப் பற்றியும் பேசிக்கொண்டிருப்பது மிதற்குச் சான்றாம். நாம் பேசுவதொவ்வொன்றும் செய்வதொவ்வொன்றும் நினைப்பின் வசமாகவேஇருக்கின்றனவாகலின், மரணகாலத்தில் பேசுவதும் செய்வதும் நினைப்பின்றிச் சம்பவியா. தியானத்தைப் பெருமுயற்சியோடு செய்து மற்றவற்றைப்பற்றி யழுத்தமாக வெண்ணாது எல்லாம் உள்ளபடிமுடியும் என்னுங்கருத்தோ டிருப்பவர்க்குத்தாம் மரணகாலத்தில் தியானம் மறவாது முன்வந்துநிற்கும்; சொல்லும்செயலும் அதுவிஷயமாகவே யமையும். அவர்தாம் நற்கதியடைவர். ஈசுவரத்தியானம் மரணபரியந்தம் மறவாமலிருக்கவேண்டும்; மறவாமலிருப்பவர்தாம் மேனிலையடைவரென்பதுபற்றிவில்லி புத்தூராழ்வார்தமதனுபவமாக"சங்கையிலாவகை யமபட ராலுயிர் தளர்பொழு தத்தருகே,மங்கையர் சூழவிருந்தழு துள்ள மயக்கினும் யான்மறவேன், கங்கையு நான்மறையுந்துள வுங்கமழ் கழலிணை யுந்திருமால், அங்கையின் மீதொளிர் சங்கமு நேமியு மஞ்சன மேனியுமே" என்று வற்புறுத்திக் கூறியிருப்பது மிங்கு நன்கறியத் தக்கதாம்.

காலங்கழிவதை யினிமையாக வெண்ணாது சென்றநாளெல்லாம் பயன்படாத நாளாயினவே யென்றுவருத்தமுற்று விரைந்து சற்குருவையடுத்து அவர்வாயிலாக இனிப்பிறவா நிலையைத்தரும்

தத்துவ ஞானத்திற் கேதுவான தியானோபதேசத்தைப் பெற்று அவர்கூறியவாறொழுகும் புருஷர்களே காலாதீதமாகும் ஸ்திதியை நிச்சயமாகப்பெறுவர். இவ்வாறொழுகிக் காலாதீதமாயுள்ள நிலையைப் பெற்றூர் மார்க்கண்டேய மாமுனிவரென்பது அவரது சரிதத்தை யுய்த்துணர்ந்து நோக்குவார்க்குச் செவ்விதாகவிளங்கும். "என்னையேநினைந் தென்னைப்பணிந் தென்னையருச் சித்தென், றன்னையேயறிந் தவனென்னை யன்றியே சாரான்" என்று ஈசுவரகீதை கூறுவதை நன்கூன்றி யறிபவர்க்குத் தியானத்தின் பிரயோஜனம் வெளிப்படையாக விளங்கும்.



## 24. குற்றங்கடிந்தால் நற்கதியாமெனல்.

(12-6-11).

பெரும் பான்மையாக நம்மனோர் யாவரும் பிறரது குற்றங்காண்டலில் இந்திரன் போலவும் தமது குற்றங் காண்டலில் திருதராட்டிரன் போலவும் இருத்தல் வெளிப்படையாம். குற்றமில்லாத மனித ரொருவருமிலர்; பிறரிடத்தில் குற்றங்கள் பலவிருத்தல் போல நம்மிடத்திலும் குற்றங்கள்பலவுண்டு; நாம்குற்றங்களில்லா திருத்தல் ஒருபோது முடியாது; புத்தி பூர்வகமாகவோ அபுத்தி பூர்வகமாகவோ குற்றங்கள் பல நம்மிடத்துச் சம்பவித்து விடுகின்றன வென்று கருதுகின்றவர் தாம் பிறர் குற்றங் காண்டல்போலத் தமது குற்றத்தையுங் கண்டு குற்றத்தி னின்றும் நீங்க முயலுவர். இந்திரன் ஆயிரங் கண்ணுடையவனு யிருத்தல் போல நாமும் பிறர் குற்றங் காண்டலில் அளவிறந்த கண்களை யுடையவரா யிருக்கின்றோம். அஃதாவது பல வழியாலும் பிறரது குற்றங்களை யறிகின்றோம்; அறிந்து சும்மா விருகின்றோ மென்றாலோ அஃதில்லை; பலரிடத்தும் அக் குற்றங்களைக்கூறி அவரைப் பழிக்க முயல்கின்றோம். நம்முடைய குற்றங்களையோ வென்றால் பலவழியிலும் மறைக்க முயல்கின்றோம். திருதராட்டிரன் குருடனு யிருந்தாற்போல நாமும் நம்முடைய குற்றங்களைக் காண்பதிற் குருடரா யிருக்கிறோம்; குருடராகவிருக்கின்றமையாற்றான் தீயவழியினின்றும் விலகி நல்வழியி லொழுகுவதற்குத் தகுதியுடையவராகா திருக்கின்றோம். "யா அருலகத்தோர்சொல்லில்லார்" என்று நாலடியார் கூறியவாறு பழிமொழி யில்லாதவ ரொருவருமில ரென்று கருதிப் பிறரிடத்துள்ள குற்றங்களைக் காணுது குணங்களைக்கண்டு அக்குணங்கள் தம்மிடத்துண்டாக வேண்டுமென் றெண்ணி நல்லோர் கூறியவாறு நடப்பவர்களே மெய்ம்மைகூறல் முதலிய நற்குணங்களைப் பெறுவர்.

தேகாகாரமுள்ள பரியந்தம் எக்குற்றமும் நீங்குவதேயின்று மாகலின், தேகாகாரமற்றுச் சிதாநந்தமாத்திரமா யிருக்கும் நிலை வாய்த்தபோதுதான் ஒரு குற்றமும் நிகழாது. உலகநோக்கமுள்ள போதுதான் இது வேண்டும், அது வேண்டாம் என்று விருப்பு வெறுப்பு வடிவ சங்கற்ப முண்டாகின்றது; அச்சங்கற்பத்தின் வாயிலாகக் குற்றங்கள்பல நம்மிடத்து வருகின்றன; சங்கற்பமற்ற நிலையைவிழித்திருக்கும் நிலையிலேயே யொருவன் பெறுவானாயின், அவன் குற்றமான செயல்களைச் செய்வதேயின்றாம்; குற்றமான செயல்களைச் செய்யாதபோது, அவனைப் பழிப்பா ரொருவருமில ராவர். அவனைப் பழிப்பாரு முண்டெனின், அவர் தம்மையே பழித்துக் கொள்பவராவர்.

சாக்கிரத்தில் சங்கற்பமற்றிருக்கும் நிலை நிர்விகற்பசமாதி யெனப்படும். அச்சமாதி நிலையில் அறிவொன்றே யிருப்பதன்றிப் பிறிதொன்று மிருப்பதில்லையாம். அந்நிலையில் அறிவாகவே யிருப் பவனை, அறியாமையின் வசமா யல்லலுற்றுத் தாம் அறிவுவடிவ மென் றறியாதுழல்பவர் பழிப்பது அறிவாகிய தம்மையேபழிப்ப தாம். தேகாகார மற்றவர்க்கன்றி யேனையோர்க்குக் குற்றமகல் வதில்லை யென்பது காமன் மோகனுக்கு முன்னர்த் தனதாற்றலின் மேன்மையைக்கூறுமிடத்து "ஒத்தேறு முருவமிலாப் பிரமமொன் று மேயொழிய வுருவமுள்ளா, ரெத்தேவ ராயினுமோர் பூங்கணை யாற் றம்போத மெல்லா நீங்கி, மத்தேறி யுடைதயிர்போன் மன ஞ்சுழன்று செயன்மறந்து மடவா ராசைப், பித்தேறி யிதமுரைத் தப் பேதையர்க்கும் பேதையராய்ப் பின்செல் வாரால்" என்று (பிரபோத சந்திரோதயம்)கூறுவதனுலும் செவ்விதின் விளங்கும். "அறிபொருளை விட்டகன்று லழியுஞ் சித்த மந்தநிலை வியாபார மனைத்துமில்லாச், செறிநனவிற் சுழுத்தியாம்" என்பதனை நன்கு ணர்ந்து நனவிற் சுழுத்தியைப்பெற்று ஞானிகளாயவரே பழிப் பற்ற பான்மையின ராவர்.

விஷயங்களிற் றுவித் தாவியோடும் மனத்தை யசங்கற்பத்தி னுல் ஒழிக்க முயலவேண்டும். அசங்கற்பத்தினுல் சங்கற்பத்தை யொழித்தாற்றான் நனவிற் சுழுத்தியையுடைதல் கூடும். என் நாம் எடுத்த காரியத்தை முடிக்காது விட்டோம்; விட்டதனுலன்றோ இப் போது இவ்வளவு கஷ்டத்திற் கிடமாயது; இனியிக்காரியத்தைச்

செய்வோமாயின் இவ்வளவு செல்வ முண்டாகும், அச்செல்வத்தைக்கொண்டு கணக்கில்லாத போகத்தை யனுபவிப்போம் என்றற்றொடக்கத்தனவாகச் சங்கற்பஞ்செய்து வருபவர்க்கு மேற்கூறிய சமாதிநிலை சித்திப்பதில்லையாம். சங்கற்பமுண்டாகும்போதே அதனைப்பரவவிடாதடக்குபவர்க்கே அதுசித்தியாம். நடக்கும் பருவம் வாய்ந்தசிறுகுழந்தை யோரிடத்தும் நிலையாயிராமைபோன்றுமனமும் ஓரிடத்தும் நிலைபாயிருப் பதன்றும். அந் நிலையில்லாத மனத்தைக் கூரிய புத்தியினாலே யடக்க முயலல்வேண்டும். மனம் அடக்க அடக்க அடங்காது விஷபவிச்சைபால் பரவிமோடுமோயின் அந்தனைப்போனவழியே விட்டுப் பிறகடக்கவேண்டும்; சிறிது சிறிதாக அவ்வாறடக்கிவருவோமாயின், அதுமுடிவில் நமது வசமாக அடங்கிவிடும்; அடங்கியவிடத்துச் சிதாநந்தமாகவிருக்கு நிலை சித்தியாம். இது "மிகமுயன்று வருந்தாமற் சமமாகின்ற வேண்டுகோளாற் றன்முயல்வால் விநோதந்தன்னாற்,பகர்மனமாஞ் சிறுமகவை நிறுத்தல் வேண்டும்" என்று ஞானவாசிட்டங் கூறுவதானுமினிது விளங்கும்.

காமக்குரோதமுள்ள பரியந்தம் சங்கற்பநாசமுண்டா காமையின்,காமத்தையும் குரோதத்தையும் முன்னமொழிக்க முயலுதல் வேண்டும். காமக்குரோதத்தை யொழிக்கமுயலாது சங்கற்பத்தை யொழிக்கமுயலுதல் கொழுந்து விட்டெரியும் நெருப்பை விறகிட்டும் நெய் விட்டும் அவிக்கமுயலுதல் போல்வதாம். "எவனுடைய மனப்புற்றி விராகமுனி வெனும்பணிக ளிபக்கமில்லை, யவனெனுங்கற் பகத்தருவா லணுகாத தொன்றுண்டோ" என்று ஞானவாசிட்டங் கூறுதலால், காமக்குரோதமற்ற விடத்தேதான் சங்கற்ப மொழியுமென்பது நன்கு விளங்கும். காமமென்பது ஆசை, குரோதமென்பது கோபம்.

ஆசையானது பலவகைப்படும். அப்பலவகைப்பட்ட வாசைகளையும் விவேகத்தால் கெடுத்தல் வேண்டும். ஆசை மிகுந்தோறும் துன்பமேமிகுதலால், துன்பத்தையொழிக்கமுயல்வோர் ஆசையை யொழிக்கமுயலல் வேண்டும். ஆசைப்பட்ட பொருளுக்குத் தடை நேரிட்டபோது கோபமுண்டாகின்றது; கோபத்தினால் கொடிய செயல்களைப்புரிதல் சம்பவிக்கின்றது; அதனால் ஓயாத கலக்கமுண்டாகின்றது; ஆதலால் செய் காரிய மிது, தவிர் காரியமிது என்று

விளங்காமற் போகின்றது. இத்தகைய கேட்டிற் கேதுவாகிய வாசையை யொழித்தால் குரோதந் தானேயொழியும். ஆசையுண்டாகும் போதே அதனையொழிப்பதற்கேது, ஆசைப்படும் பொருளொவ்வொன்றும் துன்பத்தையே தருவதன்றி யின்பத்தை வாஸ்தவத்திற் றருவதில்லை யென்னும் விசாரத்தினு லதனை யடக்குவதேயாம்; அவ்விசாரமின்றியடக்குவது திருடனைக் கட்டிவைப்பது போலவாம்.

எதிர்காலத்தில் அடையத்தக்க பொருளின்மீதுள்ள விருப்பம் ஆசையாம்; அடைந்தபொருள் மேலும்மேலும் விருத்தியாக வேண்டுமென்னும் விருப்பம் திருஷ்ணையாம்; அடைந்தபொருளை யனுபவிக்க வேண்டுமென்னும் விருப்பம் காமமாம்; நிகழ்காலத்திலடையத் தக்க பொருளின் மீதுள்ள விருப்பம் வாஞ்ஞையாம்; கிடைத்த பொருளைச் செலவுசெய்யா திருக்க வேண்டு மென்னும் விருப்பம் கிருபணத்தன்மைபாம்; வேறுபுருஷர்களால் நிகழ்காலத்தி லடையப்படாத பொருளை யடைய வேண்டுமென்னும் விருப்பம் தீனத்தன்மைபாம். இங்ஙனமொரேயிச்சையின் பேதமாயுள்ள பல வகைப்பட்ட வாசைகளையும் விசாரமுகத்தால் உண்டாகும் போதே யொழித்தால் மனம் சஞ்சல பாவத்தினின்றும் நீங்கிச் சிவாகாரமாகும்; இச்சிவாகாரசித்தமுடையவர் உலகநோக்கின்றி யிருத்தலின், அவரே குற்றமற்றவராவர். நாமும் இந்நிலையைப் பெறுவோமாயின், குற்றமற்ற நன்னிலையைப் பெறுவோம்.



## 25. உடம்பு மனம் உயிரேன்பவற்றி னுண்மைநிலை யறிந்துய்யும் நெறி கூறல்.

(19-6-12)

ஒரு யஜமானன், தன்வீட்டிலிருந்து தன்வேலைக்காரனிடத்து வேலைவாங்குவது போல ஆத்மாவும் உடம்பின்க ணிருந்து மனத்தினிடத்து வேலைவாங்குகின்றது. அந்தயஜமானன் தன் வீட்டின் ஒருபகுதியிலேயேயிருப்பதுபோல ஆத்மாவும்உடம்பின் ஒரு பகுதியிலே யிருக்கின்றது. உடம்பின் ஒரு பகுதியாவது இங்குப் புத்தியாம் (அஃதாவது ஆத்மாபுத்தியில் சாக்கிரசொப்பன காலங்களில்ஜீவரூபமாய்ப் பிரதிபிம்பித்திருக்கின்ற தென்பதாம்). (1) உடம்பின்கண் யானென்னு மபிமானத்தையும், வீடு முதலிய

வற்றின்கண் எனதென்னுமபிமானத்தையுஞ்செய்துசெவிமுதலிய விந்திரியங்களின் வாயிலாக ஒலி முதலிய விஷயங்களிற்செல்வதாய்க் கரணவடிவமாயிருப்பதுமனமாம்.(2)சாக்கிரசொப்பனங்களில் நகநுனிமுதல் சிகைபரியந்தம் உடம்பின்கண் வியாபித்துக் கருத்தாவடிமாயிருப்பது புத்தியாம்.சங்கற்ப விகற்பவடிவ விருத்தியாகிய மனமும் நிச்சயவடிவவிருத்தியாகிய புத்தியும் தம்முள் பெரிதும் வேற்றுமையுடையன வன்றாம்;(கருத்தா-செய்பவன்,காரணம் செய்வதற்கு நியதமான கருவி). மனமே காரணவடிவமா யிருப்பதன்றிக் கருத்தாவடிவமாகவு மிருத்தலின், மனத்தின்கண் புத்தியந்தர்க்கத(அடக்க)மாம்; நினைத்தல், நிச்சயித்தல், அபிமானித்தல், சிந்தித்தலென்னும் காரியங்கள் மனமிருக்கும்போது நிகழுதலால் அக்காரியங்கள் மனதின் தருமமாமென்பது நன்குவிளங்கும். அத்தருமங்களுடைய மனம் ஆத்மாவிற்கு வேலைக்காரனைப் போன்றிருப்பதை யறிந்தோமாயின், நாம் மனத்திற்கும் உடம்பிற்கும் வேறாய்அறிவாநந்தமாய் விளங்கும் நிலையை நிச்சயமாகப் பெறுவோம்.

தேகத்திற்கு மனமும்ஆத்மாவும் வேறு;மனத்திற்குத்தேகமும் ஆத்மாவும் வேறு.ஆத்மாவிற்குத்தேகமும் மனமும் வேறு என்று பரஸ்பரம் பிரித்தறிவதுபெரிது மருமையானவித்தையாம். சீவர்கள் அளவிறந்தனவா யிருத்தலின், அவற்றிற்கு முறையே போகாயதனமாகவும் போகசாதனமாகவுமுள்ள உடம்புமனமுமளவிறந்தனவாம். அஃதாவது ஒவ்வொரு ஜீவர்க்கும் ஒவ்வொரு மனமும் ஒவ்வோர் உடம்பு முண்டென்பதாம். போகாயதனம் - சுகதுக்கங்கள் நிகழுவதற் கிடமாய உடம்பு; போகசாதனம் - சுகதுக்கங்களை யனுபவித்தற்குக் கருவியாயமனம். வீட்டிலிருந்து வேலைக்காரனிடத்து வேலை வாங்கும் யஜமானனுக்கு வீடும் வேலைக்காரனும் வேறுபட்டிருப்பதுபோல உடம்பின்கணிருந்து மனத்தினிடத்து வேலைவாங்கும் ஆத்மாவிற்கும் உடம்பும் மனமும் வேறுபட்டிருப்பனவேயாம். (சூக்கும சரீரமுற்றும் போகசாதனமாகவிருப்பினும் ஈண்டுத்தலைமைபற்றி மனம் போகசாதனமென்று கூறப்பட்டது).

ஆத்மா உடம்பிற்கு வேறாயதென்பது, நனவுகனவுகளில் நாமெவ்வாறுவிளங்குகின்றோமென்றாகித்துப்பார்த்தால் செவ்வனே

விளங்கும். கனவூருக்கு (சொப்பனத்திற்குச்) சென்றபோது நாம் நடத்தல்முதலிய தொழில்களைச் செய்கின்றோமல்லவா? அவற்றை எவற்றாற்செய்கின்றோம்; கால் முதலியவற்றா லல்லவா? அந்தக்கால் முதலானவை இந்தக்கால் முதலாயினவாமா? இந்தக்கால் முதலாயின விங்கே வாளா கிடக்கின்றனவன்றோ? ஆகவே அந்தக்கால் முதலியனவும் இந்தக்கால் முதலியனவும் தம்முள்வேறுபட்டனவேயாம். அந்தக்கால் முதலியனவும் இந்தக்கால்முதலியனவும் தம்முள் வேறுபட்டிருக்க, ஆத்மாவேறுபடா திருத்தலால் அது சாக்கிரத்திலுள்ள வுடம்பும் சொப்பனத்திலுள்ள உடம்பு மாகாதென்பது செவ்விதாகப் புலப்படும். இவ்விரண் டவஸ்தையிலும் மனமிருத்தலால் அதுவும் அவ்விரண்டற்கும்வேறும். சாக்கிராவஸ்தையிலும் சொப்பனவஸ்தையிலும் ஆத்மாமனத்தோடுகூடி விளங்குதல்தனித்தனியுள்ள விரண்டு வீட்டின்கண் யஜமானன் வேலைக்காரனோடு கூடியிருத்தல் போலவாம்.

ஆத்மா மனத்திற்கு வேறாயதென்பது சுழுத்தியவஸ்தையில் நாமெவ்வாறு விளங்குகின்றோமென்பதுபற்றிச் சிந்தித்துப்பார்த்தா லினிது புலனும். உறங்குவதென்னுஞ் சுழுத்தியவஸ்தையையடைந்தபோது நாம் மனமுதலியவற்றோடு விளங்குவதில்லை. அங்குடம் பிருக்குமாயின், நடத்தல் முதலிய வியாபாரங்கள் நடைபெறும்; மனமிருக்குமாயின், நினைத்தல் முதலிய வியாபாரங்கள் நடைபெறும். இவ்விரண்டுவியாபாரமுமில்லாமையின், அங்கு உடம்பும் மனமு மில்லைபாம். உடம்பும் மனமும் சுழுத்தியி லில்லாமையாற்றான் உறக்கத்தினின் றெழுந்தவன் ஒன்றுமறியாது சுகமாயுறங்கினேனென்று கூறுகின்றான். இங்ஙனங்கூறுவதால், ஆத்மா உடம்பும் மனமுமில்லாது சுழுத்தியின்கண் ஆநந்தவடிவமாயிருக்கின்றதென்பது பிரசித்தமாம்.

நனவின்கண் சாக்கிர உடம்பும் மனமும் ஆத்மாவும் விளங்குதலையும், கனவின்கண் சொப்பனவுடம்பும் மனமும் ஆன்மாவும் தோன்றுதலையும், உறக்கத்தின்கண் மேற்படி யிருவகையுடம்பையும் மனத்தையும் விட்டு ஆத்மா பிரகாசிப்பதையும்நன்குணர்ந்து, பரமப்பிரீதிக்கு விஷயமாயுள்ள ஆன்மாமேற்படியிருவகையுடம்புமன்று; அவற்றின் தருமங்களாய குறில்நெடில்முதலியனவுமன்று, மனமுமன்று, அதன்தருமமாகிய விருப்பு வெறுப்பு முதலியனவு

மன்றென்று தெளிந்து, அறிவுமாத்திரமாக நின்றவரே தன்னை யறிந்தவராவர்; அவர் தாம் பிறவிக்கடலைக்கடந்துபேரானந்தக்கடலுள் மூழ்கியவராவார். இது "தன்னை யறிந்திடுந் தத்துவ ஞானிகள்,முன்னை வினையின் முடிச்சை யவிழ்ப்பர்கள், பின்னைவினையைப் பிடித்துப் பிசைகுவர், சென்னியில் வைத்த சிவனரு ளாலே" என்றும், "தன்னை யறியத் தனக்கொரு கேடில்லை, தன்னை யறியாமற் றானே கெடுகின்றான், தன்னை யறியு மறிவை யறிந்தபின், றன்னையே யர்ச்சிக்கத் தானிருந் தானே" என்றும், "என்னை யறிந்திலே னித்தனை காலமு,மென்னை யறிந்தபி னேது மறிந்திலேன், என்னை யறிந்திட் டிருத்தலுங் கைவிடா, தென்னையிட் டென்னை யுசாவுகின் றேனே" என்றும் திருமந்திரங் கூறுவதாலும் விளங்கும்.

உடம்பிற்கும் உயிர்க்கு மிடையே யிருக்கும் மனத்தைத் தமது வசமாகவிருக்கப்பழகியவர்க்கே சற்குருவின் சத்துபதேசம் எளிதாகச் சித்தியாம்.மற்றவர்க்கோவெனின்,மலைமீதேறிமதிபிடிப்பது போலவாம். துஷ்டவேலைக்காரன் தன் யஜமானனுக் கடங்காதொழுகி அவனைப் பலவல்லல்கட் காளாக்குவதுபோல மனமும் நமக் கடங்காதொழிந்து நம்மை விருப்பு வெறுப்பு வடிவ அல்லல்கட் காளாக்குகின்றது. புத்தியுள்ள யஜமானன் துஷ்டவேலைக் காரனை விரைவாக நீக்கிவிடுவது போல நாமும் விரைவாக மனத்தை நீக்கவேண்டும். மனத்தை நீக்குவ தென்பது மனத்தினது ரஜோகுணத்தையும் தமோகுணத்தையு மொழித்தலாம். ரஜோகுணத்தின் வடிவம் பிரவிர்த்தியாம். தமோகுணத்தின் வடிவம் மோகமாம். பிரவிர்த்தியும் மோகமுமுடைய மனமே ஸ்தூலமாம். அம்மனந்தான் துஷ்டவேலைக் காரனைப் போல்வதாம். பிரகாசவடிவ சத்வகுணமுடைய மனந்தான் சூக்கும மனமாம். அந்த மனத்தாற்றான் ஆத்மாவை யுள்ளவாறறிய முடியும். "சத்துவ ஞானமாந் தமமஞ் ஞானமா, மத்திமங் கலப்பதாம்" என்று ஈசுவரகீதை கூறுவதாலும் சத்வகுண முதலியவற்றின் வடிவம் செவ்விதின் விளங்கும்.

ஸ்தூலமனந்தான் விருப்பு வெறுப்பு வாயிலாகப் பிறப்பிற்கேதுவா யிருக்கின்றது.அதைக்கெடுத்தவரே மீண்டும் பிறவியுறாத நிலையினராவர். இது பற்றியன்றோ தாயுமான சுவாமிகள்"இறப்பும் பிறப்பும்பொருந்த வேனக் கெவ்வண்ணம் வந்ததென் றெண்ணி

யான் பார்க்கின், மறப்பு: நினைப்புமாய் நின்ற வஞ்ச மாயா மனத்தால் வளர்ந்தது தோழி" என்றும், "வேண்டாம் விருப்பும் வெறுப்பு மந்த வில்லங்கத் தாலே விளையுஞ் சனனம், ஆண்டா னுரைத்த படியே சற்று மசையா திருந்துகொள் ளறிவாகி நெஞ்சே" என்றும் திருவாய் மலர்ந்தருளினர்.

ஸ்தூல மனத்தைச் சற்குருவி னனுக்கிர கத்தினு லடக்கிச் சூக்குமமனத்தைச் செவ்வையாகப்பெற்று அதுவாயிலாகத்தன்னை யறிந்துள்ளவர்தாம் அஷ்டபாசங்களையு நஷ்டமாக்குவர். அஷ்ட பாசமாவன: குலம், ஜுகுப்சை, சீலம், பலம், சம்சயம், பயம், தயை, மோகமென்பனவாம். இவற்றுட்சில உடம்பின் தர்மமாகவும் வேறு சில மனத்தின் தர்மமாகவு மிருத்தலின், அவற்றுள் ஒன்றும் நானன்று; என்னுடையது மன்றென்று தீர்மானித்துப் பிறழாதிருத்தலே அஷ்ட பாசங்களையும் நஷ்டமாக்கு முபாயமாம்.



26. வேதாந்த விசாரஞ்செய்வோர் மேனிலையடைந் துய்வரேனல்.

(26-6-1911)

ஒவ்வோருவரும் சர்வதுக்க நிவிர்த்தியையும் பரமாநந்தப் பிராப்தியையு மடையவேண்டு மென்னு மெண்ண முடையவராயிருப்பது பிரசித்தமாம். சர்வதுக்க நிவிர்த்தியும் பரமாநந்தப் பிராப்தியுமே மோட்சத்தின் வடிவமா யிருத்தலால், ஒவ்வொருவரும் மோட்ச விச்சை யுடையவரா யிருக்கின்றன ரென்பது சொல்லாமலே இனிது விளங்கும். அந்த மோட்சத்தை யடைவதற் குரிய வழியிலொழுகுதல் எனக்கிதுவேண்டும், எனக்கது வேண்டா மென்னும் விருப்பு வெறுப்புக்களுள்ள பரியந்தஞ் சித்திப்பதே யில்லையாம். எனக்கிது வேண்டுமென்னும் விருப்பையும் எனக்கது வேண்டா மென்னும் வெறுப்பையும் பற்றற விட்டு எதுவர வேண்டுமோ அது வந்தேதீரும், எதுவாராதோ அது வருவதேயில்லை என்னும் நிச்சய சித்தமுடையவரா யாதொன்ற னிடத்தும் விருப்பு வெறுப்புவடிவ மதியின்றி யுபேட்சா புத்தியுடையவரா யிருப்பவரே மோட்ச மார்க்கத்திலொழுகுந் தன்மையினைப்பெறுவர். யாதொன்ற னிடத்தும் விருப்பு வெறுப் பின்றி யுபேட்சா புத்தியோ டிருப்பது சித்தக் கலக்கங்

தீரக்கருதுகின்றவர்களுக்கு அத்தியாவசியகமாம். வேதாந்தவிசாரவாயிலாகக் காணப்படும் பொருள்களின் இயல்பை நோக்குகின்றவர்கட்கே அப்பொருளின் றன்மை செவ்விதாக விளங்கும். காணப்படுமோவ்வொரு பொருளேயு மூன்றிநோக்குமிடத்து அஃதொவ்வொன்றும் தனக்கென வொருவடிவ மிலதாகவும் துக்கசாதனமாகவு மிருத்தல் கண்கூடாக விளங்கும். வேதாந்த விசாரவாயிலாகக் காணப்படும் பொருள்களி னியல்பை நோக்காமை யாற்றன் அது விருப்பு வெறுப்பு வடிவ துக்கங்களைத் தந்து நம்மைச் சூத்திரப் பாவைபோ லாட்டிவைக் கின்றது. "தந்தையார் போயினர் தாயரும் போயினர் தாமும் போவார், கொந்தவேல் கொண்டொரு கூற்றத்தார் பார்க்கின்றார் கொண்டு போவார்" என்று திருஞான சம்பந்த சுவாமிக ளருளிச்செய் திருப்பதைக் கருத்துட்கொண்டு செல்வ நிலையாமை, இளமை நிலையாமை, யாக்கை (உடம்பு) நிலையாமை முதலியவற்றைச் சிந்தித்து விரைந்து வேதாந்த விசாரம் புரிந்து அது வாயிலாக அறிவே (சிவமே) அனைத்துமாய் விளங்குகின்றது, அறிவை யன்றி யறியப்படும் பொருள் ஒரு சிறிதுங் காலத்திரயத்திலுமில்லையென் றுலகநாட்டமொழிந்து அறிவுநாட்டம்பெற்று அமைந்த சித்தத் தோடிருப்பவரே மோட்ச மார்க்கத்தில் தவறின்றி யொழுகுந் தன்மையராவர். இது குமாரதேவர் அத்துவித வுண்மையில் "தோன்றி விளங்கும் பொருளெல்லாந் தொல்வேதாந்த விசாரணையில், ஊன்றி நோக்கி யனுதினமும் யூகமதனிற் பரிசயித்தால், தோன்றி விளங்கு மறிவொன்றே சொன்மாத் திரமாய் விடுமுலகம், ஊன்றி நோக்கா தவர்கட்கே யுளது போலத்தோன்றி விடும்" என்று திருவாய் மலர்ந் திருப்பதனாலும் நன்கு விளங்கும்.

"வேட்கை விடுநெறி வேதாந்த மாதலால், வாழ்க்கைப் புலன்வழி மாற்றிச்சித் தாந்தத்து, வேட்கை விடுமிக்க வேதாந்தி பாதமே, தாழ்க்குந் தலையினேன் சற்சீட ளுமே" என்று திருமந்திரங் கூறுவதால் வேட்கை (ஆசை) விடுதற்குரிய மார்க்கத்தைப் போதிப்பது வேதாந்தமென்பது பெறப்படுகின்றது. வேட்கையை யொழித்தல் மகாவருமையானவித்தையாம். சப்தமுதலியவிஷயங்களினுள்ள தோஷத்தைக் கண்டு செவி முதலிய விந்திரியங்களை அவற்றின்கண் செல்லவிடாது பையப்பைய வடக்கும் வழியினை, வேட்கை

யனைத்தையும் விட்டுக்காயத்திற்(உடம்பிற்)கும் செவிமுதலியகரு விகட்கும்,நனவு கனவு உறக்கமென்னு மவஸ்தைகட்கும் சாட்சி மாத்திரமாய் நிற்கும் வேதாந்தியின் பாதத் தடைக்கலம் புக்கு வேதாந்த (உபநிடத) விசாரஞ்செய்து அவர் கூறியவா றொழுகு கின்றவரே யடைவர்.

"அகனமர்ந்த வன்பினரா யறுபகைசெற் றைம்புலனுமடக்கி ஞானப், புகலுடையோர் தம்முள்ளப் புண்டரிகத் துள்ளிருக்கும் புராணர் கோயில்" என்று வைதிகசைவ குரவர்களுள் ஒருவராகிய ஞானசம்பந்தப் பெருந்தகையா ரருளியிருப்பதை 'புன்னுமிடத்து நீலகண்டா! நிமிர்புன்சடையா! பாலநேத்திரா! பங்கயப்பாதா! அன்பர்க் கெளியா! அருள்புரி மெய்யா! என்றுதற் போதம்நீங்கி மனத்தின்கண் நிரம்பிய அன்புடையவராய்,காமம் வெகுளி கடும்ப ற்றுள்ளம் (உலோபம்) மானம் உவகை மதமெனப் பட்டவாறையு மகற்றி, எழுந்தெழுந்து சீறு மியல்பினையுடைய விந்திரியப் பாம்பு களை வஸ்து விசாரமென்னுந் தடிகொண்டடித் தடக்கித்தத்துவ ஞானத்தைப் புகலிடமாக வடைந்திருப்பவரது சித்தத் திற்றான் சிதாநந்த வடிவமாய்விளங்கும் சிவபெருமா னெழுந்தருளி யிருப் பாரென்பது விளங்குகின்றது. நாமும்"எல்லாமுன் னடிமையே யெ ல்லாமுன் னுடைமையே யெல்லாமுன் னுடைய செயலே"என்னும் நிச்சய புத்தியோடு, பக்தி மிக்குப் பரவசமாகிக் காமாதியறுபகை களைக் களைந்து புலன்களை வென்று சமாதிகூடி உண்மை விளக்க மென்னுந் தத்துவ ஞானத்தைப் பெறுவோமாயின், பதைப்பற் றிருக்கும் பரமாநந்த ஸ்திதியைப் பெறுவோம்.

காமம், வெகுளி, கடும்பற்றுள்ளம், மானம், உவகை, மதமெ னப்பட்ட வறுபகையுள், காமமே மற்றைய வற்றிற்கு மூலமாயிரு ப்பதால், காமத்தை யொழித்தவர் மற்றையவற்றை மிகவெளிதி லொழிப்பதற் குரியவராவர். காமம்-ஆசை; அஃதிங்குப் பேராசை யாம். ஆசையை யொழிக்க வேண்டும், ஆசையை யொழிக்கவேண் டும் என்று கூறுமிடத்தெல்லாம் பேராசையை யொழிக்க வேண்டு மென்று பொருள் கொள்ளல் வேண்டும். ஒருவன் தனது வாழ் க்கை நடைபெறுதற்பொருட் டெவ்வளவு பொருள் வேண்டுமோ அவ்வளவு பொருளை விரும்புதல் குற்றமாகாது; அளவிற்குமிஞ்சி விரும்புதலே குற்றமாம். ஒவ்வொருவனுக்கும் அத்தியாவசியக

மாக வேண்டப்படுவன உண்டி, உடை (ஆடை), உறையுள் (வசிப் பதற்குரிய வீடு) முதலியனவாம். இவற்றுள், பசிப்பிணி நீங்க வுணவும், பனிவெயில் முதலியவற்றா லுண்டாகும் குளிர் முதலிய பிணி நீங்க உடையும், உணவுசமைக்கவும் உடையினை வைக்கவும் உடம்பின் களைதீர வுறங்கவும் உறையுளும் பிறவும் இன்றியமையா து வேண்டப்படுவனவேயாம். (இவ்விதி தீரத்துறந்தார்க்கன்று). இவற்றை யளவிற்கு மிஞ்சி விரும்புமிடத்துப் பலவல்லல்களுண் டாகின்றன. உண்டி முதலிய வற்றை யளவுக்கு மிஞ்சி விரும்பு கின்றவர்கள் சர்வதுக்க நிவிர்த்திப் பரமாநந்தப் பிராப்திவடிவ மோட்சத்தை யடைதற் கொருபோது முரியவரே யாகார்.

காமத்தை (ஆசையை) யடுத்துண்டாவது கோபமும், அதை யடுத்துண்டாவது உலோபமுமாம். உலோபமாவது தர்மவிரோத மாகப் பிறர் பொருளை விரும்புதல், அல்லது கிடைத்த பொருளை யிறுகப்பிடித்து (கரும்பை நையநெருக்குவது போலத் தம்மை வருத்துபவர்க்கன்றி அறத்தின் பொருட்டு) பிறர்க்குதவி செய்யா மையாம். உலோபகுணமுள்ள விடத்துப் பெற்ற பொருளைச்சிறி தாகவும் பெறுதபொருளைப் பெரிதாகவு மதிக்கு மிச்சை மிகுதி யாக வுண்டாகின்றது. இவ்விச்சையே பலதுன்பங்களுக்கு மூல மாம். இதுபற்றித்தான் சாந்தலிங்கசுவாமிகள் "ஆமுன் னிச்சை யே மேலுமே லும்பிறப் பளிக்கும்வித் தெனநெஞ்சே, நீமறுத்தி டாசைக்கடல் சுவருமே நினைவெனுந் திரைமாயும், போமிறந்தெ லா நினைவுமெப் பொழுதிலப்பொழுது பூரணமாய,சோம சேகரத் தெந்தைபொற் கழலையுந் தொழிலையமிலைநாமே" என்று கூறி யருளினர். இவ்வளவு பேரனர்த்தங்கட் கேதுவாயுள்ள விசேட விருப்பமென்னும் பேராசையைத்தன்னையறிந்து சதாநந்த வடிவ மாய் விளங்குஞ் சற்குரு மூர்த்தி யருளிய நெறியே யொழி த்து "எங்குஞ் சிதம்பரமாகப் பொங்கிவழியும்" நிலையைப் பெற் றுத் தானேதானாய் விளங்குந்தத்துவ மூர்த்திகளே யுலகாதீதமா யிருப்பர்.



## 28. தன்மயமாகுஞ்சாதனங் கூறல்.

(3 - 7 - 11.)

"நானற்ற போதத்தே நானென முத்திபை,நானெங்ஙனஞ்சொ ல்வ னுந்தீபற்,நான்மறைக்கெட்டாதென் றுந்தீபற" என்ற விரோத

வுந்தியார் கூறுவதை யுற்று நோக்குமிடத்து நானென்பதற்றால் நானனமுத்தி சித்தியா மென்பது பெறப்படுகிறது. நானென்பதன் பொருளிருவகையாம்; அவற்றுள், ஒன்று யதார்த்தமாம்; மற்றொ ன்று கற்பிதமாம். எந்த நான் விசாரவாயிலாக நோக்குமிடத்து நானென்னுஞ்சொல்லின் பொருளாகாதொழிந்து விடுகின்றதோ அந்தநான் கற்பிதநானும்; எந்த நான் எவ்வாற்றானும் கொள்ளத் தகாததும் தள்ளத்தகாததுமாய் நிலைபெறுகின்றதோ அந்தநான் யதார்த்தநானும். கற்பிதவடிவ நானென்னும் போதம் (புத்தி) தடையின்றி நீக்கப்பெற்றவர்க்கே யதார்த்த வடிவ நானென்னும் போத முதயமாம். அஃதுதயமான விடத்துத்தான் அவஸ்தாத்தி ரய சாட்சியாய் விளங்கும் நானென்பது தள்ளத்தகாததுங் கொ ள்ளத் தகாததுமா யுள்ள தென்பது நன்கு விளங்கும்.

நாம் யாதாவதொன்றை வேண்டு மென்று கொள்ளுகின் றோம்; மற்றொன்றை வேண்டாமென்று தள்ளுகின்றோம். கொள் ளுகின்றதும் தள்ளுகின்றது மாகிய அவை நாமல்லவென்பதற்கு நமதனுபவமே சான்றாக நின்று விளக்கும். நம்மையே நாம்தள்ளு வதும் கொள்ளுவதும் ஒருவாற்றானும் அமையாவாகலின், நாம் தள்ளப்படுவது கொள்ளப்படுவதென்னு மிரண்டற்கும் வேறா யிருக்கின்றோ மென்பது சிறிதூகித்துப் பார்த்தால் செவ்விதாக விளங்கும். நம்மை நாமே தள்ளுகின்றோம் கொள்ளுகின்றோ மெ னின், அது பொருந்தாது. கருத்தாவும் செயப்படு பொருளும் ஒருபோதும் ஒன்றா யிருப்பதில்லை. ஒன்றாயிருக்குமாயின், கருத் தாவாகிய குலாலனும் கடமாகிய செயப்படு பொருளும் ஒன்றா யிருத்தல்வேண்டும். அவ்வாறிருத்த லில்லையாகலின், ஒன்றைக் கொள்ளுவதும் மற்றொன்றைத் தள்ளுவதுமாகிய நமக்குக்கொள் ளப் படுவதும் தள்ளப்படுவதும் வேறாகவேயிருத்தல் வேண்டும். ஆகவே, நாமே நமக்குக்கொள்ளப்படுவதும் தள்ளப்படுவதுமாயி ருப்ப தில்லையாம். கடத்தைக்கொள்ளுகின்ற ஒருவன் அக்கடத் திற்கு வேறாகவும் படத்தை (ஆடையை) த் தள்ளுகின்ற வொரு வன் அப்படத்திற்கு வேறாகவும் இருத்தலைக்கவனித்து நோக்கு வோ மாயின், நாமே நம்மைத் தள்ளுவதுமில்லை கொள்ளுவது மில்லை; நம்மால் தள்ளப்படுவதும் கொள்ளப்படுவதும் நமக்கு வே றாகவே யிருக்கின்றனவென்பது வெளிப்படையாகத் தோன்றும்.

உடம்பு நம்மால் இருவினைக்கேற்றவாறு கொள்ளப்படுவதும் தள்ளப்படுவதுமா யிருத்தலின், நாம் உடம்பன்றும்; பின்னென்னெனின், அதற்குவேறாய அறிவு வடிவமாம். உடம்பினை நாம் தொன்று தொட்டுத்தொடர்ந்து வரும் மயக்கத்தினால் நானென்பதன் பொருளாகக்கொண்டிருப் பதனாற்றான் கூடுதலுடன் பிரிதலற்றிருக்கும் நிலையினைப்பெறாது கலக்கமுற்றுப் பலகவலைகளுக் கிருப்பிடமாகி யேக்க முறுகின்றோம்.

நானென்னுஞ் சொற்குப்பொருளுடம்பினையன்றி வேறில்லையென் றுள்ள பரியந்தம் கற்பித நானின் விளக்கமுண்டு. நானென்பதன் பொருள் உடம்பாகுமாயின், புகையுள்ள விடத்தெல்லாம் தீயிருப்பது போல நானென்னும் வியவகார முள்ளவிடத்தெல்லாம் குறிக்கப்பட்ட வுடம்பு நானென்பதன் பொருளாகவிளங்க வேண்டும்; நான் நான் என்னும் வியவகாரம் நனவிலும் கனவிலும் நிகழ்கின்றது. ஆண்டு நான் நான் என்பதன் பொருளாகக் குறிக்கப்பட்ட வுடம்பு வெவ்வேறாகக் காணப்படுதலின், உடம்பு நானென்னுஞ்சொல்லின்பொருளன்று. ஆனால் அந்த நானோநனவில் சுரோத்திரம், துவக்கு, சட்சு, சிங்குவை, ஆக்கிராணம் என்னும் ஞானேந்திரிய பஞ்சகம், வாக்கு பாதம் பாணி பாயுரு உபத்தமென்னும் கருமேந்திரிய பஞ்சகமென்னு மிப்பத்திந்திரியங்களின் கூத்தையும்,கனவில் மனஞ் செய்யும் (சொப்பன வுலக) இந்திரஜாலக்கூத்தையும், உறக்கத்தில் இவ்விரு கூத்தின் அபாவத்தையுமறிந்து அவற்றிற்குச் சாட்சியாயிருக்கின்றது. ஆதலால் அந்நான் எவ்வகையானும் உடம்பாகாதென் றுணருமிடத்து,யதார்த்த நானின் விளக்க முண்டாம்; யதார்த்த நானின் விளக்கமுண்டாய போதுதான் நானற்ற நானென முத்தி சித்தியாம்.

கொள்ளப்படுவது விருப்பிற்கு விஷயமாம்; தள்ளப்படுவது வெறுப்பிற்கு விஷயமாம். காணி இல்லம் ஆடை யணி முதலியன கொள்ளப்படுவனவா யிருத்தலின் அவை விருப்பிற்கு விஷயமும், தேள் பாம்பு முதலியன தள்ளப்படுவனவா யிருத்தலின் அவை வெறுப்பிற்கு விஷயமுமா மென்பது பிரசித்தமாம். ஒரு சமயத்தில் விருப்பிற்கு விஷயமாவது மற்றொரு சமயத்தில் வெறுபிற்கு விஷயமாதலும் ஒரு சமயத்தில் வெறுப்பிற்கு விஷயமாவது மற்றொருசமயத்தில் விருப்பிற்கு விஷயமாதலு முண்டு. வெயிற்

காலத்தில் விருப்பிற்கு விஷயமாகும் தண்ணீர் முதலியன குளிர் காலத்தில் வெறுப்பிற்கு விஷயமாதலும், குளிர்காலத்தில் விருப்பிற்கு விஷயமாகும் வெந்நீர் முதலியன வெயிற்காலத்தில் வெறுப்பிற்கு விஷயமாதலு மிதற்குச் சான்றும். விருப்புள்ள விடத்து வெறுப்பும் வெறுப்புள்ள விடத்து விருப்பு மிருத்தலின் இவ்விரண்டும் என்ஞான்றும் துன்பத்திற்கே யேதுவாம். கொள்ளப்படுவதும் தள்ளப்படுவதும் முறையே விருப்பு வெறுப்பிற்கேதுவாயும், அவ்விரண்டும் "வேண்டாம் விருப்பும் வெறுப்பும் அந்த வில்லங்கத் தாலே விளையுஞ் சனனம்" என மேலோர் கூறியவாறு பிறப்பிற்கேதுவாயு மிருத்தலின் கொள்ளப்படுவதும் தள்ளப்படுவது மின்றி யிருத்தல் பிறவித் துன்பத்தை நீக்கமுயலுகின்றவர்கட் கத்யாவசியகமான பணியாம். பலவகைய விரத்தினங்களுள் கோக்கப்பட்டுத் தொடர்ந்துள்ள நூல்போல அவஸ்தாத்திரயங்களுள் தொடர்ந் திருக்கும் நான் என்பது எனது யதார்த்தவடிவம்; அது கொள்ளப்படுவது மன்று, தள்ளப்படுவது மன்று; அது விருப்பிற்கும் விஷயமன்று; வெறுப்பிற்கும் விஷயமன்று; துரும்புபோல உபேட்சா புத்தி (நொதுமல் மதி) க்கும் விஷயமன்று என்று தெளிந்து பிறழாது பிரவிர்த்தி நிவிர்த்தியின்றி விளங்குகின்றவர்களே ஜீவன்முத்தராவர்.

தள்ளப்படுவதும் கொள்ளப்படுவது மாகாது அவஸ்தை மூன்றிலும்அறிவு சொரூபமாய் விளங்கும் நானென்பது மனமிறந்து நின்ற நிலையில் பேராநந்த வடிவமாய் விளங்குதலின், அதனையுள்ளவாறு சற்குருவாயிலாக வறிந்து தள்ளுவது கொள்ளுவதென்னும் புத்தி யுண்மைநோக்கி லில்லா திருந்தாற்றான் உடம்பினிடத்து யானென்னும் புத்தி யகலப்பெற்று உணர்வினிடத்து யானென்னும் புத்தி யுள்ளவாறு வரும். உடம்பினிடத்து யானென்னும் புத்தி யகன்று இதுவென்னும் புத்தி ஸ்திரமாக வருதற்கும் சிரவண மனன நிதித்யாஸனங்களை (கேட்டல், சிந்தித்தல், தெளிதல்களை) அத்தியாவசியகமாகச் செய்தல் வேண்டும். நாகம் நாளடைவாகத் தோலை யுரித்து வந்து முடிவிலதனை விட்டுவிடுவதுபோல உடம்பின்கண் நானென்னும் புத்தியைச் சிரவணமுதலிய வற்றால் பையப் பையவிட்டு வந்து முடிவில் அதனைத்தெளிவாக நானல்லவென்று விட்டுவிடவேண்டும். உடம்பினிடத்து நானென்னும் புத்தி நீங்கி இது வென்னும் புத்தியுண்டாகி அறிவி

னிடத்து நானென்னும் புத்தி பிறழ்வின்றி வந்தபோதுதான் உலகந் தன்மயமாக விளங்கும். உலகந் தன் (சிவ) மயமாக விளங்கப் பெற்றவர்க்கு வேறு சிந்தனை யின்மையின், அவர் முடிவில் சிவமயமாகவே விளங்கிச் சிதைவின்றி வாழ்வர்.



28. மனத்துறவால் வரும் மாண்பினைக்கூறல்.

(10 - 7 - 11.)

"தலைப்பட்டார்தீரத் துறந்தார் மயங்கி,வலைப்பட்டார்மற்றையவர் (முற்றத்துறந்தார் வீட்டினைத் தலைப்பட்டார்; அங்ஙனந் துறவாதார் மயங்கிப் பிறப்பாகிய வலையுட்பட்டார்)" என்று பொய்யில் புலவராகிய திருவள்ளுவ நாயனார்கூறுவதால் தீரத்துறத்தல்சிந்தையுமொழியுஞ் செல்லா நிலைமைத்தாகிய முத்தியடைதற்குச்சாதனமாமென்றும்தீரத்துறவாமைபிறப்பாகியவலையுட்படுதற்குச்சாதனமாமென்றும்,செவ்விதாக விளங்குகின்றன. தீரத்துறத்தலாவது சர்வசங்க பரித்தியாகமாம். இதனால் மனைவி மக்கள் முதலியவர்களையும் வீடு காணி முதலியவற்றையும் முற்றும் பற்றின்றி விட்டவர்க்கே வீடடைதல் கூடும்; ஏனையோர்க்கது கூடாது என்பது நன்கு பெறப்படும். தீரத்துறத்தல் இருவகையாம். அவற்றுள், ஒன்று மனத்தாலும் காயத்தாலும் மனைவி மக்கள் முதலியவர்களையும் வீடு காணி முதலிய வற்றையம் விட்டிருத்தலாம்; மற்றொன்று மனைவி மக்கள் முதலியவர்களையும் வீடு காணி முதலியவற்றையுங் காயத்தால் மாத்திரம் விட்டிருத்தலாம். மனத்தாலும் காயத்தாலும் மனைவி முதலியோரிடத்தும், மனை முதலியவற்றினிடத்தும் பற்றுவிட்டிருப்பவர் உண்மைத் துறவிகளாவர். மனத்தால் மாத்திரம் மனைவிமுதலியோரிடத்தும் வீடுமுதலியவற்றினிடத்தும் பற்றுவிட்டுக்காயத்தால் விடாதிருப்பவர் உள்ளத்துறவுடையோ ராவர். காயத்தால் மாத்திரம் மனைவி முதலியோரையும் வீடு முதலியவற்றையும் விட்டு மனத்தால் விடா திருப்பவர் "ஆசைவன் பாசத் திரளினாற் கட்டுண் டரும்பிணி யீக்கடிக் கனுங்கி,யேசுறு போகக் கதைகளான் மொத்துண் டிச்சைமுட் கோலினு லுலைந்து, காசுறு கருமச் சேற்றிலே யழுந்திக்கடுஞ்சகக் காட்டிலே சுழன்று, வீசுமா மோகத் தளிர்நிழற் றுயிலும்" தன்மையுடையவராயிருத்தலின் அவர் பெரும்பான்மையுங் கூடாவொழுக்கத் துறவிகளாவர்.

"விட்டசனுந் துறவிற்குவிராசங்கா ரணமன்றிவேடமன்றே" என்றன்றோர் கூறியிருத்தலால், துறவிற்கேது விராகமன்றிப் பிறி தொன்று மன்றுமென்பது நன்கு விளங்கும். விராகம்-இது வேண் டும் அதுவேண்டா மென்னும் கிட ஆசையில்லாமை. விராகங் கார ணமாக வுண்டாகும் துறவு நிலைப்பதன்றி வேறுகாரணமாக வுண் டாகுந் துறவு நிலைப்பதன்று மாகலின், வைராக்கியத்தைப் பூரண மாகப் பெற்றவர்கட்கே துறவு பூரணமாகச் சித்தியாம். "கெடு க்க வல்லதுங் கெட்டவர் தங்களை, யெடுக்க வல்லது மிம்மன மென்றதை"க் கருதி மனத்தை விராக வாயிலாக வடக்கித் தமது வசமாக்கிப், பற்றுச் செய்தற் குரியன யாவும் "சந்தையிற் கூட் டம்" போல்வனவாமென்று திடமாக வறிந்து, அவற்றின்கண்பற்று விட்டிருப்பவரே தத்துவஞான வாயிலாக முத்திபடைவதற் குரி யவ ராவர். இத்தன்மை யுடையார் இல்லறவொழுக்கத்திலுமிருப் பர்; துறவற வொழுக்கத்திலு மிருப்பர். இல்லற வொழுக்கத்தி லிருந்தோர் ஜனகர், விதுரர், திருவள்ளுவ நாயனுர் முதலாயி னோர்; துறவற வொழுக்கத்தி லிருந்தோர் சுகர், வாமதேவர், பட் டினத்தடிகள் முதலாயினோர்.

தத்துவஞான முண்டாவதற் கேது மனத்துறவா யிருத்த லின், மனத்துறவே மோட்ச விருப்புடையவரால் அத்தியாவசி யகமாகக் கொள்ளத் தக்கதாம். மனத்துறவின்றிக் கேவலங் காய த்துறவு கொள்ளுதல் ஒருவாற்றால் மனத்துறவிற் கேதுவாயிருப் பினும், அது பல வாற்றானும் பல வநர்த்தங்கட் கேதுவாயிருத் தலின், அதனை மாத்திரங் கொள்ளுதல் அத்துணை சீரிய தன்றாம். மனத்துறவோடு காயத்துற விருந்தால், அது பொற் பணியிற் பதித்த விரத்தினம்போற் சிறந்து விளக்கும். முன்னர்ப் பலவகை யானுந் திருசியப் பொருள்களின் றன்மையைச் செவ்விதாக விசாரித்துணர்ந்து, அவற்றின்க ணுள்ள பற்றினைச் சிறிது சிறி தாக விட்டு, பின்னர்த் தீரத் துறந்த வுத்தமர்கள் துறவறங்கொள் ளாமலில்லறத் திருப்பினும், இல்லறத்தை விட்டுத் துறவறங் கொண்டாலும் அவர்கட்குத் தத்துவ ஞானோற்பத்திக்குத் தடை யின்றாம். இது பற்றித்தான் தாயுமான சுவாமிகள் "அந்தக் கரண மடங்கத் துறப்பதுவே, எந்தத் துறவினுநன் றெந்தாய் பராபரமே" என்றருளிச் செய்தனர்.

துக்கத்திற் கேது கிடைத்த பொருளிற்றிருப்தியின்றி மேன் மேலும் பொருளைத் தேடுதலும், அதனைக் கள்வர் முதலாயினோ ரபகரித்துப் போகாவாறு காத்தலும், இழத்தலுமாம். யான் குறை வுடையேன்; பெரும் பொருளைத் தேடிக்கொண்டால் நிறைவுடை யவனாவேனென்னுங் கருத்துடையவர்கட்குப் பலவாறாகப் பாடு பட்டுப் பொருளைத் தேடுதலும் அதனை வருத்தமுற்றுக் காத்த லுஞ் சம்பவிக்கின்றன; வருத்தமுற்றுக் காக்கும்பொருளையிழந்த போ துண்டாகுந் துக்கத்திற்கோ அளவின்றாம். எவ்வளவிற்கெவ் வளவு பொருள்களிற் பற்று மிகுதியாகின்றதோ அவ்வளவிற் கவ் வளவு துன்பம் பெருகிக்கொண்டே வருகின்றதென்பது கண் கூடாம். இதனால் பொருளை மேன்மேலுந் தேடியுழலல் துக்கத் தை விலை கொடுத்து வாங்குவது போல்வதா மென்பது இனிது புல னாம். பொருளாலே ஒருவன் எக்காலத்தும் நிறைவுடையவனாவ தில்லையாம். சார்வபௌம னென்னுஞ் சக்ரவர்த்திக்குந் திருசியப் (காணப்படும்) பொருளால் திருப்தி யுண்டாவதில்லை யென்றால், நமக்கெவ்வாறு திருசியப் பொருளால் திருப்தி யுண்டாகும்? இது தாயுமான சுவாமிகள் "ஆசைக்கோ ரளவில்லை யகிலமெல்லாங் கட்டி யாளினுங் கடன்மீதிலே யாணைசெல வேநினைவ ரளகேச னிகராக வம்பொன்மிக வைத்த பேரும், நேசித்து ரசவாத வித் தைக் கலைந்திடுவர் நெடுநா ளிருந்த பேரும், நிலையாக வேயினுங் காயகற் பந்தேடி நெஞ்சுபுண் ணாவர்" என்று கூறியிருப்பதனா லும் நன்கு விளங்கும்.

திருசியப் பொருள்களிலுள்ள பற்றினை முற்றும் விட்டவர் க்கே இம்மையி லுண்டாகும் துன்பமும் மறுமையி லுண்டாகும் துன்பமும் முற்று மொழியும். தேகம், இந்திரியம், பிராணன், மனம் முதலியனவெல்லாம் தன்னாலறியப்படுவனவாயிருத்தலின், அவை தானல்லவென்று அவற்றின்கண் யானென்னும் பற்றினை முற்றும் விட்டவர்க்கே மனைவி முதலியோரிடத்தும், வீடு முத லிய வற்றினிடத்து முள்ள எனது என்னும் பற்றுச் செவ்வை யாக வொழியும்; தேக முதலியவற்றின்கண் யானென்னும் பற் றினை விடாது, மனைவி முதலியோரிடத்தும் வீடு முதலியவற்றி னிடத்தும் எனது என்னும் பற்றினை விட முயலுதல் மரத்தினை ஊர்பேரில்லாது முற்றுமழிக்க முயல்வோன் அதனது மூலவே ரையழிக்க முயலாது கிளை முதலியவற்றை யழிக்க முயல்வது போலவாம்.

திருசியப் பொருள்களில் எவ்வளவிற்கெவ்வளவுபற்று நீங்குகின்றதோ அவ்வளவிற் கவ்வளவு துக்கத்தினீக்க முண்டாம்; தனது நிஜவடிவத்தின் விளக்கமு முண்டாம். தனது நிஜவடிவத்தின் விளக்கமே தத்துவஞானமா மாதலின், அதனால் சர்வதுக்க நிவிர்த்தியும் பரமாநந்தப் பிராப்தியுமாய மோட்சந் தடையின்றி யுண்டாம். சர்வதுக்க நீக்கத்திற்கும் பரமாநந்தப் பிராப்திக்கும் நிஜவடிவ் விளக்கத்தின் வாயிலாக மனத்துறவு காரணமாக விருத்தலின், அதனை மிகமுயன்று சம்பாதித்தல் மக்களது முக்கியமான கடமைபாம். இது 'யாதனின் யாதனி னீங்கியா னோதல் லதனி னதனி னிலன்' என்று திருக்குறள் கூறுவதாலும், "எத்தனையெத் தனைநீத்தா யகிலத்தைப் பரஞ்சுடரா யெறிக்குஞ் சோதி,யத்தனையத் தனைதோன்றும்" என்று ஞானவாசிட்டங் கூறுவதாலும் செவ்விதாகத் தோன்றும்.

விடுவது பற்றுவதென்னு மிரண்டனுள், திருசியப்பொருளைத் துக்கத்தொகுதி யென்று செவ்விதாக வுணர்ந்து அதனை மனப்பூர்வகமாக விடுவது துக்க வொழிவிற்கும், திருசியப் பொருளைச் சுகசாதனமா மென்று கருதி அதனைப் பற்றுவது துக்கம் பெருகுவதற்குங் காரணமாயிருத்தலின், துக்கமின்றி யிருக்க விரும்புகின்ற வொவ்வொருவரும் திருசியப் பொருள்களின் பற்றினை மனத்தால் விட்டிருக்க முயலுதல் அத்தியா வசியகமான கடமையாம்.



## 29. தியானஞ்செய்யுந் திறத்தினைக் கூறல்.

## (17-7-1911).

பெரும்பான்மையாக நாம் பசிப்பிணி முதலியவற்றாற் றுன்புறும்போது நம்மோடு சம்பந்த முடையார் நமக்கு வெறுப்பிற்கு விஷயமாகத் தோன்றுவதால், நாம் அவர்களிடத்து முகமலர்ச்சியோடு இன்சொற் கூறாது பராமுகமாக விருக்கின்றோம்; அப்போது நம்மோடு சம்பந்த முடையார் நமக்குக் கீழ்ப்பட்டவர்களாயின், அவர்களை யவமானமாகப் பேசுவதோ டொழியாது அடித்தலுஞ் செய்கின்றோம். நம்முடைய மனம் விரும்பிய பொருள் பெறாமை காரணமாகக் கலங்கும்போது நமது முகம் கிளர்ச்சி குன்றி யிருக்கின்றமையால் நாம்பிணிவாய்ப் பட்டார்போலக்

காணப்படுகின்றோம். மனம் ஒரு நிலையில் நில்லாது கலங்குவதே பல துன்பங்கட்குங் காரணமாயிருக்கின்றது. கலங்குகின்ற மனமுடையவர்கட்குக் காணப்படு மொவ்வொன்றும் துன்பமாகவே தோன்றுகின்றதென்பதற்குச் சிறிதேனு மைய மின்றாம். மனக் கலக்கம் துன்பத்திற்குக் காரணமாகவும், அஃதின்மை இன்பத்திற்குக் காரணமாகவு மிருத்தலின், மனக்கலக்க மில்லா நிலையை இன்பத்தைப்பெற விரும்புகின்ற வொவ்வொருவரும் அத்தியாவசியகமாகத் தேடத் தக்கதாம் "சிந்தனைவா தனையின்றித் திரமான மனத்தினையே தியான மென்ப" என்று சான்றோர் கூறுதலால், மனம் காமக்குரோதாதி வாசனையில்லாது, அலையிலாத கடல்போலவும், சுவரிலெழுதிய சித்திர தீபம்போலவும், அசைவின்றி நிற்பதென்னுந் தியானத்தினைப் பிரயத்தன பூர்வகமாகப் பெற்ற விடத்துத்தான் நாம் எத்தகைய துன்பம் நேர்ந்தாலும் அதனைப் பொறுமையாக அனுபவிக்குந் தன்மையினைப் பெறுவதோடு, பிறர் வெறுக்கத்தக்க காரியங்களையுஞ் செய்யா தொழிவோம்.

காற்றானது சுபாவமாக வசையுந் தன்மையினை யுடையதாயிருப்பதுபோல நமது மனமும் எப்போதும் யாதாவதொன்றனை விட்டு விட்டுச் சிந்திக்குந்தன்மையினை யுடையதா மென்பது மனத்தி னியல்பினைச் சிறிது கூர்ந்து பார்ப்பவர்க்கு விளங்காதிருப்பதன்றாம். "ஆயின் மிக்கோ ரரிய செயலெலாம்,தேய மிக்க மனத்தை நிறுத்தல்" என்று நல்லா றொழுகி நடுநிலை பெற்ற நாவலர் பெருமானுன சிவப்பிரகாச வள்ளல் கூறுவதால் மனத்தை அதன் வழியே விடாது தம்வழிபாக வரச்செய்வதே யறிவுடையார் செயலென்பது தெற்றென விளங்குதலின், இஃதுயிர், இஃதுடம்பு, இதுமனமென்று ஒன்றற்கொன்றுள்ள வேறுபாட்டினை நன்குணரும் விவேகத்தைப் பெற்றுக் காமக்குரோதாதிகளால் தாக்குண்டு கலங்குகின்ற மனத்தைப் பகவத்தியான மென்னு மருந்துண்டு கெடுப்பதே நமது முக்கியமான கடமையாம்; இது செய்யாது வேறெது செய்யினும் நமது மனம் ஒருபோதும் ஒரு நிலையினை யடைந்து உபசாந்தத்தினைப் பெறுவதேயின்றாம். உபசாந்தத்தைப் பெற்ற மனத்தை யுடையவர்க்குத்தான் உலகம் பரமாநந்த வீடிவமாகத் தோன்றும்.

"புழுவாய்ப் பிறக்கினும் புண்ணியா வுன்னடி யென்மனத்தே, வழுவா திருக்க வரந்தர வேண்டும்" என்று திருநாவுக்கரசு சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளி யிருப்பதன் அருமைபெருமைகளைக் கவனிப்பவர்கட்கன்றோ, தியானத்தின் மாட்சிமை செவ்விதாகத் தோன்றும். புழுவாய்ப்பிறந்த காலத்திலும் ஈசனது இணையார் திருவடியை மறக்கலாகா தென்று கூறப்படுமாயின், மக்களாய்ப்பிறந்து வாய்ப்புடைய வுறுப்பமைந்து, பகுத்துணர் வென்னும் பாக்கியம் பெற்றுள்ள நாம் ஆநந்த வடிவ அற்புத மூர்த்தியை யரைக்கணமேனுந் தியானியாது காலங்கழிப்பது பெருமடமையா மன்றோ? களிப்புக் கவற்சி(வெறுப்பு), இளமை மூப்பு, பிறப்பு, இறப்பு என்னுந் துவந்துவங்களை (இருமைகளை) நாமோயா தடைந்து வருவதற்குக் காரணம் நாம் நம்முடைய நாட்களைப் பயனுள்ள நாளாகச் செய்யாது இம்மைப்பயனொன்றையே கருதி யெவ்வழியாகவேனும் பொருளைத்தேடியின்புறமுயல்வதே யாம். தேடிய பொருள்களுள் சிறிதும் இறந்தபோது நம்முடன் வருவதில்லை யென்பதைச் சிறிது சிந்தித்துப் பார்ப்போமாயின், எப்போதாயினும் எமன் வருவான், அவனைத் தடுத்தல் ஒருவாற்றானுமாகா தென்னு முணர்வுடையவராகி மறுமைக்குதவியாகச் சமயம்நேர்ந்தபோதெல்லாம் பரமேசனை மனத்தால் சிந்தித்தலும், வாக்காற் றுதித்தலும், காயத்தால் வணங்குதலும் பெரியோர் கூறியவாறு தவறாது செய்து நன்னிலைக் காளாவோம். இது பற்றித் தான் நம்மாழ்வார் "உள்ள முரைசெய லுள்ளவிம் மூன்றையும், உள்ளிக் கெடுத்திறை யுள்ளி லொடுங்கே" என் றருளிச் செய்தனர்.

யாவர்க்கும் பணிவானவற்றை நினைத்துச் சொல்லுதலும் செய்தலு முடையவன் மேனிலையை யடைதலும் அவ்வாறு செய்யாதவன் கீழ்நிலையை யடைதலும் உலகப் பிரசித்தமா மன்றோ? நாம் பேரன்புடன் பரமேசனை நினைத்தும் துதித்தும் தொழுதும் வருவோமாயின், தவறாது அறிவிற் சுக சமாதியை யடைவோ மென்பதற் காட்சேபம் யாதாம்? ஈசுவரத்தியானத்தினும் மேலான புண்ணிய கருமம்யாதுளது? கிரிச்சிரம், சாந்திராயண முதலிய விரதங்களைச் செய்வதும் சிவத்தியானம் அல்லது விஷ்ணுத் தியான முதலிய வற்றைச் செம்மையாகச் செய்தற் பொருட்டாமாகலின், ஈசுரத்தியானமே புண்ணியகருமங்களனைத்தினும்

மேம்பாடுடையதாம். இவ்வீசுவரத்தியானம் பலனை விரும்பிச் செய்யுமிடத்துக் கேவலம் போக (சுக) சாதனமாகவும், பலனை விரும்பாது செய்யுமிடத்துப் போக சாதன மாவதுடன் சித்த சுத்தி வாயிலாகப் பாரம்பரையாய்ச் சீவன் முத்தி பெறுதற்குச் சாதனமாகவு மிருத்தலின், பலனைவிரும்பாது அதனைச்செய்தலே யறிவுடையாரது கடமையாம்.

உண்மையாகத் தியானஞ் செய்பவர் "தந்தைதாய் குரவ ரீசான் சங்கர னிராசை பெண்டிர், மைந்தர்பல் லுயிருஞ்சுற்றமா சிலா வீச னன்பர், அந்தமில் பிறவி யேழு மடுபகை" என்னுங் கருத்தினையுடையவரா யிருப்பர். இவ ரிக்குணங்களை யுடையவரா யிருப்ப ரென்பது அவரோடிருந்து சில காலம் பழகுவதால் நன்கு வெளியாம். வயிறு வளர்த்தற் பொருட்டுக் குருவேடம்பூண்டு கொக்குப்போன்று கண்மூடி யாதேனு மோராசனத்திருந்து தியானஞ் செய்வது போன்று நடிப்பவரது வஞ்சக வொழுக்கம் மறைபடுவ தின்றாம்; நீர்க்குளமூத்திப பிப்பாய்முதலியன விரைவாக மேலே வந்து விடுவது போல அவரெவ்வாறு மறைப்பினும் அது மறைபடாது வெளிப்பட்டு விடும். அவரது வஞ்சக வொழுக்கத் தைமுன்னின்று வெளிப்படுத்துங் குறி அவரிடத்துள்ள தற்போத மேயாம். தற்போத முள்ளவர் ஒருவாற்றானும் தியானமென்னுந் திரவியத்தைப்பெற்று, அது வாயிலாகச் சீவன்முத்தி பெறுந்திறத்தின ராவதில்லை யென்பது திண்ணமாம். இத்தற்போத (யானென் னு மகங்கார) முடையவர் அலங்காரமாகத் தவவேடத்தால் தம்மை மறைத்துப் பிறர்மனைவியரைப் பெற்ற தாயரெனவெண்ணுது விரும்புதல், உணவு நம் பொருட்டாக விருக்கின்றதன்றி உணவின் பொருட்டாக நாமிருப்பதில்லை யென் றுணராது போகத்தை யனுபவித்தற்பொருட்டு உடம்பு பூரிக்க அறுசுவையோடு கூடிய வுணவினை யுண்ண விச்சித்தல் முதலிய கூடா வொழுக்கங் கட் குறைவிடமா யிருப்பர். இத்திறத்தினரைப்பற்றி யன்றோ திருமந்திரம் "ஆடம்ப ரங்கொண் டடிசிலுண் பான்பயன், வேடங்கள் கொண்டு வெருட்டிடும் பேதைகாள், ஆடியும் பாடியு மழுது மரற்றியுந், தேடியுங் காணீர் சிவனவன் தாள்களே" என்று கூறிற்று.

சத்துவம், இரசசு, தமசு என்னு முக்குணங்களுள், சத்துவ குணத்தால் அன்பு அருள் சிரத்தை பத்தி தியான முத

லியனவும், இரஜோகுணத்தால் காமம் வெகுளி உலோபம் முதலி யனவும், தமோகுணத்தால் மூடம் சோம்பல் முதலியனவு முண் டாவனவாயிருத்தலின், சதாநந்த நிலையை யடைதற் பொருட்டுத் தியானஞ்செய்ய முயலுகின்றவர்கள் பிரயத்தன பூர்வகமாகத் தமோ குணத்தையும் ரஜோ குணத்தையு மொழித்துச் சத்துவ குணத்தைப் பூரணமாகப் பெறுத லத்தியாவசியகமாம். சத்துவ குணத்தைச் செவ்வையாகப் பெறாதவர்கள் ஒருபோதும் தியா னஞ் செய்தற் குரியவரே யாவதில்லை.



## 30. நல்வினைசெய்யின் நலம்பெறலா மெனல்.

(24-7-1911).

ஆற்றில் வெள்ளம் வரும்போது பள்ளமாகவிருந்தவிடம் மே டாகவும், மேடாக விருந்த இடம் பள்ளமாகவும் மாறி மாறி வரு வதுபோல நமக்குச் செல்வமும் தரித்திரமும் இருவினையின் பய னாக மாறி மாறி வருகின்றனவென்ப துணராது நாம் செல்வம் வரும்போது களிப்படைந்தும், தரித்திரம் வரும்போது கவலை யடைந்தும் வருகின்றோம். செல்வம் வருவதற்கும் தரித்திரம் வரு வதற்குங்காரணம் நம்முடைய வினையாயிருத்தலின், வினையை யெண்ணிச் சமாதான சித்தத்தோடிருந்தாற்றான் நாம் களிப்பா லும் கவலையாலும் வதையாம லென்று மொருநிலையா யிருக்குந் தன்மையினைப் பெறுவோம்.

செல்வம் வருவதற்குக் காரணம் இப்பிறப்பிற் செய்தமுயற்சி யென்றும் தரித்திரம் வருவதற்குக் காரணம் முற்பிறப்பிற்செய்த தீவினை யென்றும் நாம் பெரும்பான்மையாகக் கருதுகின்றோம். ஒரு சமயத்தில் நாம் எவ்வளவு பெருமுயற்சி செய்தாலும் விரும் பியபொருள் சித்தியாது போவதையும் மற்றொரு சமயத்தில்சிறு முயற்சி செய்வதாற் பெரும் பொருள் சித்திப்பதையும் ஊன்றிப் பார்ப்போமாயின், விரும்பியபொருள் சித்திப்பதற்கும் சித்தியா மைக்கும் காரணம் பிறிதொன்றிருக்க வேண்டுமென்பது பெறப் படும். அக்காரணம் முற்பிறப்பிற் செய்த நல்வினையும் தீவினையு மாம். இப்பிறப்பின்கண் முற்பிறப்பில் நல்வினையைச் செய்திருந் தால் அதன் பயனாகச் செல்வத்தைப் பெறுகின்றோம்; தீவினை யைச் செய்திருந்தால் அதன்பயனாகத் தரித்திரத்தைப் பெறுகின்

ரோம். செல்வமடைதற்கும் தரித்திர மடைதற்கும் நாமே நல்வினை தீவினை வாயிலாகக் காரணமாயிருத்தலால் நாம் தீவினையை விட்டு நல்வினையைச் செய்துவந்தால் இனிவரும் பிறப்பிற் செல்வத்தையடைந்து வாழ்தல் கூடும்.

தொடங்கிய காரியமுடிவு பெற்றபோது நமதுவல்லமையைப் பற்றி மெச்சிக்கொள்வதும் முடியாதபோது பிறரை வெறுத்து மனநோவதும் நமக்கியல்பாகவிருக்கின்றன. அப்படி செய்வதால் அகங்காரமும் பாவமு மதிகரிக்குமேயன்றி அதனால் நமக்கொரு நன்மையு முண்டாவதே யின்றாம்.

"இலர்பல ராகிய காரண நோற்பார், சிலர்பலர் நோலாதவர்—(உலகத்துச் செல்வர்கள் சிலராக † நல்கூர்வார் பலராதற்குக் காரணம் யாதெனின், அது தவஞ்செய்வார் சிலராக அது செய்யாதார் பலராதல்" என்று தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனார் திருவாய் மலர்ந்தருளி யிருப்பதை நோக்குமிடத்துச் செல்வம் வருவதற்குக் காரணம் தவமென்பது சிதையாத சித்தாந்தமாகப் பெறப்படுதலின், தவத்தைச் செய்பவரே நன்மையென்றுசொல்லப்படுவன வனைத்தையும் பெறுதற்குரியவ ராவர். தவமாவது பொதுவகையாகத் தமக்கு வருந்துன்பத்தைப்பொறுத்துக்கூடுமான வரையிற்பிறவுயிர்க்குத்தீமைசெய்யாதிருத்தலாம். மார்க்கண்டேயர் முதலியோர், பெருஞ் சிறப் பெய்தியது எதனால்? தவத்தாலன்றோ? தவமுடையார்செய்யும்பூசையைப்பரமேசுவரன் ஏற்றுக்கொள்ளுகிறா னென்பது சான்றோரது நிச்சயமாமாதலின், நாம் தவத்தோடு பரமேசுவர ஆராதனைசெய்தால் பெருஞ் சிறப்படைந்து பேரானந்த மடைவோ மென்பதற்குச் சிறிதேனுஞ் சந்தேகமின்றாம். முற்பிறப்பிற் றவஞ்செய்யாத காரணமாக வன்றோ பலரிப்பிறப்பிற் றரித்திரத்தால் வருத்த முற்றேங்குகின்றனர். பிறர் செல்வ முடையவரா யிருப்பதைக்கண்டு பொறாமையடைவோ மாயின் மீண்டும் நாம் தரித்திரத்தால் வருந்தும் நிலைமையை யடைவோமே யல்லாது, செல்வத்தாற் சிறப்புறும் நிலைமையை யொருபோது மடையவே மாட்டோம். இதுபற்றி யன்றோ பொய்யில் புலவர் "அழுக்கா றெனவொரு பாவி திருச்செற்றுத், தீயுழி யுய்த்து விடும் (அழுக்காறென்று சொல்லப்பட்ட ஒப்பில்லாத பாவி தன்னை யுடையானை இம்மைக்கட்

† நல்கூர்வார்—தரித்திரர்.

செல்வத்தைக் கெடுத்து மறுமைக்கண் நரகத்திற் செலுத்தி விடும்)'' என்று கூறியருளினர். அழுக்காறு—பொறுமை.

பொறுமை யுடையவன் யாண்டும் நல்ல நிலைமையை யடைவது முடியா தாகலின், பொறுமையை விட்டு, அவர்க்குச்செல்வம் அவர்செய்த நல்வினையாற் கிடைத்தது; நாம் நல்வினைசெய்யாமையினால் நமக்குச் செல்வம் கிடைக்கவில்லை; இனி நாமும் நல்வினையைச் செய்வோமாயின், நமக்குஞ் செல்வங் கிடைக்கும்; செல்வமின்றி நாம் வருந்துவதற்குக் காரணம் அவரன்றே! நம்முடைய வருத்தத்திற்குக் காரணம் நாமாகவிருக்கப் பிறரை நோவது பேதைமைக் குணமாமென்னும் பெருந்தன்மையோடு நல்வினையை விரைந்து செய்பவரே மனிதப் பிறப்பின் பயனை யடைவதற் குரியவ ராவர். இது நாவலர் பெருமான் ''நாச்செற்று விக்குண்மேல் வாராமு னல்வினை, மேற்சென்று செய்யப் படும்--(உரையாடா வண்ணம் நாவை யடக்கி விக்கு ளெழுவதற்குமுன்னே வீட்டிற் கேதுவாகிய அறம் விரைந்து செய்யப்படும்)'' என்று திருவாய் மலர்ந்திருப்பதனாலும் நன்கு விளங்கும்.

நல்வினை, பயனை விரும்பிச் செய்தால் போகத்திற்கும், பயனை விரும்பாது செய்தால் சித்தசுத்தி வாயிலாக வீட்டிற்கும் காரணமா யிருத்தலின், செல்வத்தையே யன்றி மோட்சத்தை விரும்புகின்றவர்களும், நல்வினையை அத்தியாவசியகமாகச் செய்யத் தக்கதாம். காணப்படு மொவ்வொன்றும் மாறிப் போகுந் தன்மையுடையதென்றும், துக்கத்தையே யுண்மையாகத் தருவதென்றும் செவ்வையாக வறிந்து, மாறுபாடின்றி ஆநந்த வடிவமாயுள்ள மோட்சத்தைப்பெறவிரும்புகின்றவர்கள் செய்யத்தக்க நல்வினை குரு பணிவிடை, அக்குரு கூறியவாறு தியானஞ் செய்தல், இந்திரியங்களையும் மனத்தையு மொருமுகமாகச் செய்து பரமேசுரனது வடிவமே குரு மூர்த்தமென்றுன்னி அவரது பங்கயப் பாதத்திற் செலுத்துதல் முதலியனவாம். இவ்வாறாய நல்வினையைச் செய்துவருபவ ரிடத்துத்தான் பரமபதி பங்கயக்கண்வைத்து அவரைப் பரிபாலித்தருளத் திருவுளங் கொள்ளுவன். நெருப்பானது தன்னை நெருங்கினவரது குளிரைப் போக்குவதுபோல, பக்தவத்ஸலனும் தனது பங்கயப் பாதத்தை யடைந்தவர்க்குத் தான் பிறவித் துன்பத்தைத் தத்துவ ஞான வாயிலாக வொழிப்பன்; ஏனையோர்க் கொருபோதும்

சிறப்புவகையாகக் கருணை புரிபா னென்பது சாஸ்திர நிச்சயமா யிருத்தலின், பரமேட்டியினது பங்கயப் பாதத்தைச் சரணுகதி யாக வடைதலே பரமமான நல்வினையாம்.

கடவுளைக் கண்டவரார்? இருந்தாலன்றோ அவர் நமக்குப் பய னளிக்கப் போகின்றார் என்றற் றொடக்கத்தனவாகிய பாவ வார்த் தைகளைப் பேசி, போகத்தையே பெரிதும் விரும்பி, அஞ்சத்தக்க காரியங்களை அஞ்சாது செய்து, பொருளைத் தேடிப் பொய்யுடலை வளர்த்து மெய்ப்பொருளை நல்லோரையடுத்தறியாது போகின்ற வர் தாம் மறுபிறப்பிற் றரித்திரத்தாற் பற்றப்பட்டுத் துன்பத்தை யடைந்து துறை யறியாது மயங்குந் தன்மையினராவர். நாமெங் கிருந்து வந்தோம்? எங்கே போவோம்? ஏன் வந்தோம்? என்பது பற்றிச் சிறிது சிந்தித்துப் பார்த்தால் நல்வினையின் பயனும் தீவினையின் பயனுஞ் செவ்விதின் விளங்கும்.

செல்வ முடையவர்களுள் பலர் நமக்குச் செல்வம் நல்வினை யின் பயனுகக் கடவுளாற் கொடுக்கப்பட்ட தென்பதுணராது. செல்வச் செருக்கால் ஏழைகளை மனமிரங்கிப் பாராதும் அவர் சொல்வதைச் சிறிதேனும் மனம்பொருந்திக் கேளாதும் இரு மாந்திருக்கின்றனர். இச்செல்வம் நமக்குக் கிடைத்தது பலர்க்கு முபகாரஞ் செய்தற் பொருட்டேயாம்; இது நமக்கே யுரித்தான தன்று; இதனைப் பலர் நமது நமதென்று சொல்லச்சித்தமாயிருக் கின்றனர்; நாமும் முன் னொருவர் நமதென்று சொல்லியதனை யேதா னிப்போது நமதென்று சொல்லுகின்றோம் என்று கருது வாராயின், அவர் உலோப குணத்தால் பாவச் செயல்களைப் புரி யாது பரமேசுவர பத்தி வாயிலாக நல்வினைகளைப் புரிந்து நன் னிலையைப்பெறுவர். தரித்திரரும் நல்வினை செய்யாமையால் வறு மை யுண்டாயதென்று கருதி நடுவுநிலைமை தவறாது நல்வழியி லொழுகுவாராயின், அவரும் பரமேசுரனது கருணையால் பெருஞ் செல்வத்தைப் பெறுவர். துக்கமடைதற்கும் சுகமடைதற்கும் நல் வினை தீவினை வாயிலாக நாமே காரணமாயிருத்தலால், தீவினை யெ லாமொழித்து மங்கலமெலா முதவுந் தேவதேவனைத் திரிகரண சுத்தியாகத் தியானித்துத் துதித்து வணங்கி, மெய்புரையாடல் முதலிய நல்வினைகளைச் செய்து வருவோமாயின், நாம் தவறாது எல்லாம்வல்ல ஈசனது கருணைக்குப் பாத்திரமாவோம்.



31. கருமசாட்சியாலுல் கைவல்யம் (முத்தி) வருமெனல்.

(31-7-1911).

பிராணிகளின் வாழ்க்கை நீர்க்குமிழிபோலும், புல்நுனி மீதுள்ள நீர்போலும், மின்மினிப் பூச்சியின் ஒளிபோலும், சஞ்சலத்தாற் கலங்குஞ் சித்தம்போலும், மாறிமாறி வருகின்ற (கண்) இமைபோலும், (மேகத்திற்றோன்றிய) மின்னல்போலும் நிலையற்றதா யிருத்தலைச் சிறிதேனுங் கருதா திருத்தலினுற்றான் நாம் மனிதப் பிறப்பினு லடையவேண்டிய பயனை யடையாது போகத்தையே பெரிதென் றெண்ணி, அதன் 'வசப்பட்டுப்' பரமாநந்தத்தை யடையாது பயனில்லா தொழிகின்றோம். மனிதப் பிறப்பினை யடைந்ததன் முக்கியப் பயன், நற்கருமங்களைச் செய்து மனம் வாக்கு காயமென்னுந் திரிகரணங்களையும் தீயவழியிற் செல்லாவாறடக்கி, தத்துவஞான வாயிலாக மாசுதீர்ந்த மாணிக்கம்போல உயிர் மாயாபாசத்தினின்றும் நீங்கி ஆநந்தவடிவமாக விளங்கும் நிலையினைப் பெறுவதாமென் றுணர்ந்து, அதற்கேற்ற சாதனங்களைப்பெற முயலாது உண்டுடுத்தியுல்லாசமா யுலாவுதலையே பெரும்பயனுக வெண்ணி, அவற்றிற்கேற்ற முயற்சி யொன்றையே செய்துவருபவர் தாமே தமக்குப் பகையாக விருந்து தம்மைத்தாமே வருத்துகின்ற சதிக்காரராவரென்பதற்கோர் ஐயப்பாடு மின்றும்.

"நீரிற் குமிழி யிளமை நிறைசெல்வம், நீரிற் சுருட்டு நெடுந்திரைகள்-நீரி, லெழுத்தாகும் யாக்கை" என்பதுபற்றிச் சற்றுங் கவனியாது உடம்போடு கூடி யிருத்தலை விரும்புகின்றோமே யன்றி அவ்வுடம்பினின்றும் பிரிந்துபோதலையொருபோதும் விரும்புகின்றோமில்லை. உடம்போடுகூடியிருக்கும்போது நமக்கு வாஸ்தவமாகச் சுகமுண்டாவென்று ஊகித்துப்பார்ப்போமாயின், ஒரு கணமேனு முடம்போடு கூடியிருத்தலை விரும்பவேமாட்டோம். நம்முடைய உடம்பு மலவடிவமா யிருக்கின்றதென்பது நான்கைந்துமுறை பேதியானபோது நன்கு விளங்கும். பேதியானபோது நம்முடம்பு முன்னிருந்த வளவிற் சுருங்கிப் போகின்றதல்லவா? சுருங்கிப் போவதற்குக் காரணம் உள்ளேயிருந்த மலம் வெளிப்பட்டுப் போயதன்றி வேறென்னும்? மல முள்ளேயிருந்தபோது பூரித்தும், அது வெளிப்பட்டபோது வாடியும் வருவதியல்பினை

யுடைய வுடம்பு மலவடிவமா மென்பதுபற்றிச் சந்தேகமு முண்டோ? மண்ணாலாய கடம் மண்வடிவமா யிருக்கின்றது. அதுபோல மலத்தாலாய உடம்பும் மலவடிவமா யிருக்கின்றது. மல வடிவமாகவுள்ள வுடம்போடு கூடியிருத்தலை விரும்பி அது பிரிந்து போதலைப்பற்றி வெறுப்பது பெருமடமையன்றி வேறென்னும்?

"தோல்இரத்த மெலும்பிறைச்சி சுக்லமேதை மச்சை யொன்றாய்த், தூலிகரித்த" உடம்போடு கூடியுள்ளபோது துன்பமே யுண்டாகின்றதன்றி யின்பமென்பது மிகச்சிறிது முண்டாகின்றதே யின்றாம். இன்பமுண்டாகின்ற தில்லையோ? இன்பமுண்டாகா விட்டால், இன்பமடைய மக்கள் பெருமுயற்சி செய்வார்களோ வெனின், அவ்வின்பம் முடிவில் பெருந் துன்பத்தைத் தருவதா யிருத்தலின், அவ்வின்பமுந் துன்பமேயாம். நமை யெடுக்கின்ற போது நாம் நன்றாகச் சொறிந்து கொள்ளுகின்றோம். சொறியும் போது சுகமா யிருப்பினும், சொறிந்த பிறகு யாதுண்டாகின்றது? எரிச்சலல்லவா? எரிச்சலால் நமக்குண்டாவது துன்பமே யாயிருத்தலை யூகித்துப் பார்ப்போமாயின், நமக்குண்டாகு மின்பம் துன்பத்திற்கே காரணமா யிருக்கின்றதென்பது செவ்விதின் விளங்கும். நமது உடம்பு இனியொரு கணம்வரை யிருக்குமென்னும் நிச்சயமற்றதா யிருத்தலின், நிலையற்ற வுடம்பால் எவ்வாறு சுகமுண்டாகும்?

மலத்தாலாயதாயும், நிலையற்றதாயும், தானுள்ள பரியந்தம் துன்பத்தையே தருவதாயுமுள்ள வுடம்போடு கூடியிருப்பதற்குக் காரணம் நம்முடைய கர்மமேயாம். நாம் கருமசாட்சியா யிருக்கும் நிலையினைச் சற்குரு மூர்த்தி வாயிலாகப் பெறுவோமாயின், உடம்போடு கூடாது நித்தியாநந்தமா யிருக்கும் நிலையினைத் தவறாது பெறுவோம். உடம்பு பலவழியானு முற்றுப்பார்க்கு மிடத்து வெறுப்பிற்கே விடயமாக விருத்தலின், அதனை நாம் உண்டி முதலியவற்றால் பேணுதல் (காப்பாற்றுதல்) செய்யாம லொழித்து விடுவோமெனின், அது கூடாது; இவ்வுடம் பொழிந்தவுடன் மற்றோருடம்பு வாராதிருக்குமாயின், அவ்வாறு செய்யலாம். இவ்வுடம்புபோனவுடன் கருமத்திற்கீடாக மற்றோருடம்பு வருவதாக விருத்தலின், எக்காலத்தும் எவ்விடத்தும் யாதோருடம்பும் வாரா நெறியினை யறிந்து, அந்நெறியி லொழுகுதலே உடம்பினை யொழிக்கும் வழியாகும். அந்நெறியி லொழுகுவதற்குச் சாதன

மாக வுடம்பினை யுண்டிமுதலியவற்றால் அத்தியாவசியகமாகப் பேணுதல் வேண்டும். இது திருவள்ளுவநாயனார் "அற்றா லள வறிந் துண்க வஃதுடம்பு, பெற்றா னெடிதுய்க்கு மாறு (முன் னுண்டது அற்றாற் பின்னுண்பதனை அறுமளவறிந்து அவ்வள விற்றாக வுண்க; இறப்பவும் பலவாய பிறயாக்கைகளிற் பிழைத் துப் பெறற்கரிய இம்மாநுட யாக்கையைப் பெற்றான் அதனை நெடுங் காலங்கொண்டு செலுத்துநெறி யதுவாகலான்)" என் றருளி யிருப்பதாலும் நன்கு புலப்படும்.

உயிர்கள் இம்மைப்பயனும் மறுமைப்பயனும் முத்தியுமடை தற்கு மனித வுடம்பன்றி வேறோருடம்பு சாதனமாக விராமை யின், மனித வுடம்பைப் பெற்றுள்ள நாம் இவ்வுடம்பினாற் கொள் ளும் பயனைக்கொள்ளாது பராமுகமாக விருந்து விடுவோமாயின், நமக்கும் விலங்கு முதலியவற்றிற்கும் வேற்றுமை யென்னும்? கரும்பினை யாலையிலிட்டுச் சிதைத்துச் சாற்றினை வெல்லத்திற்கா கக் கொண்டவர் அதனது சக்கை யடுப்பிலிடப்பட் டெரிவது பற்றி வருந்தாமைபோல, உடம்பினாற் பிறப்பின் பயனை யடைந்த வரும் மரணத்திற்காக வருந்தி யஞ்சுவதே யின்றாம். மரணத்திற் கஞ்சுவோர் பிறப்பின் பயனை யடையாது உடம்பினையே யுயிராகப் பாவித்து வாழ்நாளை வீணாளாக்கி யல்லலுக் கடிமையாகி யாறாத் துன்பக் கடலுள் மூழ்கித் துறையறியாது திகைப்புறுந் தன்மை யினை யுடையரா யிருப்பர். மரணம் வருவது நிச்சயம்; அதனை யொழிப்பது ஒருவாற்றானுமுடியாது; வாழ்வெல்லாம் மாயமாய்ப் போம்; உலக நோக்கம் மாறாக் கவலைக்கே யிடமாம்; நாம் உடம் பன்று; சாதிகுல முதலியன வெல்லாம் உடம்பின் கருமமாம்; அவை நாமுமன்று நம்முடையனவுமன்று; அறிவே வடிவாயுள்ள நமக்கு ஒன்றோடும் பற்றின்று; ஒன்றும் நம்மைப் பற்றாது; நாம் பொருள்களைப் பற்றி யிருப்பதும் அவை நம்மைப்பற்றி யிருப்ப தும் உண்மையன்று; உண்மையாயின், அவை மறுபிறப்பிலும் தொடர்ந்து வரல் வேண்டும் என்று சிந்தித்துணர்ந்து, நாம் உட ம்பின்கண் நான் நானென்னும் அபிமானத்தை விடாது, அதனி டத்துச் சுகமாயிருக்க விரும்பினும், யமன் அங்ஙனஞ்செய்ய விடு வதில்லை யென்று விரைந்து சதாநந்த குருவின் சரணபங்கயத் தைத் தஞ்சமாக வடைந்து நெஞ்சுருகிப் போற்றி ஒருமொழி யின் (பிரணவத்தின்) உண்மையினை யறிந்து கருமசாட்சியாகக்

கங்குல் (இராப்) பகலற நின்றவர்களே பெட்டியிற் பாம்பெனப் பேய்மன மடங்கப் பெற்றுச் சகடக்கால்போல மாறிமாறிவரும் பிறப்பொழிந்து சீவன் முத்தராயிருப்பர். சகடக்கால்-வண்டிச் சக்கரம்.

அசையாதுள்ள காந்தக்கல்லின் சந்நிதானத்திலே (எதிரே) இரும்பு அசைதலாகிய வியாபாரத்தை யடைவதுபோல அசலமா யுள்ள நமது சந்நிதானத்திலே மனம் வாக்குக் காயங்கள் நினைத் தல், பேசல், நடத்தல் முதலிய வியாபாரங்களைச் செய்கின்றன; நாமொருபோது மியாதொரு வியாபாரமுமின்றி யசலமாக (அசை வின்றி) இருக்கின்றோம்; மயக்க வறிவினால் மனமுதலியவற்றின் வியாபாரங்களான நினைத்தல் முதலியன நம்முடைய வியாபாரங்க ளாகத் தோன்றுகின்றன; நாம் பரிபூரண சிதாநந்த வடிவாயிருத் தலால் நமக்கு அவற்றின் சம்பந்த மென்று மில்லையென் றப்பியா சஞ் செய்து வந்தால் கரும சாட்சியாயிருக்கும் நிலை ஐயந்திரி பின்றி விளங்கும்.



## 32. அறமே யெவர்க்கு மருந்துணையாமெனல்.

(7-8-1911.)

கரண வியாபாரமுடைய ஒவ்வொரு பிராணியும் சுகதுக்க மடைவதற்கேது அனுகூல பதார்த்தத்தின் சம்பந்த ஞானமும் பிரதிகூல பதார்த்தத்தின் சம்பந்த ஞானமுமா யிருத்தலின், அவ் வனுகூல பதார்த்தத்தின் சம்பந்தமும் பிரதிகூல பதார்த்தத்தின் சம்பந்தமு முண்டாதற்குக் காரண மத்தியாவசியகமாக விருத்தல் வேண்டுமென்பது பற்றிக் கூறவேண்டுவ தில்லையாம். நல்வினை யின் பயனுண்டாகும்போது அனுகூல பதார்த்தத்தின் சம்பந்த மும், தீவினையின் பயனுண்டாகும்போது பிரதிகூல பதார்த்தத் தின் சம்பந்தமு முண்டாகின்றன. அவற்றின் ஞானத்தால் சுக துக்கங்க ளுண்டாகின்றன. இச்சுகதுக்கங்களை யனுப்பவிக்கும் பிராணிகள் அவற்றால் மொத்துண்டு வதைகின்றன. அப்பிராணி கோடிகளுள் ஒரு பகுதியா யிருக்கும் நாமும் ஒவ்வொரு நாளுந் தவறாது, அவற்றால் வதையுண்டு வருகின்றோம். நாம் அவற்றால் வதை யுண்ணுதிருக்கும் நிலையினையடைவது பற்றி யொருபோதுஞ் சிந்திப்பதே யின்றாம்.

மனித சரீரங்கிடைப்பதே யருமை; மனித சரீரங் கிடைத்தாலும், முக்கியமான அவயவங்கள் குறைவில்லாதிருப்பதருமை; அவை குறைவில்லாதிருந்தாலும் கல்விச் செல்வத்தைப் பெறுவதருமை; கல்விச் செல்வத்தைப் பெற்றாலுந் தத்துவாதத்துவ விவேகம் (இது மெய்ப்பொருள் இது பொய்ப் பொருளென்று நல்லோரையடுத்து விசாரஞ்) செய்வது மிகவுமருமையாம். தத்துவாதத்துவ விசாரஞ்செய்து, அது வாயிலாகத் தத்துவஞானத்தையையந்திரிபற வடைந்து தன்மயமாக நிற்றலே சுகதுக்கங்களால் மொத்துண்டு வதையா திருப்பதற் கேதுவாம். கிடைப்பதற்கரிய மனிதசரீரத்தைப் பெற்றுள்ள நாம் இன்பதுன்பங்களால் வதையுண்ணு திருக்குநிலையினை யடைவதற்குரிய சாதனத்தை நடுநிலை நின்று ஞானநந்தமயமாய் விளங்கிய நல்லோரைப் பூரண விசுவாசத்தோ டடைந்து பெறாது நாட்கழிவையே நலமாகக்கருதிப் பொருள் தேடுவதிலேயே கண்ணுங்கருத்துமா யிருக்கின்றோம். பொருளைத் தேடுவது போகத்தையே யனுவிப்பதற் கன்றாம்; பின்னென்னெனின், ஏழைக்களுக்கில்லையென்னாது, அவர்வேண்டுவனவற்றை யுவப்போடு கொடுத்தற்கும், தமது சுற்றத்தார் முதலியோர் வறுமையால் வருத்தமுற்றவிடத்து அவர்க்குக் கூடுமான வளவு உபகாரஞ் செய்தற்கும், தேவாலய முதலியவற்றைச் செம்மை செய்தற்கும், சற்குரு மூர்த்தியின் சரணபங்கயத்திற் சுர்ப்பணஞ் செய்தற்கும், பிறவற்றிற்குமாம். ஒருவனுக்குப் பெரும் பொருள் சித்திப்பதற்கேது, அவன் முற்பிறப்பிற் செய்த நல்வினையேயாம். நல்வினையாற் கிடைத்த பொருளை நல்வினையின் பொருட்டுபயோகப்படுத்தாது தீவினையின் பொருட் டுபயோகப்படுத்துவது நல்லோரது செய்கை யன்றாம்.

"தருமம் பொருள்காமம் வீடெனு நான்கும், உருவத்தாலாய பயன்" என் றவ்வைப்பிராட்டியாரும், "எடுத்த தேகமிறக்குமு னேயெனைக், கொடுத்து நின்னையுங் கூடவுங் காண்பனோ" என்று தாயுமானப் பெருந்தகையாருந் திருவாய்மலர்ந்திருப்பதை யுற்று நோக்கு மிடத்து, மனிதப் பிறப்பின்கண் முக்கியமா யடையத் தக்கது முத்தியா மென்பது நன்கு விளங்கும். நியாயவழியாக வந்த பொருளால் அறத்தைத் தேடி, சாஸ்திர விரோதமின்றி யின்பத்தை யனுபவிக்கின்றவர்கட்கே முத்தியடையும் நெறி மிகு வெளிதிற் சித்தியாம். பொருளையே பொன்

காத்த பூதம்போலக் காத்து, தாமுமுண்ணாது பிறர்க்குங் கொடாதிருப்பவரும், தாமாத்திரமுண்டு பிறர்க்குக் கொடாதிருப்பவரும் எவ்வாறு நன்னிலை யடைதல் கூடும்? பொருளை எவ்வாறு போற்றிக் காத்தாலும் அது போகுங் காலத்துத் தவறாது நம்மை விட்டொழிந்துபோம்; நம்முடைய பிரயத்தனமொன்று மப்போது பயன் படுவதில்லையென்று விரைந்து தருமத்தைச்செய்து வந்தாற்றான் தீரத்துறத்த லென்னுஞ் சர்வசங்க பரித்தியாகம் சித்தத்தி லுண்டாம்; இச்சர்வசங்க பரித்தியாகமே அறங்கள் பலவற்றுள்ளும் சிறந்த வறமாம்; ஏனைய வறங்களெல்லாம் இவ்வறத்திற்குச் சாதனமாம்; இவ்வறத்தி னோக்கமின்றிச் செய்யும் அறமெல்லாம் போக வேதுவாய்ப் பிறவிக்கே காரணமாமாகலின், அவ்வாறு செய்யாது சர்வசங்க பரித்தியாகமென்னுஞ் சம்பத்துண்டாகுமாறு பயனோக்காது, அறத்தைச் செய்பவரே சித்தத்தின்கண் துறவுண்டாகப் பெற்றுச் சிந்தையுமொழியுஞ் செல்லா நிலைமைத்தாகிய சிதாநந்த நிலையைப் பெறுவரென்பதற்குச் சிறிதுமையமின்றாம். இது "தாங்குபற் றற்ற சகலத்தி யாகத்தின்,ஓங்கு தருமமே துந்தீபற,உள்ளது வீட்டிற்கஃ துந்தீபற" என் றவிரோத வுந்தியார் கூறுவதனாலும் செவ்விதின் விளங்கும்.

கனகாபுர மென்னு மொரு பட்டணத்தி லொருபெருஞ் செல்வவா னிருந்தான்; அவன் மன மிரங்கி யொருவர்க்கு மொரு காசு கொடுத்ததேயின்று; எப்போதும் பொருளைத் தேடுவதும் போகத்தை யனுபவிப்பதுமே அவனது முக்கியக் கடமையாம். அவன் ஏழைகள் முகம் பார்த்திரங்கி அவர்கட் கொன்றுங் கொடாமை காரணமாக, அவனை அப் பட்டணத்தா ரியாவரும் இவன் பரமலோபி யென்று கூறிப் பழிப்பாராயினர். அவனவ்வாறு வாழுங் காலத்து ஒரு பெரும்பஞ்ச முண்டாயிற்று; அதனால் அப்பட்டணத்து ஜனங்கள் மிகவும் வருத்த முற்று, அவனையடுத்து ஐயா! பிரபுவே! நாங்கள் உணவின்மையால் மிகவும் வருந்துகின்றோம்; எங்களை யிச்சமயங் காப்பாற்றினாற் றங்களுக்குப் பெரும் புண்ணிய முண்டாகுமென்று சொல்லித் துதித்தார்கள். அவன் அதற்காக வொரு சிறிதுமனமிரங்காது கடிந்துபேசி அவர்களைத் துரத்தி விட்டான். அவர்களியாவரும் அவனை நிந்தித்தும், தமது தலை விதியைப் பற்றி நொந்தும் போகும்போது, அவர்களெதிரே தற்செயலாக ஒரு மகாத்மா வந்தார். வந்த அம்மகாத்மா அவர்

களை நோக்கி நீங்களேன் இவ்வாறு வருத்த முற்றுப் போகின்றீர்க ளென்று கேட்டார். அதற்கவர்கள் நிகழ்ந்தன வற்றை விடா தவரிடத்திற் கூறித் தம்மைப் பாதுகாத்தருளல் வேண்டுமென்று பிரார்த்தித்தார்கள். அம்மகாத்மா அவர்கள் கூறியதைச் செவி சாய்த்துக்கேட்டு உங்கட்குப் பரமேசுவர னருளால் கூடிய சீக்கி ரத்தில் நன்மை யுண்டாமென்று கூறி அப்பிரபுவினிடத்துச் சென் றார். அவரைக் கண்டபோதே அந்தப்பிரபுவிற்கு இவர் தேவரோ மனிதரோ என்று சந்தேக முண்டாகப் பெற்று, அவரை வணங் கித் துதித்து, தாங்கள் யாது காரியமாக இவ்விடத்திற்கு வந்தீர்க ளென்று பணிவோடு கேட்டான். அதற்கவர் ஒருவரிடத்தும் யான் ஒன்றும் வேண்டுமென்று பெறுவதே யின்றென்றும், என் னிடத்திருப்பதைப் பிறர்க்குக் கொடுப்பதே யெனக்கு வழக்க மென்றும், இப்போதென்னிடத்தி லொரு கோவணம் அதிக மாக விருக்கின்றது, அதை யுன்னிடத்திற் கொடுக்க வந்தே னென்றுங் கூறினார். அதற்கப் பிரபு இக்கோவண மெனக்கேன்; வேண்டுமானால், பதினாயிரங்கோவணமுங் கிடைக்கும் என்று கூறினான். அதற்கவர் அப்பனே! இக்கோவணத்தை யுனக்கேன் கொடுக்கின்றே னென்றால், நீ யிறந்தபிறகு உபயோகப் படுத்திக் கொள்ளவேயா மென்றார். அப்பிரபு நானிறந்த பிறகு இக்கோவ ணத்தை யெவ்வாறு உபயோகித்தல் கூடும்; இஃதென்னுடன் வருவதன்றே என்றான். அம்மகாத்மா அவனைக் கருணையோடு நோக்கி அன்பனே! இறந்த பிறகு இக்கோவணமுங் கூட வருவ தின்றாயின், நீயேன் பெருலோபி யென்று பேரெடுக்க வேண்டும்; இம்மனித சரீரம் கிடைத்தது, அறத்தைச் செய்து மேனிலையை யடைதற் பொருட்டன்றோ? சாக்கிரத்திலே எனதெனதென்று கருதப்படும் பொருள் சொப்பனத்திலேயே உதவி செய்ய வருவ தில்லை யாயின், இறந்தபிறகா வரப்போகின்றது? "ஈதற்குச்செய்க பொருளை", "மிக்க வறமே விழுத்துணை யாவது." என்றற்றொ டக்கத்தன வாகச் சாஸ்திரங்கள் கூறுவதால், சாஸ்திர வசனங்க ளைச் சத்தியமாக நம்பி அறத்தைப் புரிந்து, ஆநந்தமயமாகக் கட வாயென்று கூறிச்செல்வநிலையாமை, உடம்பினிலையாமைமுதலிய வற்றை விஸ்தாரமாக வுபதேசித் தருளினார். அது கேட்ட அப் பிரபு பயன்படாது கழிந்த தனது வாழ்நாளுக்காக விரக்க முற்று அம்மகாத்மா கூறியவா றொழுகித் தத்துவஞான நிஷ்டனானான்.

அவ்வேழைகளும் அவனது உதவியால் வறுமை நீங்கி வாழ்வாராயினர். இக்கதையினால் நல்வினையின் பயனாகக் கிடைத்த செல்வத்தை நல்வினையின் பொருட்டே யுபயோகப் படுத்தல் வேண்டுமென்றும், லோபகுணத்தோடு கூடியிருத்தல் கூடாதென்றும், இல்லையென்னு தீதலே பிறவிப்பயனை யடைதற்குச் சாதனமாமென்றும் நன்கு விளங்கும்.



## 33. ஞானியின் பிதிர்க்கள் நலமடைவாரேனல்.

(14-8-1911).

அக்கினி, புழு, பிருதிவி, பருந்து, நரி, நாய் முதலியன எனதென தென்றுரிமைபாராட்டுந் தன்மையுடைய உடம்பினை நாம் யான் யானென்று மயக்கபுத்தியின் வசத்தினால் வியவகாரஞ் செய்து வருவதனாற்றான், கண்டதேகாட்சி கொண்டதே கோலமாக விருந்து பரலோக சாதனத்தை யொரு சிறிதுங் கருதாதிருக்கின்றோம். எவ்வளவு பிரியமாக வளர்த்தாலும் நமதுடம்பு குணமில்லாத நேசனைப்போன்று நமக்குக் கெடுதியையே விளைவிக்கின்றது. நாம் விரும்பியவாறெல்லா மொழுக வுடம்பிடங்கொடாது தலைவலி கால்வலி முதலியவற்றாற் றுன்பந்தருதலை யுய்த்துணர்வோமாயின், நாம் உடம்பின்கண் வாழ்தலைச் சிறிதேனும் விரும்பவே மாட்டோம். இம்மானிட சரீரம் கிடைத்ததுமுத்திப் பேற்றிற்கேயாம். நாமோ இச்சரீரங்கிடைத்ததனருமைபெருமைகளைக் கனவிலேயுங் கருதாது, பசிதீர வுண்பதையும் களைதீர வுறங்குவதையுமே பெரும்பயனாகக் கருதிப், பிறப்பிறப்பிற் கேதுவான காரியங்களையே மேலும் மேலுஞ் செய்து பழிபாவங்கட் கஞ்சாதிருக்கின்றோம். இவ்வாறிருத்தலாற்றான் கணக்கற்ற பிறப்பினையடைந்து கவலையையே முடிவிற் பெரும்பயனாக வடைந்து கண் கலக்க முறலானோம். ஒருபோதாவது இந்திரியங்களையும் மனத்தையும் சப்தாதி விஷயங்களிற் போகாவண்ண மடக்கி எல்லாமாயும் அல்லவாயு மிருக்கு மின்புருவ வீசனையுடைய அன்புடன் துதிப்போமாயின், நாம் இனிவரும் பிறப்பிலாவது நற்கதியைத் தவறாதடைவோம்.

பட்டினத்தடிகள் "மண்ணுந் தணலாற வானும் புகையாற, வெண்ணரிய தாயு மிளைப்பாறப் - பண்ணுமயன், கையாற வும்

மடியேன் காலாற வுங்கண்பாய், ஐயா திருவையாறு" என்று திருவாய்மலர்ந்தருளி யிருப்பதைச் சிறி துற்றுநோக்கிக் கவனிப்போமாயின், நாம் அளவிறந்த காலமாகப் பிறந்திறந்து கொளுத் தப்பட்டோ மென்ப தினிதுவிளங்கும். பிறந்து பிறந்து சாதலையே மேற்கொண்டு, உண்ணூட்டமின்றிப் போகத்தையே விரும்பிப் பொழுதுபோக்குவதற்கா இச்சரீரங்கிடைத்தது? பெரும்பான்மை யாக நோக்குமிடத்து நாம் "கல்லாமை கொலைதீமை களவாசை யின்சொற், சொல்லாமை நடுவின்மை சுடுகோப மிவையே, யல்லாமல்" வேறெதனைப் பெற்றிருக்கின்றோம். இவற்றை யொழிக் கும் வழியைச் சதாநந்த வடிவாய் விளங்குந் தக்கோர் கூறினும், அதைத் துரும்பென மதித் திகழ்ந்து, இளங்கன்றுபோற் றுள்ளிச்சென்று காமானுபவத்தையே யடையப்பெரிது முயன்று பேராசைப் பேயாற்பிடிக்கப்பட்டு உண்மையிற் றிருப்தியென்பதையே யடையாமற் றீனர் (ஏழை) களாகிப் பிறப்பிறப்பாகிய பெருங் கடலுள் மூழ்கி, அதன் கரைகண்டேறும் வழியறியாது கால (யம) னுக்கும் வேத (பிரம) னுக்கும் வசப்பட்டு வருகின்றோம்.

மனத்தின்கண் ணுள்ள ஆசை கோப மகந்தை முதலியவற்றை விசாரவாயிலாகவொழித்து அதனைத் தூய்மையுடையதாக்கி, கல்லாலின் கீழிருந்த கண்ணுதலே! நல்லா ருளத்திருக்கும் நாயகனே! வில்லாற் புரமெரித்த வேதியனே! அடியேனையாள வருண் மேனி சாத்திப் படிமீது வந்த பரமனே! பத்தரிடர் பேர்க்கும் பங்கயக்கண்ணனே! ஆனையிடர்தீர்த்த அரவிந்தப்பாதனே! என்றன்புடன் துதித்து, ஈசனையன்றி யிருப்பதொன்று மில்லையென்னுந் திடவறிவுடன், உடம்பின்கண் யானென்னும் புத்தி அற்பமாகவேனு மிராது, ஆநந்தவடிவ அருணடன மூர்த்தியைத் தியானஞ்செய்தாலன்றோ நாம் கங்குல் பகலற்ற நிலைபெற் றின்புருவமாயே யிருப்போம். அப்போதன்றோ காலனும் வேதனும் நம்மைக் காண நடுங்குவர்?

காலன் உடம்பினின்றும் உயிரைப் பிரிப்பவனும், வேதன் உடம்புடன் உயிரைக் கூட்டுபவனுமா யிருத்தலின், அவர்களது தொடர்பு மிகு பொல்லாததாம். உடம்புவருவதற் கேதுவாகிய இருவினைகளையும், அவற்றிற் கேதுவாகிய காமக்குரோதங்களையும், அவற்றிற் கேதுவாகிய அவிவேகத்தையும், அதற்கேதுவா

கிய அஞ்ஞானத்தையும் ஒழித்தாற்றான் காலனையும் வேதனையும் வெல்லுதல்கூடும். நாமோ காலனையும் வேதனையும் ஒழித்தற்குரிய முயற்சி செய்யாது பராமுகப்பட்டுப் பாவிமனத்தின் வழியே சென்றுபொன்னையும் புகழையும் கருதி யெண்ணுதவெண்ணமெல்லா மெண்ணி, இன்பத்திற்கே அங்காந்து (வாய்திறந்து) நிற்கின்றோம். நாம் இன்பவடிவமாகவேயிருக்கின்றோம்; காணப்படும்பொருள்கள் ஜடமாயிருத்தலின், அவற்றின்கண் இன்பமெவ்வாறிருத்தல்கூடும்? விளக்கிருக்கத் தீத்தேடுவாரைப்போலவும், தடாகக் கரையின்கணிருந்துந் தாகத்தால் தவிப்பவரைப்போலவும் இதுகாறும் நாமின்புருவமா யிருப்பதறியாது இன்புருவ மல்லாததை யின்புருவாகக் கருதி யேமாந்து போனோம். இனியாவது நாம் பராமுகமாகாம லின்புருவமா யிருக்கும் நமதுயதார்த்த நிலையினை யடைவோ மென்னும் புத்தியினைச் செவ்வையாகப் பெற்று, அதற்குரிய சாதனமாகிய ஞானயோகத்தை நல்லாசிரியர்பாற் பெற் றொழுகினோற்றான், ஞானாநந்த வடிவாய் விளங்கும் நிலையினைப் பெறுவோம்.

ஒரு குலத்திலே ஒருவன் "சாத்திர மோதுஞ் சதுர்களை விட்டுநீர், மாத்திரைப் போது மறித்துள்ளே நோக்குமின், மாத்திரைப் போது மறித்துள்ளே நோக்கினல், ஆர்த்த பிறவி யகலவிட் டோடுமே" என்று திருமந்திரங் கூறியவாறு வெளிநாட்டம் விட்டு, உள் நாட்டம் பெற்று நினைப்பு மறப்பற்ற நிலையென்னும் நடுநிலையைப் பெற்றுத் தன்மயமாகித் தத்துவஞானியாவானாயின், அவனது குலமெல்லாம் பரிசுத்தமுடையனவாம். தன்னுடைய முன்னோர் நற்கதியையடைய விரும்பியாவதுதான் தத்துவஞானியாக விரும்புதல்வேண்டும். தாய்தந்தை முதலிய தமது முன்னோர்க்கு உதவிசெய்யாத பிள்ளை பிதுர்த்துரோகியாவ னென்பதற்குத் தடையாது மின்றே? தாய்தந்தை முதலியோருக் குதவி செய்யாதபிள்ளை உலகிற்கென்ன வுபகாரஞ்செய்தல் கூடும்? தான் தத்துவஞானியாதலே தனது தாய்தந்தை முதலியோர் நற்கதி பெறுவதற்குத் தக்க சாதனமா யிருத்தலின், அதனை யத்தியாவசியகமாகச் சம்பாதித்தலே குணமுள்ள பிள்ளையி னிலக்கணமாம். தத்துவஞானம்: குருவினிடத் தன்புடனிருந் தின்புடனே உலகெனப் படுவதுயாது? உயிரெனப்படுவதுயாது? ஈசனெனப் படுவான் யாவன்? உலகிற்கும் உயிருக்குமுள்ளசம்பந்த மெத்தன்

மையது? ஈசனுக்கு உலகோடும் உயிரோடுமுள்ள சம்பந்த மெத் தன்மையது? யானேன் துக்கியாயிருத்தல் வேண்டும்? யாது செய்தால் யான் மாறாத சுகமுடையனாவேன் என்று விசாரஞ் செய்பவனுக் கெளிதி னுதயமாம். இது மெய் (உடம்பு) வருந்தா நெறியாயிருத்தலின், இதனைச் செய்வது மற்றவற்றைச் செய்வதி னும் மிக எளிதாம். இவ்வள வெளிதாயுள்ளகாரியத்தைச்செய்து தத்துவஞானமடைந்து, அதுவாயிலாகத் தமது பிதுர்க்களை நற்கதிபெறச் செய்யாதிருப்பது நியாயமான தன்றாம். சுசிவர்ணன் தத்துவஞானத்தை யடைந்ததனா லன்றோ அவனது முன்னோர் கள் நற்கதியடைந்தனர்.

நரசிங்க வடிவங்கொண்டு, இரணியனைக்கொன்றபரந்தாமன், அவனது புத்திரனான பிரகலாதாழ்வார்செய்த துதிக்கிரங்கிச் சாந் தமாயபோது, அவர் சுவாமியைநோக்கிக் கார்நிறமுகிலே! நின்னை நிந்தையேபுரிந்த என்தாதை, பாவமெல்லா மொழிய நீயருள் செய்யவேண்டும் என்று பிரார்த்தித்ததற்குப் பகவான் உனது மூவேழு குலத்தாரும் நீ ஞானவானானதுபற்றிப் பரிசுத்தத்தை யடைந்தனர்; உனதுதந்தை பரிசுத்தனாவது பற்றிச் சொல்லவும் வேண்டுமோ என்று கூறினார் என்னுஞ் சரித்திரத்தாலும், ஒரு வன் மனிதவுடம் பெடுத்ததன் பயனாகத் தத்துவஞானத்தை யடைந்து விதேகமாயிருக்கும் நிலையினைப் பெற்றால் அவ னது தாய்தந்தை முதலியோரும் நற்கதியடைவரென்பது நன்கு விளங்கும். தத்துவஞானத்தை யடைதல் தனக்கு முத்தியையும் தனது தாய்தந்தை முதலியோருக்கு நற்கதியையும் அளிப்பதாக விருத்தலின், அதனை யெவ்வாற்றாலேனு மடைய முயலுதலே மனிதனது முக்கியக் கடமையாம்.



## 34. பெறும்பயனுறுவார் புகழ்விரும்பா ரேனல்.

(21-8-1911)

கரண வியாபாரத்தைச் செவ்வையாக வுடைய ஒவ்வொரு வரும் புகழை விரும்புவதும் இகழை விரும்பாதிருப்பதும் வெ ளிப்படையான விஷயமாம். புகழும் இகழும் இராப்பகல் போன்று மாறி மாறிவரு மியல்புடையனவா மென்பது சிறி தூன்றிப் பார்த்தால் நன்கு விளங்கும். புகழேயுடைய புருஷனும் இகழே

யுடைய புருஷனும் உலகந்தோன்றிய நாள்முதலிதுகாறும் இல்லையென் றுறுதியாகச் சொல்லலாம். அவ்வா றில்லாதிருப்பது எக்காலத்துஞ் சம்பவிக்கு மென்றுஞ் சொல்லலாம். தரும புத்திரர் துரோணாசாரியரைக் குருவென்றுங் கருதாது கொல்லும்பொருட்டுப் பொய் சொன்னானென்றும், அரிச்சந்திரன் விசுவாமித்திருக்குனமென்று கூறித் தாரைவார்த்துத் தத்தஞ் செய்த நாட்டை மீண்டும் பெற்று எனதென்றாண்டு பொய்சொன்னானென்றும், சிலர் கூறுவதை நோக்குமிடத்து இகழுதலில்லாதவ ரொருவருமிலர்; பகலுக்குப் பின் இரவும் இரவுக்குப்பின் பகலும் வருவது போன்று புகழிற்குப் பின் இகழும் இகழிற்குப் பின் புகழும் வருமென்பது ஒவ்வொருவர்க்கு மினிதுபுலனாம். நல்வினையின் பயன் சித்திக்கும்போது புகழும் தீவினையின் பயன் சித்திக்கும்போது இகழு முண்டாவனவா யிருத்தலின், இவற்றின்கண் மனம் வையாது மனச் சான்றுக்கு மாறின்றி யொழுகுதலே முக்கியமான கடமையாம். மேற்கொண்ட காரியஞ் சித்திபெறுத போது "பாழுந் தெய்வத்திற்குக் கண்ணில்லையே; அதன் கோபிலிடியாதா?" என்று சாதாரண ஜனங்கள் பேசுவதைக் கவனிக்கு மிடத்துத் தெய்வத்திற்கும் இகழ்வென்பது விட்டபாடில்லையென்பது செவ்விதாகத் தோன்றும். தெய்வத்திற்கே இகழ்ச்சியுளதாயின், சிற்றறிவும், சின்னாள் வாழ்வும், சிற்றோட்டம்போன்று வரும் நேர்யும், தீராக் கவலையுமுடைய நமக்கு இகழ்ச்சியில்லாமற் போவ தெங்ஙனமாம்? கேவலஞ் சத்துவகுணமுடையவராயிருந்த இராம பத்திரரும் சீதா பிராட்டியைத் தசக்கிரீவனெடுத்துச் சென்ற விடயமாக வண்ணானொருவனால் இகழப்பட்டாரென்பதை நோக்குமிடத்து, புகழ்பெற்ற வொவ்வொருவரும் யாதேனுமோ ரிகழ்பெற்றே யிருப்பாரென்பது விளங்குகின்ற தல்லவா? புகழை விரும்பா திருப்பவருக்குப் பிறரிகழ்வதுபற்றி நோக்கமில்லாதிருப்பது பிரசித்தமா யிருத்தலின், நாம் புகழை விரும்பா திருப்போ மாயின், நமக்கிகழுண்டாகாது. புகழ் மாத்திரம்வேண்டும், இகழ்வேண்டா மென்பது பகல் மாத்திரம் வேண்டும், இரா வேண்டா மென்பது போலவாம்.

புகழ் இகழ் என்பன உடம்பிற்கா? உயிர்க்கா? என்று தனித்தனி விசாரித்துப் பார்க்குமிடத்து, அவை உடம்பிற்கு முரியனவன்றாம், உயிர்க்கு முரியனவன்றாம். உடலுக்கெனின், உயிர் நீங்

கிய வுடலைத் தனியாகப் புகழ்வாரும் இகழ்வாரு மொருவருமில ராதலின், அங்ஙனங்கூறுத லமையாது. உயிர்க்கெனின், நாமரூபங் களை முன்னிடாது உயிரைப் புகழ்வாரும் இகழ்வாரு மொருவரு மிலராதலின், அவ்வாறு கூறுதலும் பொருந்தாது. புகழுதலும் இகழுதலு மேற்பது உடம்போடு கூடிய உயிராயிருத்தலின், உடம்போடு கூடிய வுயிரே புகழ்வரும்போது சுகத்தையும், இகழ் வரும்போது துக்கத்தையு மடைந்து அவற்றால் வதையுண்கின் றது. தேகத்தில் யானென்னு மபிமானமுடைய பரியந்தம் புகழ் தல் இகழ்தல்களால் வருஞ் சுகதுக்கம் நம்மைவிட் டகல்வதே யில்லையாம். சுகதுக்கங்களால் மொத்துண்ணுஞ் சித்தம் உபசாந்தி யுற்றுப் பூரணபாவத்தை யடைவதே யின்றும். பௌர்ணமியன்று சந்திரன் தனது கலைகளால் பூரணபாவத்தை யடைந்திருப்பது போல மனதும் தனது சத்துவ குணத்தால் பூரண பாவத்தை யடைந்தாற்றான் தேகபாவமுற்றும் நீங்கும். தேகபாவ முற்றும் நீங்கினவர்தாம் புகழ்தல் இகழ்தல்களால் வரும் சுகதுக்கங்கட் கடிமையாகாம லவற்றிற்கு ஆண்டவரா யிருப்பர்.

புகழை விரும்பி, அதற்குரிய காரியங்களைச் செய்பவர் யாவ ராயிருப்பினும் அவர் அஞ்ஞானியரே யாவர்? யாருக்குப் புகழ்? தேகபாவ முடையவருக் கன்றோ! தேகபாவ முடைமை அஞ் ஞானமுடைமைக் கறிகுறியாக விருத்தலின், புகழை விரும்பி அதற்காக அங்காந்தலையும் புல்லறிவாளரை விட்டகலுதலே புத்தி மான்களது முக்கியக் கடமையாம். புகழை விரும்பாது நல்லனவற் றைச்செய்து இகழ்தற்குரிய காரியங்களை மறந்துஞ் செய்யாதிரு ப்பவரைத் தஞ்சமாக வடைந்தாற்றான் சச்சிதாநந்தக் கடலில் மூழ்கி உலகையும் உடலையும் துச்சமெனக் காணுந் துணிபுண் டாம். யான் சைவசமய ஸ்தாபனாசாரி, யான் சைவசமயக் கான்ன கோடரி, யான் தருக்கவிலக்கணக்கடல், யான் சட்சாத்திர பண் டிதன், யான் சிவராஜயோகி, யான் ஹடயோக அப்பியாசி, யான் ராமபத்திரர் நல்லடிதாசன், யான் நிர் விகற்ப சமாதியில் நிலைத்த வன், யான் ஊமையெழுத்தி னுளவறிந்தவன், யான்-கீழ்ஆறுதார நிலையும் மேலாறுதார நிலையும் ஐயந்திரிபற வறிந்தவன் என்று காரணமின்றி யிடம்பமாகப் பேசித் தம்மைப் பிறர்மதித்துப் பேச விரும்புகின்றவர்களைத் தஞ்சமாக வடைதலொருபோதுங்கூடாது. புகழையே விரும்பி யுள்ளவரைத் தஞ்சமாக வடைந்தவர்க்கு

"எருமைவாலைப்பிடித்து ஏரியிலிறங்காதே" என்னும் பழமொழியினை நம்பாது எருமைவாலைப் பிடித்து ஏரியிலிறங்கியவனது கதியே சித்திக்கும்.

புகழை விரும்பித் தம்மைப் புகழ் மூலமாகப் பிறர்க்கறிவிப்பதொருபோதுங்கூடாது. மனச்சான்றுக்கு மாறின்றி நல்லனவற்றைச் செய்பவருக்குப் புகழ் வாராதிருப்பதேயில்லை. புகழ் வேண்டுமென்று விரும்பும்போது தான் இகழும் "நானும் அப்புகழின்பின்னேவர நிற்கின்றேன்" என்று கூறுகின்றது. புகழை விரும்பாதவன் உலகத்துள் யாதொன்றனையும் பெரிதும் விரும்பானாதலின், அதுவே சர்வ சங்க பரித்தியாகத்திற்கு மேதுவாம். சர்வ சங்க பரித்தியாகத்திற் கேதுவா யுள்ளனவற்றுள், புகழை விரும்பாமை தலைமையாக நிற்றலின், இதனை யத்தியாவசியகமாகச் சம்பாதித்தல் வேண்டும்.

புகழும் இகழும் வாராதிருப்பனவன்று; அவை கருமசாட்சியா யிருக்கும் நமக் குண்மையாக நோக்கு மிடத்தெப்போதுமில்லை; ஆகாசம் போன்று சூக்குமமாய், வியாபகமாய், அசங்கமா (ஒட்டாததா) யுள்ள நம்மிடத் தவை யெவ்வாறு சம்பவித்தல் கூடும்? தேகாகாரமாகி யானெனதென்னுஞ் செருக்குண்டாகும் போதுதான் அவை நம்மிடத்து வருகின்றனவென் றுள்ளவாறுணர்ந்து, கரணங்களெல்லாங் கடந்து நின்ற கருணாகரக்கடவுளது கருணையால் மனத்தைச் சிவாகாரமாக்கிச் சின்மயமான போதுதான் சித்தம் உலகநோக்கால் புகழை விரும்பாதொழியும். சித்தத்தைச் சிவாகாரமாக்க முயலாதுள்ள பரியந்தம் புகழையடைய விரும்பும்விருப்ப மொழிவதே யின்றாகலின், எவ்வாற்றாலேனு முயன்று சித்தஞ்சிதைவுற்று விஷயத்தின்கண்ணோடாவண்ணம் அதைத் தாரசின்முள் போன்று செப்பமாக அறிவானந்த வடிவ ஆன்மாவை நோக்கி நிற்கச் செய்தலே யறிவுடையாரது கடனாம்.

உலக நிலை, உயிர் நிலை, பரநிலை யென்னு மூன்றையு முள்ளவாறுணர்ந்து, உலகாகாரமாகாது, உணர்வாகாரமாய்ப் பிறழாது நின்ற மாணிக்கவாசக சுவாமிகள் திருவாசகத்தினுபிருண்ணிப் பத்தில் " வேண்டேன்புகழ் வேண்டேன் செல்வம் வேண்டேன் மண்ணும் விண்ணும், வேண்டேன் பிறப் பிறப்புச்சிவம் வேண்

டார்தமை நாளும், நீண்டேன்" என்று திருவாய்மலர்ந்தருளி யிருப்பதை நோக்குமிடத்துப் புகழை விரும்புவதால் பொல்லாங் கெல்லா முண்டாமென்ப தினிது விளங்கும். புகழை விரும்புதல் மிகப்பொல்லாங்கா மென்பது மற்றியன்று, அப்பெரியார் 'வேண் டேன் புகழ்' என்று புகழ் விரும்பாமையை முதற்கண் கூறினர். புகழை விரும்புதல் இகழிற் கேதுவா யிருத்தலின், அதை விட்டுத் தான் இன்ன நிலைமையுடையானென் றொருவரு மறியா வண்ணஞ் சாதனஞ் செய்பவனுக்கே அச்சுதவமல வித்தகனரு ளால் அறிவாநந்த வடிவாய் நிற்கும் நிலை தடையின்றி யுண்டாம். புகழ் நோக்கிச்செய்யும் புண்ணிய கருமங்கள் மறுமைக்குதவி யாவதில்லை யென்பது நூற்றுணிபா யிருத்தலின், புகழை விரும் பாது செய்வனவற்றைத் திருந்தச் செய்தால் பரமேசுவரனது கருணை தவறாதுண்டாம்.



## 35. மனத்தைத் திருப்பும் வழியினைக் கிளத்தல்.

(28-8-1911).

பிறவிக்குப்பயந்து சன்மார்க்கத்தி லொழுக முயலுகின்றவர் களும் ஒவ்வொரு சமயத்தில் நினைப்பதற்குஞ் சொல்லுவதற்குந் தகுதியுடையதாகாத செயலைப் புரிந் தல்லலுறுவதை நாமறிகின் றோம். அவர்களவ்வாறு செய் தல்ல லுறுவதற்குக் காரணம் யாதென்று விசாரித்தறித லத்தியாவசியகமாம். எனக்கிக் காரி யத்தைச் செய்ய வேண்டுமென் றொருசிறிதும் விருப்பமில்லா திருந்தும், எவ்வாறாகவோ அக்காரியத்தைச் செய்து முடித் தவ மானத்திற் குள்ளானேன், அதை நோக்குமிடத் தெனக்கே வியப்பா இருக்கின்றதென்று விவேகிகள் கூறுவதை நாம் பல முறை கேட்டிருக்கின்றோம்; நாமும் தக்கார் சொல்வதையுந்தடுத் து வெறிகொண்டவன் போன்று தகாத காரியத்தைச் செய்து முடிக்கின்றோம்; அதுபற்றிப் பிறர் பழிக்கும்போது பெருந் துக் கத்தை யடைந்து கலக்க முறுகின்றோம். இவ்வா றொழுகுவதற் குக் காரணம் மனத்தினை நமது வசமாகச் செய்யாது, அதன் வசமாக நாமொழுகுதலே யாம்.

ஈசுவரத் தியானம், மந்திர ஜபம் முதலியவற்றுள் ஏதாவ தொன்றனைச் செய்ய விரும்பி ஏகாந்தமான விடத்திற் சென்

றிருந் தியற்றுகின்றபோது நமது மன மொருமுகப்படாது பலதலைப்பட்டோடுதல் நன்கு விளங்கும். மனம் நமது வசமாக விருந்தால் ஈசுவரத்தியான முதலியன செவ்விதாக முற்றுப் பெறும்; அதன் வசமாக நாமிருந்தால் அவை முற்றுப்பெறாதுபோம். சுவாமிகளென்றும், ஆசாரியர்களென்றும், யோகிகளென்றும், சுத்த சைவரென்றும், பரம வேதாந்தியென்றும், ஸ்ரீவைஷ்ணவ ரென்றும் பெயர் வைத்திருப்பவர்கள் தியானஞ் செய்கின்றோம், ஜபம் செய்கின்றோம், பூசைசெய்கின்றோமென் றுலக விஷயங் களையே சிந்தித்து வருதலை அவர்களது விஷய வியாபாரமே யறி விக்குங் குறியாம். மனத்தைத் தமது வசமாகப் பெற்றவரது குறி உலகநாட்டங் குறைந்து, உணர்வு நாட்ட மிக்கிருத்தலேயாம். நமது மனம் நமக்கு வசமாக வரவில்லை யென்பதற்குக் குறி நாம் பரமேசுரனைத் தியானிக்க வேண்டுமென்று கருதியகாலத்தில் அது நமது வசமாக வாராது நம்மைத் தன் வசமாக விழுத்துச்சென் றல்லலுறச் செய்தலேயாம். இதனைச் சிறிதுநேரந் தியானத்தில் மனத்தை நிறுத்திப் பார்த்தாற் செவ்விதிற் றோன்றும்.

தெய்வப் புலமைத் திருவள்ளுவ நாயனார் ஒருநாள் ஏலேல சிங்க செட்டியாரென்னு மொரு வியாபாரியைக் காணவேண்டி, அவரது வீட்டிற்குச் சென்று, அங்குள்ளாரை நோக்கி "செட்டி யா ரிருக்கின்றாரோ?" என்று கேட்டார். அதற்கங்கிருப்பவர்கள் "இப்போது செட்டியார் சிவபூசையி லிருக்கின்றார்" என்று கூறி னார்கள். அதற்கு நாயனார் "செட்டியார் இப்போது சிவபூஜையி லா விருக்கின்றார்; இல்லை இல்லை குப்பத்திலன்றோ இருக்கின்றார்; உங்களைக்காண ஒருவன் வந்திருக்கின்றானென் றவருக் கறிவியுங் கள்" என்று கூறினார். அவர்கள் சென்று நாயனார் கூறியவாறே ஏலேலசிங்க செட்டியாருக் குரைக்க, அவர் சிவபூஜை யென்னும் பேரால் குப்பத்தில் செம்படவர்கட்கு வட்டிக்குப் பணம் கொடுத்த விஷயத்தைப்பற்றி நெடுகச் சிந்தித் திருத்தலைவிட் டெழுந் தோடி வந்து நாயனார் திருவடியிற் றீர்க்க தண்டமாக விழுந்து வணங்கி யெழுந்து தோத்திரஞ் செய்து, அவரிடத்துத் தத்து வோபதேசம்பெற்று நன்னெறிகண்டு ஞானவானயினாரென்னுங் கதையை யுற்று நோக்குமிடத்துச் சற்குருவினது நற்கருணை பெற்றாலன்றி மற்றெதனாலும் மனத்தை முற்றும் வசமாக்கும் வழி யுண்டாகா தென்பது தெற்றென விளங்கும். குருமுகமாக

மனத்தைத் தம் வசமாக்கக் கற்பதே கல்வியின் சிறந்த பயனும்; மனத்தைத் தம்வச மாக்குதற்குரிய கல்வியைக் கல்லாது, அது பராமுகப்பட் டோடுதற்குரிய கல்வியைப் பயிலுதல் துக்கத்திற்கே சாதனமாம்.

உடம்பென்னும் பட்டணத்திலுள்ள உயிரென்னு மரசனுக்கு மனமே மந்திரியாம். மனமென்னும் மந்திரி காமம், வெகுளி, மயக்கமென்னுங் குணங்களை யுடையவனா யிருக்கின்ற பரியந்தம் உயிரென்னு மரசன் பிறப்பிறப்பாம் பெருங்கடலில் விழுந்திருப்பதினின்றுங் கரையேற வழிகாணாது கலக்கமுறுவன்; அம்மந்திரி காமமுதலிய கொடிய குணங்களில்லாது, உபசாந்த முதலிய குணங்களை யுடையவனாயபோதுதான் அவ்வுயிரென்னு மரசன் உணர்வென்னும் வங்கமேறித் தற்போத நீக்கமென்னுந் துறை கண்டிறங்கி நித்திய நிரதிசயவின்ப முத்தி நகரிற்சென்று, அவிச்சை, அவிவேக முதலிய பகை மன்னரில்லா தரசாள்வன்.

பிறந்திறந் தவலமுறுதற்கும் அவ் வவலத்தினின்று நீங்கிப் பரமபத மடைதற்கும் மனமே காரணமாயிருத்தலின், மனத்தை மந்திரியாகவுடைய புருஷன் அதன் வசமாகத் தான் செல்லாது தன் வசமாக அது செல்ல எவ்வாற்றாலேனு முயலவேண்டும். தன்வசமாக மனமென்னு மந்திரியையுடைய உயிரென்னு மரசனே முத்திநகர்க் கரசனாவா னென்பது "முன்ன நாஞ்சொன்ன தேசமோர் முடிவிலா முத்தி, மன்ன னென்றது மாசிலா மணியென வயங்குந், தன்னில் வேறிலா வாத்தும தத்துவந் தானே, யன்ன வேந்தனு லமைத்தமந் திரிமன மாகும்" என்று ஞானவாசிட்டங் கூறுவதனாலு மினிது விளங்கும். மனத்தினை ஆத்தும தத்துவ அநாத்தும தத்துவ விசாரத்தால் அடக்கினாற்றான் அது நம்வசமாக நிற்கும் நிலைமையினைப் பெறும்; அவ்விசாரத்தால் மனத்தையடக்க முயலாதிருப்பவர் தக்கவற்றைச்செய்து இன்புறுதலும், தகாதவற்றைச் செய்து துன்புறுதலுமாகிய பயனையடைந்து, அவ்வின்ப துன்பங்களால் மொத்துண் டல்லற்படுதலினின்றொருபோதும் நீங்குவதில்லையாம்.

இந்திரிய வாயிலாக விஷயங்களிற் சென்று வீழ்ந் தவற்றின் மயமா யழுந்திக் கிடக்கும் மனம் நமது வசமாக வருவதெளிதாமோ? என்ன செய்யச் சொன்னாலுஞ் செய்கின்றேன்; மனத்தை யென்வசமாகச் செய்யும் வேலை யென்னாற் செய்யத்தக்க தன்றாம்

என்று கருதாது சிறிது சிறிதாக மனத்தைத் தத்துவ விசார வாயிலாக அடக்கிவந்தா லது தானேயடங்கி நம் வசமாய்ப்போம். மனத்தின் வழிச் சென்றமைபற்றி நாம் ஓயாக் கவலைக்குறவாயி னோ மென் றுள்ளவா றறிந்தவர்கள் மனத்தைத் தம் வசப்படுத்த முயலுங்கால் மனத்தை நான்குபாகமாகச் செய்து இரண்டு பாகத் தைப் பொருளைத்தேடிப் போகத்தை யனுபவித்தற் பொருட்டும், ஒரு பாகத்தைத் தக்காரிடத்தி லறிவுநூ லாராய்ச்சி செய்தற் பொருட்டும், மற்றொரு பாகத்தைக் குருபரனுக்குத் தொண்டுபுரி தற் பொருட்டும் உபயோகித்தல் வேண்டும். இவ்வாறாக மனத்தை யுபயோகப் படுத்துகின்றவர்க்குத் தத்துவா தத்துவ விசாரஞ் சிறிது உதயமாம். தத்துவா தத்துவ விசாரஞ் சிறிது உதயமாகப் பெற்றவர்கள் தமது மனத்தை நான்குபாகமாக்கி ஒரு பாகத்தைப் பொருளைத்தேடிப் போகத்தை யனுபவித்தற் பொருட்டும், இர ண்டு பாகத்தைச் சற்குரு மூர்த்தியின்றாளைப் போற்றுதற் பொரு ட்டும், மற்றொரு பாகத்தை யறிவு நூலாராய்ச்சியிற் றேர்ந்தவற் றை மனனஞ் செய்தற்பொருட்டு முபயோகித்தல் வேண்டும். அவ் வாறு செய்வதால் தத்துவா தத்துவ விசார நிரம்பப்பெற்றுத் தத்துவஞான முதயமாம். தத்துவஞான முதயமாகப் பெற்றவர் தமது மனத்தை நான்கு பாகமாகச் செய்து முதற்பாகத்தை அறி வுநூ லாராய்ச்சியிற் றேர்ந்தவற்றை மனனஞ் செய்தற்பொருட் டும், இரண்டாவது பாகத்தைச் சப்தமுதலிய விஷயங்களில் வை ராக்கியமா யிருத்தற் பொருட்டும், மூன்றாவது பாகத்தைச் சொ ரூபா நுபவம் ஐயந்திரிபின்றி யுண்டாகச் சமாதி செய்தற்பொருட் டும், நான்காவது பாகத்தைத் தேசிக மூர்த்தியின் றிருவடிப் பூசை செய்தற பொருட்டு முபயோகித்தல் வேண்டும். இவ்வாறு தவறாது செய்பவர்தாம் ஜீவன் முத்த புருஷராவார். அவர் தாம மனத்தைத் தம்வசமாக வுடையவர். அவர் செய்வன வெல்லாம் வைதிக காரியமாம்; பேசுவன வெல்லாம் வேத வாக்கியங்களாம்; அவருள்ள விடமே சிதம்பரமாம்; ஆண்டுள்ள தீர்த்தமே சிவகங் கையாம். "நல்லவ னேகே ளுலகுப காரம் ஞானிகள் வியவகாரம்" என்றறிவு நூல் கூறியபடி அவரது வியவகாரம் உலகத்தா ருய்வ தற்குரிய காரியமா மாதலின், அவரொருபோதுங் கழிந்ததற் கிரங்கிக் கைக்குவாராதது பற்றி விரும்பிக் கலங்குவ தில்லையாம். நாமும் அந்நிலையைப் பெற்றால் பரமாநந்த வடிவமாய் விளங்கிப் பதைப்பற் றிருப்போம்.



## 36. பாவமொழிக்கும் பான்மையைக் கூறல்.

(4-9-1911).

"பாவஞ்செய் யாதிரு மனமே நாளைக், கோபஞ்செய் தே யமன் கொண்டோடிப் போவான், பாவஞ்செய் யாதிரு மனமே" என்று கடுவெளிச் சித்தர் திருவாய்மலர்ந்தருளி யிருத்தலை யுய்த்து நோக்குமிடத்து மனமான தென்றும் பாவகாரியங்களைப் பற்றிச் சிந்தித்தலி லேயே முயற்சியுடையதா யிருக்கின்றதென் பது நன்கு விளங்கும். நம்முடைய மனம் நமக்கு வசமாக நில் லாது தன்னுடைய வசமாக நம்மை யிழுத்துச் செல்லுதலே அது பாவகாரியங்களைச் சிந்தித்தலில் முயற்சியுடையதா யிருக்கின்ற தென்பதற் கறிகுறியாம். மனமானது பாவகாரியங்களைச் சிந்தித் தலில் முயற்சியுடையதா யிருப்பது பற்றி யன்றோ பெரியோர்கள் "தடுங்கோள் மனத்தை" என்றும், "மனமொ ருத்தன் வசப்படு மேலவன், பின்னை வருத்தும் பிறப்பை யடைந்திடான்" என்றும், "மனமடங்குந் திறத்தினி மேலாரிடத்தே, யிருந்தறியேன்" என் றும், 'பெட்டியிற் பாம்பெனப் பேய்மன தடங்க, ஒட்டியே யூது குழல் கோனே, ஒட்டியே யூது குழல்' என்றுங்கூறியருளினார்கள். மனமானது தீயகாரியங்களைப்பற்றி பெண்ணுதவாறாக, அதனை யடக்கி யாளுபவரே ஆண்மையுடையவராவர்; மனத்தினைத் தம் வசமாக வடக்கியாளும் வழியினை யறியாதிருப்பவர், உலகமுற்று மடக்கி யாள்பவரா யிருப்பினும், உண்மை நோக்கிலவர் ஆண்மை யுடையவ ராதல் எங்ஙனமாம்?

மனத்தை யடக்கியாளுதக லில்லாதவிடத்து இந்திரிய மடங் குவ தொருபோது மில்லையாம். சரீரவடிவத்தேரை யிந்திரியவடி வக் குதிரைகள் நல்லொழுக்கம், தீயொழுக்க மென்னுமிரண்ட னுள், யாதாவதோ ரொழுக்கவழியே யிழுத்துச் செல்லுந்தன்மை யுடையனவாயிருக்கின்றன. இவ்விந்திரிய வடிவக் குதிரைகளின் வாயிற்பூட்டிய கடிவாளம் மனமாம்; புத்தி சாரதியாம்; சீவாத்மா யஜமானனும். புத்தியாகிய சாரதி மனமாகிய கடிவாளக்கயிற்றை விழிப்பாகப்பிடித்துச் செலுத்தினுற்றான் இந்திரியங்களாகிய குதி ரைகள் நல்லொழுக்கவழியிற் செல்லும்; மேற்படி சாரதி சிறி தஜாக்கிரதையாக விருந்தாலோ அக்குதிரைகள் தீயொழுக்கவழி யிற் செல்லும். சரீரமாகிய தேரிற்பூட்டிய விந்திரியங்களாகிய

குதிரைகள் புத்தியாகிய சாரதியின் வசமாகவிருந்து நல்லொழுக்க மாகிய வழியிற்செல்லும்போது, ஜீவாத்மாவாகிய யஜமான் சுவர்க்கத்தை யடைகின்றான்; அக்குதிரைகள் புத்தியாகிய சாரதியின் வசமாக நில்லாது தீயொழுக்கமாகிய வழியிற் செல்லும்போது, அச்ஜீவாத்மாவாகிய யஜமான் நரகத்தை யடைகின்றான். சாரதியின் அஜாக்கிரதையினால் வண்டியிற் பூட்டிய குதிரை தப்புவழியிற் சென்று வண்டியின்மீதேறியிருப்பவனுக்குத் துன்பம் விளைவிப்பதுபோல, புத்தி ஸ்திரமாயிராது பராமுகமாவதினால் இந்திரியங்கள் தீங்கியற்றும் சப்தாதி விஷயங்களிற்சென் றுயிர்க்குத் துன்பம் விளைப்பனவா யிருத்தலின், புத்தி அல்லது மனத்தைப் பிரயத்ன பூர்வகமாக அடக்கியாளுகின்றவரே, மேனிலைபைத் தவறாதடைவர். மனம்போன போக்கெல்லாம் போவதா யிருப்பவர் துன்பத்தை யடையாது வேறெதனை யடைதல் கூடும்?

மனம் அடங்காதவரையில் இந்திரியங்கள் சப்த முதலியவற்றின்கண் செல்லுத லடங்குவனவன்று யிருத்தலின், மனத்தை யடக்கியாளுகின்றவர்களே இந்திரியங்களையும் அடக்கியாளு மியல்புடையவராவர். மனத்தினையடக்கியாள முயலாம லிந்திரியங்களை யடக்கியாள முயலுதல் ஒருபோது மாகாதாம். இந்திரியங்களை யடக்கியாளுதலும் மனத்தை யடக்கியாளுதற் கேதுவாம். இந்திரியங்களை யடக்கியாள முயலாது மனத்தையடக்கியாளமுயலுதலுங் கூடாதாம். இந்திரியங்களையடக்கியாளுதலால் மனத்தையடக்கியாளுதலும், மனத்தை யடக்கி யாளுதலால் இந்திரியங்களையடக்கியாளுதலும் சம்பவிப்பனவா யிருத்தலின், இந்திரியம் மனமென்னு மிரண்டையுஞ் சமகாலத்திலடக்கியாள முதலுதல்வேண்டும்.

நீரிலிறங்கிய பிறகு நீந்தக் கற்றுக்கொள்ளுவதா? நீந்தக் கற்றுக்கொண்டபிறகு நீரி லிறங்குவதா? என்பதுபற்றி யூகித்துப்பார்க்குமிடத்து மேற்கூறிய விஷயம் நன்கு விளங்கும். நீரிலிறங்குவதும் நீந்தக் கற்றுக்கொள்ளுவதுஞ் சமகாலமாயிருப்பதுபோன்று, இந்திரியங்களை யடக்கியாளுவதும் மனத்தையடைக்கியாளுவதும் சமகாலமா யிருத்தல்வேண்டும். எவ்வளவிற் கெவ்வளவுமனம் அடங்குகின்றதோ அவ்வளவிற்கவ்வளவு இந்திரியங்களின் அடக்கமுண்டாம்; எவ்வளவிற் கெவ்வளவு இந்திரியங்க ளடங்குகின்றனவோ அவ்வளவிற் கவ்வளவு மனத்தின் அடக்கமுண்டாம். மனவடக்கத்தால் இந்திரியங்களின் அடக்கமும், இந்திரியங்களின் அடக்கத்

நால் மனத்தினடக்கமு முண்டாவனவா யிருத்தலின், இந்திரியங்களைச் செவ்வையாக அடக்கி யாளுபவரே மனத்தைச் செவ்வையாக அடக்கி யாளுபவரென்றும், மனத்தைச் செவ்வையாக அடக்கியாளுபவரே இந்திரியங்களைச் செவ்வையாக அடக்கியாளுபவரென்றும் பெறப்படுமா றிங் கூகித்துணரத் தக்கதாம்.

மனம் பாவகாரியங்களைப் பற்றிச் சிந்தியாவர்றதனை யடக்கி யாளுதலைச் சமமென்றும், மெய் வாய் கண் மூக்குச் செவியென்னு மிந்திரியங்கள் ஊறு சுவை ஒளி நாற்றம் ஒலியென்னும் விடயங்களிற் செல்லாவா றவற்றை யடக்கியாளுதலைத் தமமென்றும் சாஸ்திரங்கள் கூறுகின்றன. இவை யிரண்டும் முறையே சாந்தி யென்றும் தாந்தியென்றுங் கூறப்படும். இச்சாந்தி தாந்திகளை யுடையவரெவரோ அவரொருகாலத்தும் பாவகாரியங்களைச் சிந்தித்தலுமில்லையாம், பேசுதலுமில்லையாம், செய்தலு மில்லையாம்; தீங்கானவற்றைப்பற்றிப் பேசுதலும் தீங்கானவற்றைச் செய்தலு முடையா ரெத்தன்மையராயிருப்பினும் அவர் சாந்திதாந்தியுடையாரன்றாம்; அவரே வேடத்தால் உலகை வஞ்சிப்பவராவர். அவர் "தான்கெட்ட தன்றிச் சந்திர புஷ்கரணியையுங் கூடக் கெடுத்தான்" என்னும் பழமொழிக் கிலக்காகநின்று பழிபாவங்கட்காளாகித் தாங் கெடுவதன்றித் தம்மைச்சேர்ந்தாரையுங் கெடச் செய்கின்றனர். இவர்தாம் கூடாவொழுக்கமுடையார். இவ்வியல் பினரோடு கூடா தகலுதலே மிகவும் நன்றாம். மனத்தினைப் பாவ காரியங்களைப் பற்றிச் சிந்தித்தலி னின்றும் நீக்கினால் வாக்கால் அவை பற்றிப் பேசுதலும், காயத்தால் அவை செய்தலும் நிச்சயமாக வொழியும்.

"இச்சை நீக்கினவனுக்கு எந்த நூலினும், உலகத்திலெப்போதும் எவ்வாறாய செயலுங்காணப்படவில்லை. எச்செயல் சிறிதாவது செய்யப்படுகின்றதோ அதுமுற்றுங் காமத்தின் செய்கைதான்" என்று மனுதருமசாஸ்திரம்இரண்டாவதத்தியாயத்திற்கூறுவதால், கருமத்திற்கு மூலம் இச்சை (காமம்) என்று பெறப்படுகின்றது. தீயனவற்றை நினைத்தற்கும், கூறுதற்கும், செய்தற்கும் காமமே காரணமாக விருத்தலின், காமாரியை (காமனைவென்றவரை-மும்மூர்த்தி வடிவமாயுள்ள பரஞ்சோதியை) நோக்கித் தியானஞ்செய்து சமாதிகூடுகின்றவரே காமனை (விஷயவிச்சையை) வென்று செயலற்றுச் சிரங்கத்தில் (மனிதவுடம்பிலே) சிதம்

பரத்தை (சிதாகாசத்தை-தாம் பூரணப் பொருளாயிருத்தலை)க் கண்டு தீயனவற்றை யெண்ணாது, சொல்லாது, செய்யாது, ஏழுமலைமீதேறி (ஞானபூமி யேழனுள் ஈற்றதான துரிய நிலத்தின்கணிருந்து) என்று மாறாத அறிவாய் விளங்குவர். இவரது மனமே பாவஞ் செய்யாத மனமாம். நாமும் அந்நிலையைப் பெறுவோமாயின், பாவஞ்செய்யாது பரானந்தவடிவாய் விளங்கும் பாக்கியத்தைப் பெறுவோம். திருநாவுக்கரசு சுவாமிகள் "சந்தி யானைச் சமாதிசெய் வார்தங்கள், புந்தி யானைப்புத் தேளிர் தொழப்படும், அந்தி யானையா மாத்தூ ரழகனைச், சிந்தி யாதவர் தீவினை யாளரே" என் றருளியிருந்த லிங்கு நன்கு கவனிக்கத் தக்கதாம்.



## 37. நானெனுஞ்செருக்கறின் நற்கதியாமெனல்.

(11-9-11)

கனகாபுரமென்னு மோரூரில் அன்னக்காவடி மடமென்றொருமட மிருந்தது. அம்மடத்தின்கண் சாதுக்கள் பலர் வந்து தங்கி யிருப்பதற்கேதுவான சௌகரியங்களெல்லாம் அம்மடத்தின் தலைவரால் செப்பமாக வமைக்கப்பட் டிருந்தன. அம்மடத்தின்கண் சாதுக்கள் பலர் வந்து கூடிச் சாஸ்திர விசாரஞ்செய்து வந்தார்கள். அவ்வாறு நிகழ்ந்து வருநாளி லொருநாள் இலக்கிய இலக்கண தருக்க வேதாந்த முதலிய சாஸ்திரங்களிற் றேர்ந்த அறிவுடைய துறவிகள் பல ரொருங்கு கூடிச் சித்தத்தைச் சிவமாக்குந் தன்மை வாய்ந்த சிதம்பரம், அங்கத்தின் (உடம்பின்) பயனை யடையச் செய்யுந் தன்மை வாய்ந்த சீரங்கமுதலிய திவ்விய திருப்பதிகட்குச் சென்று, காரணங்களெல்லாங் கடந்துநின்று கருணா சாகரமாய் விளங்குங் கடவுளைத் திரிகரணங்களாலும் வணங்கிச் செந்நெறி கண்டுய்தற் பொருட்டு யாத்திரை செய்து வந் திடையே யுள்ள அம்மடத்திற் றங்குவாராயினர்; தங்கியவர்கள் தங்காலத்தைப் பயன்படா நாளாகச் செய்தல் கூடாதென்றுண்டுள்ளவர்களோடு சாஸ்திர விசாரஞ் செய்வாராயினர். அப்போது சாஸ்திரத்தி னுண்மைப் பொருள் விளக்கம் தற்போதம் (யானெனதென்னுஞ் செருக்கு)நீங்கினவர்க்கன்றி மற்றவர்க் குண்டாவதின்றென்பதுணராது தற்போதப் பெருக்காற் றம்மைத் தாமேபெரியரென மதித்திருக்குஞ் சிலர் வந்துசேர்ந்து அவர்களோடு

வெற்றி கொள்ளுங் கருத்துடன் விசாரஞ் செய்வாராயினர். இவ் விசார வாதம் கடை போகாது வளர்ந்து முடிவில் ஆத்துமா இன்னது, அநாத்மா இன்னது என்றாயும் விசார வாதமாக வமைந்தது. இது பற்றிப் பலர் பலவிதமாகப் பேசி வருதலைக்கண்ட ஒருவர் ஆத்மா இன்னது, அநாத்மா இன்னது என்றறிவதாலாம் பயன் யாது என்று வினவினார்? அதற்கவர்கள் பலவாறாகக்கூறுது முடிவான பயன் முத்தி பெறுதலென்று கூறினார்கள்; அதுகேட்ட அவர் அவர்களை நோக்கி, உங்களுள்யாவர் முத்தி பெறுதற்குரியரென் றுசாவினார். உண்மையை யுணர வேண்டு மென்னுங் கருத்தின்றி வெல்ல வேண்டு மென்னுங் கருத்தோடு சாஸ்திர விசாரஞ் செய்ய முன் வந்திருப்பா ரியாவரும் பையப் பைய மேலுங் கீழும் பக்கமுமாக மருள மருள விழித்துப் பார்த்து, இது விடை கூறுதற்கரிய கேள்வியா யிருக்கின்றதென்று சிந்தித்து வாக்கு மௌனம் பூண்டு செயலற்றுச் சித்திரப்பதுமை போன்று சிறிது பொழு திருந்தார்கள். அதுகண்ட அவர் நீவிரிவ்வாறிருப்பது முறையாகாது; யான் வினவியதற்குத் தாங்க ளத்தியாவசியகமாக விடை கூறுதல் வேண்டும்; கருணை புரியப் பிரார்த்திக்கின்றேனென்று கூறினார். அவர்களுள், ஒருவ ரவரை நோக்கி ஐயா! சைவர் தாம் முத்தி பெறுதற் குரியர்; மற்றவர்கள் பரமசிவன் கருணைக்குப் பாத்திரராக விராமையின், அவர்கள் முத்தி பெறுதற் குரியவராகார். யாம் சைவராக விருக்கின்றமையின், தவறாது முத்தி பெறுவோ மென்று கூறினார்; மற்றொருவ ரெழுந்தவரை நோக்கி, சித்தாந்த சைவரல்லவோ முத்திபெறுதற் குரியர், நீரெவ்வாறு முத்தி பெறுதற் குரியவராவீரென்று மொழிந்தார். இவ்வாறே தற்போத மிக்கிருப்போர் பலரும் தாம் தாம் முத்திபெறுதற்குரியரென்றும் மற்றவர் அது பெறுதற் குரியவரன்றென்றும் பேசி யொருவரை யொருவர் மறுத்துக் கலகம் விளைத்து டகர வருக்கப் பிரயோகம் வரையிற் செல்வாரானார்கள். (டகரவருக்கப் பிரயோகமாவது டகரத்தை யிறுதியிலுடைய பதப் பிரயோகம்; அஃது அடா, போடா, வாடா, நீ கெட்டாயடா, மடையா, உனக்கென்ன சாஸ்திரந்தெரியுமடா, நீ யாரிடத்திற் படித்தாயடா என்றற் றொடக்கத் தனவாம்). இவர்கள் "வாதமிடுஞ் சமயநெறிக் கரியதாகி மௌனத்தோர் பால்வெளியாய் வயங்கா நின்ற, சோதியை" என்று பெரியாரருளி யிருத்தலை யூன்றிக் கவனித் திருப்பா

ராயின், இத்தலை தடுமாற்ற நெறியிற் சென்று சழக்குப்பட்டு வருந் தாரென் றாரம்பத்தில் வினவியவர் வாய் மௌனம்பூண்டு வாளா விருந்தனர். இவ்விசார வாதம் டகரவருக்கப் பிரயோகத்தைப் பயனாகவுடையதா யிருப்பதை அம்மடத்தில் வரும் சாதுக்களுக்கு உள்ளன்போடு தொண்டுசெய்து, அவர்களது கருணையைப்பெற்று நடுநிலை யுற்று ஞானமயமாக விளங்கியிருந்த ஒரு தவமூதாட்டியார் (ஒரு கிழவி) கண்டு, அவர்களது மடமைக்காக மனமிரங்கி, அவர்களைக் கடைத்தேற்ற வெண்ணி, அவ்வகங்கார வாதிகளிடத்துச் சென்று "பண்டிதர்களே! உங்களுள், ஒருவரும் முத்தி பெறுதற் குரியரல்லர், முத்திக்கு நான் போனால் போவேன்" என்று கூறி யருளினர். அது கேட்டவர்கள் கடுஞ்சின முற்று, அவ்வம்மையாரை நோக்கி, "உனக்கென்ன தெரியும்; சகல சாஸ்திரார்த்த சம்பன்னர்களாகிய வெங்கட்கே முத்தி கிடைக்கும் விஷயம் விவாதத்திலிருக்கும்போது நீயா முத்தி பெறப் போகின்றாய்" என்று மொழிந்தார்கள். அதற் கவ்வம்மையார் "கேட்டலுடன் சிந்தித்தல் கேடிலா மெய்த்தெளிவால், வாட்டமறு வுற்பவநோய் மாறுமோ - நாட்டமுற்று, மெய்யான நிட்டையினை மேவினருக் கன்றோதான், பொய்யாம் பிறப்பிறப்புப் போம்" என்று தத்துவத்தின் றலைகண்டு சித்தந் தெளிந்து சிதாநந்தமான செவ்வியோர் திருவாய்மலர்ந் திருத்தலை நீவிர் ஒரு கணப்போதாவது சிந்தித் திருந்தால் இவ்வல்லலாம் விசார வாழியி (கடலி)ல் மூழ்கி யவலமுற மாட்டீர். 'முத்திக்கு நான் போனால் போவேன்' என்பதன் பொருளை நீங்களொரு சிறிது முணரவில்லை. முத்தி யென்பது ஆத்மா: அவிச்சை, அஸ்மிதை, ராகம், துவேஷம், அபினிவேச மென்னும் பஞ்சக்கிலேசமு மற்றுத் தானே தானாய் நிற்குநிலை. அந்நிலை சரீரம், இந்திரியம், பிராணன், மனம், புத்தி, சித்தம், அகங்காரம் சூன்ய மென்றற் றொடக்கத்தன வற்றுள், ஒவ்வொன்றன்கண் ஒவ்வொரு சமயத்து நான் நானென்றுண்டாகும் மயக்கபுத்தியை யொழித்தால் சித்திக்கும்; மோகவசத்தால் உடம்பு முதலிய வற்றின்கண் நானென்னும் புத்தி யுண்டாகின்றது, அப்புத்தியைச் சற்குருநாத னருளாலொழித்து, நான் உடம்பன்று, இந்திரிய மன்று, பிராணனன்று, மனமன்று, புத்தியன்று, சித்தமன்று, அகங்காரமன்று, அவிச்சையன்று, சூன்ய முதலியனவு மன்று; உண்மையாக நான பா

மாநந்த போதவடிவனென்றுள்ளவா றுணர்ந்தவரே முத்தி பெறு தற் குரியராவர்; நானென்பதன் பொருளாயிருப்பது பரமாநந்த போதவடிவ ஆத்மா; மற்றைய வெல்லாம் நானென்பதன் பொரு ளாவதேயில்லை. நானென்பதன் பொருள் கண்டாரே ஞானவாகா யங் காண்பர்; பெரியாரும் "நானெனும் பொருளைக் கண்டோர் ஞானவா காய மாவர்" என்றருளி யிருக்கின்றனர். உடம்பு முத லியவற்றின்கண் நான் (ஆத்மா) என்னும் புத்தி யகன்றவரே முத்திபெறுதற் குரியராவர். அதனை டகர வருக்கப் பிரயோகபரி யந்தஞ் சென்றகங்கார மயமாயிருக்கும் நீங்கள் பெறுவது ஊசி யின் காதி லொட்டகம் நுழைவது போலா மென்று கூற, அவர்க ளொருவாறு தற்போத மகன்று, கல்விச் செருக்கா லகக்கண் குருடாகி யஞ்ஞான கூபத்தி (கிணற்றி) ல் விழுந் தறிவிழுந் தல்ல லுறப் பெற்றோ மென்றிரங்கிப், பயன்படாது சென்ற நாட்களுக் காகப் பரிதாபமுற்று, தம்முடைய கல்விச் செருக்கின் மிகுதி யைக் கண்டொன்றும் பேசாதிருந்த சாதுக்களையும், அவ்வம்மை யாரையும் வணங்கித்துதித்து, மெய்ஞ்ஞான யோகத்தாலன்றி வேறெதனாலும் சித்தஞ் சிவமாயிருக்கும் நிலை சித்திப்பதில்லை யென்று தெளிந்து, வஞ்சப்புலனை (இந்திரியத்தை)யும் மனத்தை யும் அடக்கி மயல் மாண்டு மாறுமுகமின்றி ஞானமயமாய் விளங் கினர். இக்கதைப் போக்கால் கல்விச் செருக்குடையார் கற்றவரா கார்; அவர்க்குறும் பயன் பழியும் பாவமுமா மென்ப தினிது விளங்கும். அறிவு நூலை நல்லாசிரியரிடத்து வாலாற்று முறை யாகக் கற்றொழுகு பவரே தத்துவ ஞானிகளாகி யுத்தம நிலை பெறுவர். "சாத்திரங்கள் கத்தித் தலைவீங்கு வீர்குலமுங், கோத்திரமுங் கொண்டுவினை கூட்டுவீர் - சாத்திகரா, யும்மாலே யும்மையுணர்ந் தோயாத் தொழில்விட்டுச், சும்மா விருக்கொணு தோ" என்று சொரூபாநந்த ரருளியதிங் கின்றியமையா துணர்தற் பாலதாம்.



## 38. பேரின் பத்தைப் பெறுநெறி கிளத்தல்.

(18-9-1911)

நாம் இன்பதுன்பங்களால் மொத்துண்டு வருவதற்குக் காரணம் உடம்பின்கண் யானென்னும் புத்தியுறுதிப்பாடாயிருப்பதேயாம்.

எனதுடம்பு, எனது கண், எனது மனமென்றற் றொடக்கத்தன வாக வியவகரித்து வருகின்ற நாம், அங்ஙனம் வியவகரித்துவருவதன் காரணத்தை யறியாம லுறுதிப்பாடாக நான் பூரித்திருக்கின்றேன், நான் காணுகின்றேன், நான் நினைக்கின்றே னென்றற் றொடக்கத்தனவாகவும் வியவகரித்து வருகின்றோம். எனதென்று வியவகரிக்கப்படுவது நானென்பதன் பொருளாகாது. நானென்று வியவகரிக்கப்படுவது எனதென்பதன் பொருளாகாதென் றொருபோதேனும் நாம் சிந்தித்துணருவதேயில்லை. எனது வீடு, எனது காணி, எனதுமனைவி, எனதுமக னென்றற் றொடக்கத்தனவாக வியவகரிக்கும் நாம் மறந்தும் நான் வீடு, நான் காணி, நான்மனைவி, நான் மகன் என்றற் றொடக்கத்தனவாக வியவகரிப்பதே யில்லையென்பது ஐயமற்றவிஷயமாம். எனது வீடு என்னுமிடத்து எவ்வாறு அவ்வீடு நானென்பதன் பொருளாக வில்லையோ அவ்வாறே எனதுடம்பு என்னுமிடத்தும், அவ்வுடம்பு நானென்பதன் பொருளாவ தில்லையாம். நானென்பதன் பொருளாக வுடம்பு முதலியவற்றை நாமுறுதிப்பாடாகக்கொண்டுள்ள மயக்க புத்தியினாற்றான் நாம் (கண்) இமைபோன்று மாறி மாறிவரு மின்பதுன்பங்களால் மொத்துண்டு, பிறந்திறந் தல்ல லுறுவதையே பயனாகக்கொண்டு பரதவிக்கின்றோம்.

கடலிடத்துக் காற்றினால் அலைநுரைமுதலியன உண்டாவது போன்று, சித்தத்தினிடத்துச்சப்த பரிச ரூப ரச கந்தங்களின்சம்பந்த வாயிலாகத் தருமாதர்மங் (நல்வினை தீவினை) களால் இன்பதுன்பங்களுண்டாகின்றன. அவற்றால் நாம் களிப்பையுங் கவலையையு மடைந்து செய்வது தவிர்வது தெரியாது திகைப்புற்று, இன்பமேயென்றும் வேண்டுமென்றிச்சித்து, இன்ப முண்டாவதற் குரிய சாதனத்தையே யடைய முயலுகின்றோம். இன்ப முண்டாவதற் குரிய சாதனத்தை விரும்பி முயலுகின்றோமே யன்றி, நாமுண்மையி லின்பவடிவமாக விருக்கின்றோ மென்பதுபற்றிச் சிறிதேனும் விசாரியாதிருக்கின்றோம், நாமின்புருவமாக விருக்கின்றோ மென்ப துணர்ந்தவிடத்துத்தான் நாமுடம்பன்று, நாமிந்திரியமன்று, நாம் மனமன்று, திருசியமா (காணப்படுவதா) யுள்ள பொருள்களுள் எதுவும் நாமன்று என்பதினிதாக விளங்கும். நாம் இன்புருவமாக இருக்கின்றோம்; நம்மா லறியப்படுவனவாயும் எவ்வாற்றானும் நானென்பதன் பொருள்களாகாதனவாயு முள்ள வுட

ப்புமுதலியன எவ்வாற்றானுமின்புருவமாக இருப்பனவன்றென்று ஐயந்திரிபின்றி யுணர்ந் தறிவானந்தமாக விருப்பவர்தாம் இன்ப துன்பங்களால் மொத்துண்ணாது சிதம்பரஞ் சென்று திருநடங் கண்டவராவர்.

நாம் உடம்பானது பூரித்தலையும் இளைத்தலையும் அறிகின்றோம்; அது நனவு கனவு உறக்க மென்னுமவஸ்தைகளில் மாறி மாறிப் போவதையுமறிகின்றோம்; அது மல மூத்திர முதலியவற்றால் நிறைந்திருப்பதையு மறிகின்றோம்; அது தன்னைச் சேர்ந்த எவ் வத்துவினையும் அசுத்த மாக்குவதையுமறிகின்றோம்; அது வாதபித் த சிலேத்துமவாயிலாகப் பெரும் பகைவன்போன் றிருந்தொழி யாது வருத்துவதையு மறிகின்றோம்; அது தன்னிலைமை கெட்டு மடிந்து கொளுத்தப்படுவது அல்லது புதைக்கப்படுவது முதலிய வற்றையுமறிகின்றோம். அவ்வாறறிந்தும் அதனிடத்து நானென் னும் புத்தியை யுறுதிப்பாடாகச் செய்து, இன்ப துன்பங்களால் மொத்துண்டு திகைப்புறுகின்றோம். இவ்வாறு திகைப்புறும் நாம் எவ்வாறு பிறவிக்கடலைக்கடந்துபேரின்ப நிலையினைப்பெறுதல்கூடும்?

இறந்து போகு மியல்பினையுடைய உடம்பின்கண் நானென் னும் புத்தியை யுறுதிப்பாடாகச் செய்து வருவதாலன்றோ நம்மு டைய நாட்கள் பயன்படாதநாட்களாக வொழிகின்றன? உடம்பின் கண் நானென்னும் புத்தி யுறுதிப்பாடாயிருப்பதனாலன்றோ வீடு, காணி, பொன், பொருள் முதலியவற்றின்கணெனதென்னும் புத்தியுறுதிப்பாடாயிருக்கின்றது? வீடு, காணி, பொன், பொருள் முதலிய வற்றை யெனதெனதென் றபிமானித்துச் செருக்குற் றிருந்தவர்களுள், எத்தனைபேரிப்போ திருக்கின்றார்கள்? பிரகர நெடுந்திசைப் பெருந்தண்டேந்திய கரதலத் தண்ணலாகிய யமன் இவர்பெரும்பண முடையவரென் றெவரையாவது விட்டுப் போயினனோ? இறவா திருப்ப தெவர்க்கு மரிதன்றோ? மனிதவுட ம்போடு கூடியிருக்கும் நாள் சிலவற்றுள், நல்லனவற்றை ஞாநாசிரி யரை யடுத்துணர்ந்து நடுநிலையினின்றாலன்றோ உடம்பின் கண் யானென்னும் புத்தியும் வீடு முதலிய வற்றின்கணெனதென்னும் புத்தியுமொழியும்? உடம்பே யுயிர்; போகமேமோட்சம்; பிறரை வருத்திப் பொருள் தேடுவதே புருஷார்த்தமென்றிருப்பவர்க் கிவ்விஷயம் எட்டிக்காயை வேப்பநெய்யிற் கலந்துண்ணக் கொடுத்தது போலவாம்.

நானென்பதன் பொருள் உடம்பு முதலியனவன்று; அது ஞாநாநந்த வடிவமென் றுணராது, நல்லோர் சொல்வதைச் செல்வச் செருக்காற் செவியுற்றுக் கேளாது பொன்னையே தேடிப் பெண்ணையேவிரும்பிப் போகத்தையே பேராநந்த வடிவமோட்சமென்றுணர்ந்து, பொக்கமே (பொய்யே) பேசிப் பொழுது கழிக்கும் புல்லறிவாளர்கள் தமக்குரிய மனைவி முதலியவர் மடிந்து மண்ணாய் விடுவதைக்கண்டும், மயக்கபுத்தி நீங்குகின்றார்களில்லை.

சாதற்குரிய நிலை சார்ந்த போதும் ஈசனை யேத்திப் போற்றுகின்றார்களில்லை; பொன்னே! பொருளே! பெண்டாட்டியே! புத்திரா! என் றலறி யலறிச் சாகின்றார்கள். இவர்க ளிவ்வாறலறிச் சாவதினால் என்று மிவர்க்கு இன்பமில்லை யென்பது விளங்குகின்ற தன்றோ? எல்லாம் வல்லஈசன் எவரையுங் காப்பாற்றுதற்குரியன், நாம்கோபுரந்தாங்கிப்போலிருக்கின்றோ மென்றுள்ளவாறுணர்ந்தவர்க ளன்றோஇறக்கும்போது விஷயசிந்தனையற்றுத்தேவதேவனைநினைக்குந் திறமுடையராவர். தேவதேவனைச் சீரங்கநாதனைத் தில்லை நடராஜனை மனமொழி மெய்களொத்துத் தியானித்துத் துதித்து வணங்குஞ் சீலவான்களுக்கே யுயி ருடம்பினும் வேறாய தென்னுமுணர்வும், அஃ தின்புருவ மென்னு மறிவும், இன்பதுன்ப முதலியன வுண்மையாக நமக்கில்லை யென்னுமுறுதிப்பாடும் உண்டாம். அவர்தாம் இன்பதுன்பங்களின் வயமாகாத நிலையினைப் பெறுதற் குரியராவர்.

சுகமானது வைஷியிகம், அபிமானிகம், மனோரதிகம், ஆப்பியாசிகம் என்னும் வேறு பாட்டால் நான்கு வகைத்தாம். (1) அனுகூலமான சப்த பரிச ரூப முதலிய விஷயங்ளின்பிரத்தியட்சத்தா லுண்டாகுஞ் சுகம் வைஷியிக சுகமாம், (2) அரசுரிமை, அதிகாரம், கல்வி முதலியவற்றின் செருக்கா லுண்டாகுஞ் சுகம் அபிமானிக சுகமாம், (3) வீடு, காணி முதலியவற்றைப் பற்றிச் செவ்வையாக இவை சுகமா? சுகசாதனமா? துக்கமா? துக்க சாதனமா? என்றாராய்ந்து, இவை யென்றுந் துக்க சாதனமாகவே யிருப்பனவாம்; சிறிது பொழுதேனு முண்மையாகச் சுகசாதன மாவதில்லை யென்னுந்தோஷதிருஷ்டியால் அவ்வீடு முதலியவற்றை மனத்தால்தியாகஞ் செய்வதா லுண்டாகுஞ் சுகம் மனோரதிகசுகமாம், (4) சூரிய நமஸ்கார முதலியவற்றாலும் வேலை செய் தினைப் பாறுவதாலும் பிறவற்றாலுமுண்டாகும் சுகம் ஆப்பியாசிக சுகமாம். இந்

நால்வகைச் சுகங்களுள், முன்னுள்ள விரண்டும் பெருந்துக்கத்திற்குச் சாதனமாம்; பின்னுள்ள விரண்டனுள், முன்னது சர்வதுக்க நிவிர்த்தி பரமாநந்தப் பிராப்திக்குச்சாதனமாம்; பின்னது பெரும் பான்மையும் பரம்பரையாகத் துக்க நிவிர்த்திக்குச் சாதனமாம். இப்பாகு பாட்டினை நல்லாசிரிய ரிடத்து நன்குணர்ந்து மனத்தியாகத்தா லுண்டாகுஞ் சுகத்தை மாத்திரம் விரும்பி மற்றையவற்றைமனப்பூர்வகமாக விரும்பாது "தன்னுடைய விவேகமெனும்பெருங்காற்றாற் சங்கற்ப முகிலை (மேகத்தை)த் தள்ளி, மன்னுசரற்காலத்தின் வானம்போ னின்மலத்தை" மருவி நிற்பவரே மனத்தின் விகற்பமாண்டு, விஷப வாயிலாகவரு மின்ப துன்பங்களால் மொத்துண்டு கவலையுற்றுக் கலக்க முறுவதினின்று நீங்கி, பிறப்பிறப்பற்ற பேரின்பக்கடலில் மூழ்கி, பேதமற்ற பெருவாழ்வினைப் பெறுவர். " இறக்கு முடல மியானெனப்பட் டிறந்து போய வித்தனைநாள், பிறப்பின் மக்கட் பிறப்பம்ம பெறுதற் கரிதா லினிப் பிறவாச், சிறப்பு நெறிதந் திடவேண்டும்" என்று (பாகவதத்தில்) முசுகுந்தர் பகவானை நோக்கிப் பிரார்த்தித்ததிங் கத்தியாவசியகமாக வறிதற் பாலதாம்.



## 39. நினைப்பு மறப்பறின் நிஜ நிலையாமெனல்.

(25-9-1911)

" இறப்பும் பிறப்பும் பொருந்த வெனக்-கெவ்வண்ணம் வந்ததென் றெண்ணி யான் பார்க்கின், மறப்பு நினைப்புமாய் நின்ற வஞ்ச-மாய மனத்தால் வளர்ந்தது தோழி" என்று தாயுமானார் திருவாய் மலர்ந்தருளி யிருத்தலை நோக்குமிடத்து, கடலில் காற்றின் வசத்தால் அலை மாறிமாறி (ஓரலைக்குப் பின் மற்றோரலை, அதற்குப்பின் வேறோரலை, அதற்குப்பின் பிறிதோரலையாக) இடை விடாது தோன்றிவருவது போன்று நமக்கு மறப்பு நினைப்பு மயமாயுள்ள மனத்தால் இறத்தலும் பிறத்தலு மிடைவிடாது வருகின்றதென்ப தினிதாக விளங்கும். மனமானது நினைப்பு மறப்பு மயமா யிருப்பதாற்றான் நமக்கு நம்முடைய யதார்த்த நிலையுள்ளவாறு விளங்கா திருக்கின்றது. நமது யதார்த்தநிலை யுள்ளவாறு நமக்கு விளங்கினாற்றான் நாம் பிறப்பிறப் பென்னும் பேராழியிலகப்பட்டு வருத்தமுறுவது நீங்கும். மனத்தின நினைப்பு'மற

ப்பு மயமாகாவாறு செய்து அதனைத் தமதேவலா ளாகக் கொண்டவரே தமது யதார்த்த நிலையினை யுள்ளவாறறிந்து உதியா மரியா வுணர்வு வடிவாய் உலகபோகப் பற்றின்றி யுயர்வற வுயர்நல முடைய ஸ்திதியினைப் பெறுவர்.

"உண்டோ நமைப்போல வஞ்சர் மல-மூறித் ததும்பு முடலை மெய்யென்று, கொண்டோ பிழைப்பதில் கையோ வருட்-கோலத்தை மெய்யென்று கொள்ளவேண் டாவோ" என்று தாயுமானர் கூறுவதனால், மனம் நினைப்பு மறப்பு மயமாக நின்ற நமக்குத் தீங்கிழைப்பதற்குக் காரணம் யாதழியினும் நம்முடல மழியாதென்று உடலை மெய்யென்று கொண்டுள்ள நமது மயக்கபுத்தியேயாமென்பது செவ்விதிற் றோன்றும். உடம்பு கல்லினும் வலிது; அஃதொருபோது மழிவதின்று; உடம்பினும் வேறாக வுயிரிருப்பதாகக் கண்டவரெவர்? உடம்பினும் வேறாக வுயிரிருப்ப துண்மையாயின், மருத்துவர்கள் எத்தனையோ முறை பிணியாளர்களது உடம்பினை யறுத்திருக்கின்றார்களே? அவர்களுக்கே னதுதோன்றவில்லை? இருந்தாற் றோன்றாது போமா? இல்லாமையாற்றான் றோன்றவில்லை யென்று குதர்க்கம்பேசி வருவதாற்றான் நாம்உடம்பினிடத்துச் சத்திய புத்திசெய்து, அதனையே யுயிராகக் கருதி அது காரணமாகத் துன்பவெள்ளத்தில் மூழ்கி யின்பவடிவ நகரினெல்லை காணாது ஏக்க முறுகின்றோம்.

"தானெனு நிலையைத் தெளிந்துதா னானே: ரன்றி யறியாரிலக்கிய மிதனை, யெத்திறத் தவரு மென்மனார் புலவர்" என்று பெரியார் (சச்சிதாநந்த சுவாமிகள்) அருளிச் செய்திருத்தலையுற்றுநோக்கி யூகித்தறியு மிடத்துத் தமது யதார்த்த நிலை, பரமாசிரிய ரருளியவாறு சித்தத்தைத் திருசியத்தி (விடயங்களி)னிடத்துச் சென்றலையாவா றடக்கிச் சிவாகாரமாக்கிச் சமாதி செய்யு முத்தமர்க்கே விளங்கும்; மற்றவர்கட் கெவ்வாற்றானும் விளங்காதென்பது பெறப்படுதலின், தானெனு நிலையைத் தெளிந்து காண முயல லத்தியாவசியகமாம். தமது யதார்த்த நிலையினை யறியவிரும்பாது குதர்க்க விகற்பங்களைப் பேசிக் குருநாதன் கூறியதைக் கவனியா தொழுகுபவர் உடம்பின் பயனை யொருபோது மடைவதே யின்றாம். நெருப்பிற் கிலக்கணம் சூடுடைமையும், நீருக் கிலக்கணம் குளிர்ந்த பரிசமுடைமையும், வாயுவிற் கிலக்கணம் உருவமின்றிப் பரிசமுடைமையுமா யிருத்தல் போன்று தானென்னு

மாத்மாவிற்கு மிலக்கணம் சச்சிதாநந்த முடைமையாம்; அவ்விலக்கண முடைய ஆன்மா இலக்கியமாம். உடம்பிற்கவ்விலக்கண மின்மையின், அஃதெவ்வாற்ரு னு மூயிராவதின்ரும். அழியாதிருப்பது சத்தாம்;பாதாவதொன்ருன் இருப்பையும்இல்லாமையையு மறிவது சித்தாம்; மிகுந்த பிரியத்திற்கு விஷயமாவது ஆநந்தமாம். ஆத்மா என்று மிருப்பதாலும், எல்லாவற்றையு மறிவதாலும், மிகுந்த பிரியத்திற்கு விஷயமாயிருத்தலாலும் அது சச்சிதாநந்த விலக்கணமுடைய தென்பது நமது சகல (சாக்கிர சொப்பன) கேவல (சுழுத்தி) அனுபவங்களா லினிது புலனும். உடம்பு அழிந்து போவதாலும், நம்மாலறியப் படுவதாயிருப்பதாலும், உண்மையாக நோக்கு மிடத்து மலமூத்திர முதலியவற்ருல் நிறைந்து வெறுப்பிற்கே விஷயமா யிருப்பதாலும் அது சச்சிதாநந்த விலக்கணமுடைய தன்ரும். நாம் இத்தகைய வுடம்பினை மயக்க புத்தியால் சத்தியமென்று நம்பியிருப்பதாற்ருன் மனம் நினைப்பு மறப்பு மயமாக விருந்து நம்மைப் பிறப்பிறப்பிற் குள்ளாக்கிப் பெருந்துன்ப மடையச் செய்கின்றது.

காணப்படுவது ஜடமாம்; காண்பது சித்தாம். உயிர்காணப் படுவதாயின், அது கடம், படம் (ஆடை) முதலியவற்றைப் போன்று ஜடமாம். எது ஜடமோ அது சித்தன்ருமாகலின், மருத்துவர் பிணியாளருடைய வுடம்பினை யறுத்துப் பார்க்கும்போது, அவர்க்கேன் உயிர் தோன்றவில்லை யென்று வினவுவது வினவேயன்ரும். உயிர் காணப்படுவதென்னு மிலக்கணத்தை யேற்குமாயின், அவ்வின பொருந்துவதாம். அது காண்பதென்னு மிலக்கண முடையதா யிருத்தலின், அவ்வின வொருவாற்ருலும் பொருந்துவதன்ரும். அறிவது அறியப்படுவது என்னுமிரண்டனுள், அறிவது சித்தாயும் அறியப்படுவது ஜடமாயு மிருத்தல் யாண்டும் நியதமாயிருத்தலின், உடம்பினதிருப்பையு மில்லாமையையு மறியும் உயிர் சித்தே (அறிவே) யாம். அதனுலறியப்படு முடம்புஜடமே யாம். ஜடமாயும் அழிந்துபோகு மியல்பினையுடையதாயும் நாட்செல்லச் செல்லத் துக்கத்தையே தருவதாயுமுள்ள உடம்பினிடத்து நானென்னும் புத்தி செய்து, அதனைப் போற்றுவதொன்றையே பெரும் பயனுகக் கொண்டு, இகலோகத்தின் பயனையும் பரலோகத்தின் பயனையும் அவற்றிற்குரிய சாதனங்களையு மறியாது,மனஞ் சென்றவாறே யின்பநுகர்ச்சிக் கங்காந்து திரிந்தல்ல

லுறுபவர் எவ்வாறு வஞ்ச மனத்தையடக்கி யறிவிற் சுகசமாதி பெற்று அகண்டாகாரமா யிருக்கும் நிலையினைப் பெறுவர்? இவர் நன்னிலையைப் பெறுவது கல்லாலாய தோணியைக்கொண்டு கடலைக் கடப்பது போலவாம்.

அப்பர் சுவாமிகள் கற்றோணியாற் கடலைக் கடந்து கரையேற வில்லையோ வெனின், அவர் கல்லைத் தோணியாகக் கொண்டு கடலைக் கடந்தது பரமேசுவரனது திருவருளாலாம். அது "சொற்றுணை வேதியன் சோதி வானவன், பொற்றுணைத் திருந்தடி பொருந்தக் கைதொழக், கற்றுணை பூட்டியோர் கடலிற் பாய்ச்சினு, நற்றுணை யாவது நமச்சி வாயவே" என்றப் பெரியா ரருளியிருத்தலா லினிது விளங்கும். நாமும் வான்பார்க்கும் பைங்கூழ் (மேகத்தை நோக்கும் பயிர்) போன்று பரமேசுவரனது திருவருளையே யுண்மையான பற்றுக் கோடாகக் கொண்டு, மனத்தினது நினைப்பு மறப்புக்களைத் தியானவாயிலாகச்சிறிது சிறிதாக அடக்கி வந்தால்அவை பையப் பையக்கெடும்; விஷயவாயிலாக வரும் நினைப்பு மறப்புக்கள் குறையக் குறைய மனம் உபசாந்த முடையதாய் விஷயவியாபாரமற்ற நிலையினையடையும்; விஷய வியாபாரமற்ற மனம் பரமாநந்த மயமாம்; பரமாநந்த மயமான மனமே பிரவிர்த்தி நிவிர்த்தி யென்னும் வியாபாரமற்று வெளி நாட்டமில்லாததாம்; வெளி நாட்டமற்ற மனத்தின் கண் அடிக்கடி யாதாவதொன்றனை நினைத்தலும் மறத்தலுமாகிய வியாபாரமின்மையின், அதுவே நன்மனமாம்: அம்மனத்தைச் சமாதிவாயிலாகப் பெற்றவர் தாம் சீவன் முத்தரென்று கூறப்படுகின்றனர். அவர்க்குப் பிறப்பிறப்பென்னுந் துவந்துவமின் றென்பது பிரசித்தமாதலின், அந்நிலையைப் பெற முயலுதலே நமது முக்கியக்கடமையாம்.

"இல்லா வுலக முண்டென்ன விருக்கு நினைவே மலமாகும், இல்லா மாயை யுண்டென்ன விருக்கு நினைவே மறைப்பாகும், இல்லா விந்த விருவகையு மிழிவாய்க் காணி னிடரில்லை, இல்லா விவற்றை யின்றென்றே யிருப்பா யென்று மியல்பாயே" என்று வேத சிரோண்ணி ஸ்ரீ சிதம்பர சுவாமிகள் உபதேச வுண்மையில் திருவாய் மலர்ந்தருளி யிருப்பதிங் கூன்றி யுணர்தற் பாலதாம்.



## 40. கண்கா தடக்கின் கதிபெற லாமேனல்.

## 2-10-1911.

இரசப் பூச்சுள்ள கண்ணுடியானது தனக்கெதிரேயுள்ள பொருளின் வண்ணம், வடிவு, அளவு முதலிய வற்றின் மயமாக விளங்குவது போன்று நமது அசுத்த மனமும் மெய் வாய் கண் மூக்குச் செவி யென்பனவற்றின் வாயிலாகத் தனக்கெதிர்ப்பட்டுள்ள பொருளி னுகாரமாக விளங்கி விரும்பியது கிடைத்த விடத்துக் களிப்பையும், அது கிடைக்காத விடத்துக் கவலையையு மடைந்து சகடக்கால் (வண்டிச் சக்கரம்) போன்று மாறிமாறிச் சுழன்று நம்மை யுண்மை நெறியுணராவாறு செய்துவருகின்றதை நாம் ஒரு கணமேனுஞ் சிந்தித்து நோக்குகின்றோ மில்லை. உடம்பினியல்பையும் உள (மன)த்தி னியல்பையும் உயிரினியல்பையும் உள்ளவாறுணர்ந் துணர்வுமயமாக விளங்கிய வுத்தமர்கள்: தமக்கியல்பாயுள்ள ஜீவகருணை, பாசவைராக்கியம், ஈசுவரபத்தி, பிரஹ்ம ஞானமென்னும் நான்கனுள், ஜீவகருணையால், உண்டதேயுறுதி, கண்டதே காட்சியென் றுறுதிகொண்டு மனத்தின் வயப்பட்டு நன்றிது தீதிதென்றுணரும் வழியறியாது மயங்கும் நமது மயக்கத்தைத் தவிர்க்க நம்மிடத்திற்குத் தாமே வலியவந்து, உறுதிமொழிகளைக் கூறி யுய்யுநெறியிதுவா மென்றுணர்த்தினுலும், நாம் சாதி குலங் கல்வி முதலியவற்றின் பெருமிதத்தினுல் அகங்கரித்து, அவற்றை யூகித்துப்பார்க்க வொரு சிறிது முடன்படுகின்றோ மில்லை. இவ்வாறிருக்கும் நாம் எவ்வாறு நன்னிலை கண்டு ஞானாநந்த மயமாதல்கூடும்.

பிராணிகளி னுடம்பு ஒரேரி போல்வதாம்; இனியதிது, இன்னுததிது வென் றறிதற்குப் பரமசாதனமாயுள்ள மனம் அதனிடத்திருக்கும் நீர் போல்வதாம்; பரிச முதலியவற்றை யறிதற்குச் சாதனமாயுள்ள மெய் வாய் கண் மூக்குச் செவியென்னு இந்திரியங்கள் அதற்குரிய மதகுபோல்வனவாம்; மெய் முதலிய விந்திரியங்கட்கும் பரிசமுதலிய விடயங்கட்கு முள்ள சம்பந்தம் வாய்க்கால் போல்வதாம்; பரிச முதலியவிடயங்கள் விளை நிலம் போல்வனவாம். ஏரியினுள்ள நீர் மதகின் வாயிலாகவெளிப்பட்டு வாய்க்கால் வழியாகச்சென்று விளை நிலத்திற் பாய்ந்து அவ்விளை நிலத்தின் வடிவத்தை யடைவதுபோன்று பிராணிகளுடம்பினுள்ள மனம் (மனோவிருத்தி - எண்ணம்) இந்திரிய வாயிலாக

வெளிப்பட்டு, இந்திரிய விஷய சம்பந்த வழியாகச் சென்று, விடயங்களிற் பரவி, அவற்றின் வடிவத்தை யடைகின்றது. மனம், அங்ஙனமாய நிலைமையை யடைந்தவிடத்திற்றான் பிராணிகட்குச் சப்தாதி விடயக்காட்சி யுண்டாகின்றது. அனுகூலமாய விடயக்காட்சி யுண்டாய விடத்துச் சுகமும்,பிரதிகூலமாய விடயக்காட்சி யுண்டாய விடத்துத் துக்கமுமுண்டாகின்றன.இச்சுகதுக்க வடிவ அழுக்கினாற் களங்கமடைந்த மனமே தீயமனமாம். இத்தீய மனமுடையவர்தாம் உயர்வற வுயர்நல முடைய முத்தி யொன்றுண்டென்பதை யிகழ்ந்து,உலகாசாரத்தையே மேற்கொண்டுசுகதுக்க வடிவபோகப் படுகுழியில் விழுந்து,மேலேறி யுய்ந்து போம் வழிகாணாது கலங்குகின்றவ ராவர்.

மனத்தினிடத்துச் சுகதுக்கவடிவ அழுக்குச் சேராவாறு செய்யும் வழியினை யத்தியாவசியகமாகக் காணமுயலுதல் மனிதரது முக்கியக் கடமையாம். இந்திரிய வியாபார மடங்கியபோது தான் மனத்தினிடத்துச் சுகதுக்க வடிவ அழுக்குச் சேருவதில்லை; அது சேராது களங்கமற்றுள்ள மனமே நன்மனமாம். இந் நன்மனமுடையவர்தாம் "சங்கற் பந்தான் பவபந்தஞ் சங்கற் பந் தீர்ந் ததுமுத்தி" என்று ஞானவாசிட்டங் கூறியவாறு பிறப்பிற் கேதுவாகிய சங்கற்ப மொழிந்து, சீவன்முத்தி நிலையினைப்பெற்று நித்திய நிரதிசய இன்புருவமாக விளங்குவர்.

சங்கற்பமுள்ள பரியந்தம் இந்திரிய வியாபாரமும்,இந்திரிய வியாபாரமுள்ளபரியந்தம் சுகதுக்கமும், சுகதுக்கமுள்ளபரியந்தம் மனக்களங்கமு மொழிவ தில்லையாகலின், சகல வனர்த்தங்கட்குங் காரணமாகிய சங்கற்பத்தை யொழிக்க முயலுதல் பெரிதும் நன்றாம். இந்திரிய வியாபாரமொழிதல் சங்கற்பமொழிதற்குச்சாதனமாயிருத்தலின், இந்திரிய வியாபாரத்தை யொழிக்கப் பெரிதும் முயலுதல் வேண்டும். இந்திரிய வியாபாரத்தை யொரே காலத்திலொழித்தல் பெரிது மருமையான காரியமாதலின், அதனைச் சிறிது சிறிதாக வொழிக்க நல்லாசிரியர் கூறியவாறு பழகுதல் வேண்டும். நாங்கருதிய வாறாக இந்திரிய வியாபாரத்தை யடக்க முயலுதலொருபோதுங் கூடாது.

இது வேண்டுமென் றொன்றை விருப்பத்தோடு பார்ப்பதாலும், இது வேண்டாமென்று மற்றொன்றை வெறுப்போடு பார்ப்பதாலும் சித்தத்தினிடத்துச் சுகதுக்கங்களுண்டாகின்றன ; அவ

ற்றால் மொத்துண்டு நாமடையுங் கலக்கத்திற்கோ அளவின்றாம். எதனையுந் துரும்புபோன்று விருப்பு வெறுப்பின்றிப் பார்க்கப் பழகிவருவோ மாயின், நாம் கண்ணிந்திரிய வாயிலாக வுண்டா குஞ் சுகதுக்கங்களால் மொத்துண்டு வதைய மாட்டோம். நாம் இருக்கும்போதும் நிற்கும்போதும் நடக்கும்போதும் பூமியில் பார்வையை நுகத்தடியளவிற்குமேற் செல்லாவா றடக்கிப் பழகி வரல் வேண்டும். இதுவே கண்ணிந்திரிய வியாபாரத்தை யொழி க்கும் வழியாம். இவ்வாறாக வொழுகுபவர்க்குக் கண்ணிந்திரிய வியாபாரம் தியான காலத்தில் மிகுவிரைவாக அடங்குவதாகும். கண்ணிந்திரிய வியாபாரத்தை யடக்குவதென்பது கண்ணைமூடிக் கொண் டிருப்பதன்றாம்.

வருக; வருக; தங்களைத் தரிசித்துப் பலநாளாயின; தங்க ளைத் தரிசித்த இத்தினம் சுதினமாம் என்றற் றொடக்கத்து வார் த்தைகளைக் கேட்குமிடத்து மகிழ்வையும், எப்போதடாவந்தாய், ஏனடா நீ இதுவரைக்கும் வாராதுபோனா யென்றற்றொடக்கத்து வார்த்தைகளைக் கேட்குமிடத்து வாட்டத்தையும் நாமடைந்து வருதல் பிரசித்தமாம். இதவார்த்தைகளைக் கேட்பதால் மகிழ் வும் அகித வார்த்தைகளைக் கேட்பதால் வாட்டமும்வருதற்குக்கா ரணம் அவ்வார்த்தைகளின் பொருளுணர்ச்சியேயாம். நாம் அறி யாத பாஷையிலொருவன் நம்மை வாழ்த்தியபோதும் வைதபோ தும், அவற்றால் நாம்முறையே மகிழ்வையும் வாட்டத்தையு மடை கின்றோமில்லை. அதற்குக்காரணம் அவன் கூறிய வார்த்தைகளின் பொருளுணர்ச்சி நமக்கில்லாமையேயாம். பல்வேறு பாடாயுள்ள சத்தங்களுள் நண்பன்கூறும்வார்த்தையும் பகைவன்கூறும் வார்த் தையும் அடங்கினவாம்; உணர்வுருவாயுள்ள நமக்கு வாழ்த்தலும் வைதலும் சம்பவிப்பதில்லை. ஒருவன் மற்றொருவனைநோக்கி வாழ் த்துவதும் வைவதும் உடம்பைக் குறித்தேயாம்; நாமுடம்புமன் று; உடம்பின் தருமங்களுமன்று; சிற்கநாநந்தவடிவ நாம்வாழ்த்து வதுபற்றி மகிழ்வையும் வைவதுபற்றி வாட்டத்தையு மடைதல் கூடாது; அவ்வாறடைந்து வந்தமைபற்றித்தான் நாம் அல்லலாங் கடலுள் மூழ்கி விருப்புவெறுப்பென்னும் முதலைவாயி லகப்பட்டு வருந்துவோமாயினோ மென்று பலமுறை சிந்தித்து, வாழ்த்தின ரையும் வைதாரையுமொப்பக் கண்டு, அவர்கள் வார்த்தைகளால் விருப்பு வெறுப்படையா திருந்தலே செவி யிந்திரியத்தை யடக்

கும் வழியாம். சப்தத்தின் பாகுபா டறிவ தொழித்துத் தியான ஞ் செய்பவருக்குச் செவியிந்திரிய வியாபாரத்தை யடக்குதல் மிகவு மெளிதாம்.

கண்ணிந்திரிய வியாபாரத்தையும் செவியிந்திரிய வியாபாரத் தையுஞ் செவ்வனே யடக்குநெறியினை யுணர்ந்தவர்க்கு மற்றைய இந்திரியங்களின் வியாபாரங்களை யடக்குவது மிகவுமெளிதாம். இந்திரிய வியாபாரங்களை யொழித்தவர்க்கு மனம் சுகதுக்க வடிவ அழுக்கால் களங்கமுறுவ தின்மையின், அம்மனம் வெளிமுகப் பட்டு விஷயாகாரமாவ தொழிந்து சிவத்தையே நோக்கி நின்று சிவாகாரமாக விளங்கும். மனம் அவ்வாறு நிற்கும் நிலையே நிர் விகற்ப சமாதி, சிவராஜயோகம், அமநஸ்கம், அசம்பிரஞ்ஞாத சமாதி யென்றற்றொடக்கத்துப் பெயர்களாற் சொல்லப்படுகின் றது. இந்நிலையைப் பெற்றவர்தாம் ஞானியரென்று கூறப்படுவர். இவர் நம்மாழ்வார், மணிவாசகப் பிரபு, ஞானசம்பந்தப் பெரு மான், திருமழிசை யாழ்வார், சிவவாக்கியர், திருவெண்காடர், சிற்றம்பல நாடிகள் முதலியவர்களாவர். இந்நிலையை முயன்று பெறுமவரே மனிதப்பிறப்பின் பயனை யடைந்தவராவர். எவ்வாற் றாலேனு மிந்நிலையை முயன்று பெறுதலே நமது முக்கியக் கட மையாம்.



## 41. கல்வியின் பயனைக் காணு முறைசோலல்.

(9-10-1911)

"யானென தென்னுஞ் செருக்கறுப்பான் வானோர்க், குயர் ந்த வுலகம் புகும்" என்று பொய்யில் புலவராந் திருவள்ளுவநாய னாரும், "நீர்நும தென்றிவை, வேர்முதன் மாய்த்திறை, சேர்மி னுயிர்க்கதன், நேர்நிறை யில்லே", என்று மயர்வறுசீர்நிலைவாய்ந்த நம்மாழ்வாரும், "யானென தென்ப திருந்திடு காறு ஞானமுறு ன்" என்று சித்தந்தெளிந்து சிவமாய் விளங்கியசிவப்பிரகாசரும், இவ்வாறு ந வேனைய பரமஞானிகளும் திருவாய் மலர்ந்தருளி யிருத்தலை நோக்குமிடத்து, வரம்பின்றித் துக்கத்தொகுதி வந்து வந்து போவதற்குக் காரணம் யானெனதென்னும் பற்றுமென்ப தினிதுவிளங்கும். எச்சில், பீளை, குறும்பி, மலம், ஜலமுதலிய வற்றிற் குறைவிடமாய் என்றுங் கழிபேரிடர் தருவதாய் நரை

திரை முதலியவற்றைக்காட்டும் வாயிலாக நடுங்கச் செய்வதா யுடைய வுடம்பின்கண் யானென்னும் புத்தியுள்ள பரியந்தம் வீடு காணி முதலிய வற்றின்கண் எனதென்னும் புத்தி நீங்குவதே யின்றாம். தானல்லாதவுடம்பின்கண் யானென்னும் புத்தி யெவ் வளவிற் கெவ்வளவு மிகுகின்றதோ அவ்வளவிற் கவ்வளவு வீடு காணி முதலியவற்றின்கண் எனதென்னும் புத்தி மிகுமென்ப தற் கொரு சிறிது மாசங்கையின்றாம். உடம்பின்கண் யானென் னும் புத்தி கற்றவர் கல்லாதவரென்னு மிருபகுதியாரிடத்தும் வேறுன்றி நிலைத்திருத்தலின், அவ்விருவரு மிவ்விஷயத்தில் ஒரு திறத்தினரா யிருக்கின்றன ரென்பது சந்தேக மற்ற விஷயமாம்.

யான் கம்பராமாயண முதலியவற்றிற் றேர்ந்த வறிவுடைய வன்; என்னைப்போன்று கம்பராமாயண முதலிய வற்றிற்குச் சொன்னோக்கு, பொருணோக்கு, தொடைநோக்கு, நடைநோக்கு முதலியவற்றை வெள்ளிடை மலைபோல் விளங்க வெடுத்துக்காட் டிப் பொருளுரைக்கக் கூடியவர் யாராவதிருந்தால் காட்டுங்கள் பார்ப்போம்; யான் படித்ததுபோன்று இங்கே யார் படித்திருக் கின்றார் என்று மேலுங் கீழுஞ் சுற்றும் பார்த் திறுமாந்து சொல் லுகின்ற வித்துவான்களு மிருக்கின்றனர்; சித்தாந்த சாஸ்திரத் திற் றேர்ந்த வறிவுடையவர் யாரிருக்கின்றனர்? நானொருவ னில் லாவிட்டால் எத்தனையோ வருஷத்திற்கு முன்னர்ச் சைவம் சீர் கெட்டுச்செத்தவிடத்திற் புல்முளைத்திருக்குமே என்றுகூறுகின்ற சைவர்களுமிருக்கின்றனர்; அஷ்டாதச ரகசியமெனக்கு முகபாட மாயுண்டு; விசிட்டாத்துவித சித்தாந்தம் நான் முனைந்து வெளிவா ராவிடத்து, யாது பாடுபட்டுப்போம்; நானல்லவோ அதனை யிப் போ துத்தாரணஞ் செய்தேனென்று பேசுகின்ற வைணவர்களு மிருக்கின்றனர்; வேதாந்த சாஸ்திரத்தின் ரகசியம் யாருக்குத் தெரியும்? அதனை யான் பலகால் நிருவிகற்ப சமாதியிலிருந்தன் றோ வறிந்தேன்; என்னைப்போன்று சமதமாதி குணங்களுடன் கூடிச் சமாதி யப்பியாசஞ் செய்பவரை இப்போதாராவதொரு வர் காட்டல் முடியுமா? நானிந்த வித்தையைக் கற்பதற்காக எவ்வளவு காலங் கஷ்டப்பட்டேன்; இந்த அருமை பெருமை யாருக்குத் தெரியும் என்று தம்மைத்தாம் வியந்து பேசிக்கொள் ளுந் தலைதடுமாற்றமுடைய வேதாந்திகளு மிருக்கின்றார்கள்; இவ்வாறே யேனைய மதவாதிகளும் தம்மைத்தாமே மேம்பாடு

செய்து பேசுகின்றார்கள். இவர்களியாவரும் பற்றறும் வழியைப் பராக்கின்றி நாடு முத்தமசிலர்கட்கு, "தன்னிலக்க ணங்கல்லார் தாமன் னியங்கற்று, ரென்னுவா ரென்கண் ணுக் கிப்புலவர்" என்று பெரியார் பணித்தவாறு யாவராகத் தோன்றுவர்? கேவலம் சடராகவன்றோ தோன்றுவர். இப்புலவர் கற்ற கல்வி யாது பயன் தருவதாம்? "கற்க கசடறக் கற்பவை கற்றபி, னிற்க வதற்குத் தக" என்று பொய்யில் புலவர் திருவாய்மலர்ந்தருளி யுள்ளதைப் படித்தும், அதன்படி நில்லாதிருப்பது பேதைமையினும் பெரும் பேதைமையல மன்றோ? இதுபற்றியன்றோ அப்பெரியார் "ஓதி யுணர்ந்தும் பிறர்க்குரைத்துந் தாமடங்காப், பேதையிற் பேதையாரில்" என்று பணித்தருளினர்.

யானென தென்னும் புத்தி யற்றுப் பரமாநந்த மயமாய் விளங்குவதற் கல்லவா கல்விகற்பது? அதனை யொழித்து யானென தென்னும் புத்தி மேனு மேலும் பெருகி வளரக் கல்வி கற்பாரது நேசம் மீளா நரகத்திற் கன்றோ ஆளாக்கும்? "கற்கக் கழிமடமஃகும்" என்று நான்மணிக் கடிகை கூறியவாறு மடமை நீங்கக் கற்றவரன்றோ கற்றவராவர்? கல்விச் செருக்கு மேலும் மேலு மிகக் கற்பதினுங் கல்லாம விருப்பதே மிகவும் நன்றாம்! தேகமின்னது தேகியின்னது என்றறியத் தக்கபுத்தி செவ்விதாக இன்மையின், கல்லாதவரிடத்து யானென தென்னும் புத்தியிருப்பது நியாயமே யாகும்? தேகமென்பது இத்தன்மையது, தேகியென்பது இத்தன்மையது என்று பலர்க்கு முபதேசிக்க முன் வந்துள்ளாரிடத்தும், யானென தென்னு மபிமான மிருக்குமாயின், அவருபதேசம் யாருக்குப் பயன்படுவதாம். யாம் ஐந்திலக்கணமும் வாசித்திருக்கின்றோம். ஆர்தாமெமக்கு நிகராவர் என் றகங்கார மதமா மீதேறி யாரவாரஞ் செய்பவருக்குள்ள செருக்கு, கல்லாதவரிடத் தில்லாமையின், அவர்கள் கற்றவரினுஞ் சிறந்தவராவரென்பதற் கியாது தடையாம்? கல்லாதவர்களோ தமக்குக் கல்வி யறிவில்லாமையைக் குறித்து மனம் வருந்தி நல்லோர் கூறு மின்மொழியின்படி நடந்து நற்கதியடைய முயலுகின்றனர்; கற்றவரோ ; எம்மின் நல்லோ ரெங்குளர்; யாங் கூறியவாறன்றோ பிறரொழுக வேண்டும்; பிறர் கூறியவாறு யாமொழுகுவது? நன்று நன்றென்று கூறி நல்லோரைப் பழிக்கின்றனர். இவாது கல்வி யறிவைப்பற்றி யென்னென்றுரைப்ப

தாம்? (பாகவதம் 5-வது ஸ்கந்தத்தில்) ஜடபரத மகா முனிபுங்கவர் ரகூகணராஜனுக்கு நன்மொழிகளா லிங்கிதமடைய "ஈனுலகிடாற லினிது கொண்டநீ, யானெனுஞ் செருக்கினே டிராக மாதியாங், கானுறை குறும்புகள் கடிந்து தீங்கற, வூனமின் ஞானமாமுலகுங் கோடியால்" என்று கூறியவாறு தத்துவஞானம் பெற்றவ ரன்றோ யானெனதென்னுஞ் செருக்கற்று நடுநிலைநின்று ஞாநாமிருதமுண்டு ஞானிகளாவர். இவரன்றோ காமாதியற்ற கண்ணியராவர்?

கல்வியறிவால் யானெனதென்னுஞ் செருக்ககலா திருப்பதற்குக் காரணம் நல்லோரை யடுத்துக் கற்று, அவரோடு பலகாலும் பழகாமையேயாம். அவ்வாறு செய்யாமையாற்றான் அவர்க்குக் கல்வியறிவு மிகுந்தோறும் யானெனதென்னுஞ் செருக்குப்பெருகி வருகின்றது. கல்விச் செருக்கால் தற்போத மேலிட் டிருப்பவர்தாம் எம்மை நிகர்ப்பா ரொருவருமிலர், யாம் எந்தவித்தையிலும் வல்லே மென்று தருக்கி, இதாகித ம்றியாது பேசுகின்றனர். இவர் தம்மைப்பற்றியன்றோ நமது தாயுமான மூர்த்திகள் "கல்வியென் முத்திதருமோ" என்று பணித்தருளினர். கற்க வேண்டியவற்றி னளவையும், நமதாயுளினளவையும், நமக்கிடையிடையே யுண்டாகுந் துன்பத்தினளவையுஞ் சிறிதாகித்துப்பார்ப்போமாயின், நாம் கற்கவேண்டியன அளவிறந்தன; அவற்றுள், மிகச்சிறிதும் நமதாயுட்காலத்துள் முற்ற வுணர்தல் முடியாதென்பது நன்கு விளங்கும். ஒருநாட் பகலில் முகபாடமாக ஐயந்திரிபற்ற பொருளுணர்ச்சியோடு கற்றகல்வி யன்றிரவே மறந்து விடக்கூடியநிலைமையினதா யிருத்தலைச் சிறிது உட் பார்வையாற்சிந்தித்து நோக்குவோர்க்குக் கல்விச்செருக்குண்டாவதின்றாம். கல்விச் செருக்கற்றவரே தத்துவஞான வாயிலாக யானெனதென்னும் பாழ்ஞ் சமுத்திரத்தி னின்றுங் கரையேறிப் பரமாநந்த வடிவினராக விளங்குவர்.

" பாத மறைவெவ் வாலினுக்குப் பாலு செய்யும் புகட்டிடினும், வாதை பண்ணும் வல்விடமே வளரு மாபோன் மறநாளும், வேத மவையோ ராயிரமும் விளங்குங் கலையுந் தசக்கிரீவ, னேதவோதப் போதங்கெட் டபோத மான தோங்கியதே" என்றிராமாயணங் கூறுவதைச் சற்று மனத்தி லவதானித்து நோக்கிப், படிக்குந்தோறும் இராவணனுக்கு அபோதம் (அஞ்ஞானம்) பெருகி

வந்ததுபோ லாகாமல், படிப்பை யடக்க முண்டாகப்படித்து,படிப்பினது சொரூபத்தைப் படிப்பின் வாயிலாக அறிந்து தற்போத மற்றுத் தடையற்ற ஆநந்தம் பெற்றவரே யுத்தமராவர்.



## 42. மனத்தை யடக்கு மாண்பினைக் கூறல்.

(16-10-1911.)

நாடக சாலையில் நடிக்கு முத்தி யோகத்திலிருப்பவன் சமயத்திற் கேற்றவாறு பல பல வேடங்கொண்டு நடிப்பது போன்று நாமும் சமயத்திற் கேற்றவாறு பல பல வேடங்கொண்டு நடித்து வருகின்றோம். நாம் ஏன் பலவாறாக நடிக்க வேண்டு மென்பது பற்றிச் சிந்திக்கின்றோ மில்லை. நம்முடைய மனம் சுகசாதனமாகப் பெற்றனவற்றை யற்பமாகவும், பெறாதன வற்றை மகத்தாகவுங் கருதி, பெற்றன வற்றைப் பாதுகாப்பது பற்றியும் பெறாதனவற்றை யெவ்வா றடையலா மென்பது பற்றியும் சிந்தித்து, ஒரு கணமேனு மொருநிலைப்படாது கலக்க முறுவதனாற்றான், அது பற்றி நாம் நோக்குவதே யில்லை; அதனாற்றான் நாம் நாடக சாலையில் நடிப்பவனைப் போன்று, சமயத்திற் கேற்றவாறு பேசுதல் முதலிய வற்றைச் செய்ய முயல்கின்றோம். இங்ஙனம் பலவாறாக நடித் தொழுகுவதற்குக் காரணமாக வுள்ள மனத்தைப்பரமேசுவரனது பாதார விந்தத்திற் செலுத்தி அறிவு, சமபாவனை, சந்தோஷமென் பனவற்றை யடைந்து, உபசாந்த நிலையிலிருப்போமாயின், நாம் மனத்தின் வயப்பட்டு நடிப்பதொழியும் வழியினைப் பெற்றுச் சிதைவற்ற சிதாநந்த வடிவமாக விளங்குவோம்.

காமக் குரோத லோப மோக மதம் நாணம் பயம் அகங்கார முதலியவற்றின் வடிவமாக, அடிக்கடி வாசனைவசத்தினால் மனம் பரிணாமத்தை (திரிவினை) யடைந்து கலங்குவதை நாம் மனத்தின் வயப்பட்டு, அதன் வழியே யொழுகுங்காறு மொழித்தல் கூடாமையின், விஷய வியாபாரம் பற்றிக் கலக்கமுறும் மனம் நமது வழியே வருதற்குரிய சாதனத்தைத் தக்காரிடத் தடைந்து பெற்று, அவர் கூறியவாறொழுகுத லத்தியாவசியகமாம். "மனத்தை யடக்க மனந்துணை யாகும்" என்று பெரியார் கூறியவாறு, மனத்தை மனத்தாற்றான் வசப்படுத்தல் வேண்டும். அடிக்கடி

காமக்குரோத முதலியவற்றின் பரிணாமத்தை யடைந்து கலங்கும் மனத்தை ஒரு முகப்பட்ட மனத்தினாற் கெடுக்கமுயலுதல் மனிதரது முக்கியக் கடமையாம். எவ்வளவிற் கெவ்வளவு மனம் தியானப்பியாசத்தால் ஒரு முகப்பட்டு, உபசாந்த நிலையினைப் பெறுகின்றதோ அவ்வளவிற் கவ்வளவு அது காமக்குரோத முதலியவற்றின் பரிணாமத்தை யடைவதொழியும். காமக்குரோதமுதலியவற்றின் பரிணாமத்தை யடைந்து கலங்கும் மனத்தைத் தியானப்பியாசத்தின் மிகுதிப்பாட்டாற் கெடுத்து,உபசாந்த நிலையில் மாறாதொரு தன்மையாக விளங்குகின்றவர்கள் பெற்ற பொருளைப் பற்றியும் பெறாத பொருளைப் பற்றியுங் களிப்பையுங் கவலையையுமடைவதில்லை யாகலின், அவர்கள் நாடகசாலையில் நடிப்பவனைப் போன்று நடிப்பதில்லை. அந்நிலையினைப் பெற்றவர்தாம் மனத்திற்கும் மனோ விருத்திக்கும் (எண்ணங்கட்கும்)சாட்சியாய், யானெனதென்னு மிருவகைப் பற்று மகன்று "சாந்தமாகிச் சிதம்பரமாய்ச் சமமாய் நொய்தா யான்மாவாய், ஏந்து சத்தி யளவிலதாம்" சிவமாக விளங்குவர்.

நாம் மனத்தின் வஞ்சகச் செயலை யுணர்ந்து, அதனை நம் வசப்படுத்தி யடக்கி யாளுதல் வேண்டுமென்று தக்கார் கூறியவாறாக, இந்திரியங்களை விஷயங்களிற் செலுத்தாமல்,மூவா முதல்வனாய், மும்மூர்த்தி சொரூபனாய், முப்பாழுங் கடந்தோனாய், அப்பாழுமற்றானாய், ஆநந்தவடிவனாய், ஆவரணமற்றவனாய் விளங்கும் தேவ தேவனைச் சிந்திக்கக் கருதி யோரிடத்துத் தனியே யுட்கார்ந்து தியானஞ் செய்ய ஆரம்பித்த போதுதான் மனம் தனது பூரண வாற்றலைக்காட்ட முன் வந்து நின்று, 'என்னையடக்க நீ முயலுகின்றமையால், உன்னை நானடக்குகின்றேன்; என்னை உன்னாலடக்க முடியுமோ' என்றெதிர்த்து நின்று நம்மைத்தியானஞ் செய்யாவாறு கெடுக்கின்றது. அஃது அங்ஙனங் கெடுக்கின்றமை, நாம் நம தனுபவத்திற்கு வந்த விஷயங்களுள், எதையோ ஒன்றை நினைத்துத் தியானத்திலிருந் தெழுவதால் நன்கு விளங்கும்; தியானஞ் செய்கின்றோமென் றுட்கார்ந்து, அது செய்வதொழிந்து, வேறெதையோ நினைத்து வருவதைப் பலமுறையுஞ் சிந்தித்துப் பார்த்து, மனத்தினது வல்லமையைப் பையப் பையக் கெடுக்க வேண்டுமேயன்றி ஓரோ காலத்திற் கெடுப்ப தொருவாற்றாலு மமையாது.

தியானஞ் செய்ய முயலுகின்றவர்கள் முன்னர்த் தியானத்தின் சொரூப மித்தன்மையது, தியானிக்கின்றவன் சொரூப மித்தன்மையது, தியானிக்கப் படுவதன் சொரூப மித்தன்மைய தென்று செவ்விதாகச் சற்குரு மூர்த்தியின் வாயிலாக வுணருதலத்தியாவசியகமாம். இம்மூன்றனது சொரூபங்களை யையந்திரிபின்றியறிந்து, சற்குரு மூர்த்தி கூறிய சத்துபதேசத்திற் பூரண விசுவாசம் வைத்துத் தியானஞ் செய்பவர் தவறாது தியானத்தின் பயனாகிய சிதாநந்த நிலையினை யடைந்து, உலகாடம்பர வொழுக்க மகலுவரென்பது சாஸ்திரங்களின் றாற்பரியமா யிருத்தலின், நாம் அடியார் போன்று நடிப்பதொழிந்து, உண்மை யடிபவராய்ப் பரமேசுவரனுக்குப் பாங்கானவாறாகத் தியானஞ்செய்து, மனமென்னு மாட்டை வசப்படுத்தமுயலுதலையே மேற் கொள்ளுதல் வேண்டும். இவ்விஷயத்திற் பராமுகமாக விருந்து, உலகாடம்பர நடனசாலையிற் சமயத்திற் கேற்றவாறாக நடித்துப் பொருளைத் தேடிப் போகத்தை யனுபவித்தலையே மனிதப் பிறப்பின் முக்கியமாய பயனென் றிருப்போமாயின், நம்மை நாமே வஞ்சிக்குங் கள்ளராவோம். நம்மைநாம் வஞ்சிப்பதுபற்றி யன்றா நமக்கிங் கோயாத துக்கம் மாறாது வருகின்றது.

மங்கை யொரு பங்கிலுறை மகாதேவன் மாட்டை வாகனமாகக் கொண்டிருப்பதையும், அதையே கொடியாகக்கொண்டிருப்பதையும் சிறிதாகித்து நோக்குவோமாயின், இராசோகுண தமோகுண வடிவ வசுத்த மனத்தை யடக்கி, சத்துவகுண வடிவ சுத்த மனத்தை மேம்பாடாகக்கொள்ளுதல் வேண்டுமென்ப தினிது விளங்கும். “மனமென்னு மாடடங்கிற் றாண்டவக் கோனே-முத்தி, வாய்த்ததென் றெண்ணேடா தாண்டவக் கோனே” என்று பெரியார் பணித்திருத்தலால், மனமாகிய மாட்டைத் தம் வசமாக்கி, அதைத் தம்வழியே செல்லுமாறு செய்பவருக்கு முத்திநக ரெட்டிப்பிடிப்பது போன்று சித்தியாம். பரமேசுவரன் ரிஷபத்தை (மாட்டை) வாகனமாகக் கொண்டிருப்பது அசுத்த மனத்தையடக்கி யாளவேண்டு மென்பதை யறிவிக்குங் குறியாம்; ரிஷபத்தைக் கொடியாகக் கொண்டிருப்பது சுத்தமனத்தை மிகுதியாகக்கொள்ளல் வேண்டு மென்பதை யறிவிக்குங் குறியாம். இராசோகுண தமோகுணவடிவ மனத்தைப் பிரயத்தன பூர்வகமாகவடக்கி,சத்துவகுண மனத்தையுடையவரா யிருப்பவர்

தாம் முன்னை வினையிரண்டையு முதலோடு (அஞ்ஞானத்தோடு) கெடுக்குந் தன்மையராவர். அவர் நிரதி சயாநந்தவடிவ வெள்ளம் பெருக, அஞ்ஞான வடிவ இருளைக் கெடுத்து, துன்பத்தின் தொடர்பை யொழித்து விளங்கத், தியானஞ் செய்தலை யுறுதிப் பாடாகக் கொண்டு, உலகாடம்பரங்களுள், ஒருசிறிதேனுங்காட்டி நடிப்ப தொழிந்து, பிறப்பென்னும் பெருங்கடலை நீந்திக் கடத்தலையே பெரும் பயனாகக் கருதியிருப்பர். அவ்வாறு கருதியிருக்கும் உத்தம மனிதராது சேவை கிடைப்ப தரிதினு மரிதாம்.

உண்டி, உடை உறையுள் முதலியவற்றால்வருஞ்சுக மிகு விரைவில் மாறுந்தன்மையதாக விருத்தலின், அது பெறுவதொழிந்து, நித்திய நிரதிசயாநந்தம் பெறுவதற்கு முயலுதல்பெரிது முத்தமாம்.



43. மறப்பினை யொழிக்கும் வழியினைக்கிளத்தல்.

(23-10-1911)

நாம் எத்தனையோ முறை நல்லோரை யடுத்து நன்மொழிகளைக் கேட்டு, கேட்டவாறு நடக்க வெண்ணியிருத்தல்கூடும். எண்ணியவாறாக வொழுகுகின்றோமோ வெனின், அதுதா னில்லை. எண்ணியவாறாக வொழுக முயலும்போ துண்டாகுந் தடைகட்களவே யின்றாம். அத்தடைகளுள் மறப் பென்னும் பகையே தலைமை யுடையதாம். அம்மறப் பென்னும் பகை முன் வந்து நிற்கும் போது நாம் அதன்வசப்பட்டு, விரைவிற் பராமுகப்பட்டு, பரகதிக்கு விலக்கான செயல்களைப் புரிய முயல்கின்றாம். நல்லோர் நலமுறக் கூறும் நன் மொழிகளை நாம் கவனியாதிருத்தற்குக் காரணம் உண்டி,உடை,உறையுள் முதலியவற்றின் மீதுள்ளமோகமேயாம். அம்மோகங்கழிப முபன்றாற்றான் மறப்பென்னும் பகையை வஞ்சித்து வதைத்தல் கூடும். உண்டி, உடை, உறையுள் முதலியன பரகதி யடைதற்கு வாய்ப்புடைய சாதனமாயுள்ள மானுட உடம்பிற்குச் சாதனமா யுள்ளனவென்றுணராமல், 'அவற்றைப் பெறுதலே பரகதியாமென்று கருதியிருப்புதாற்றான் நாம் மறப்பென்னும் பகையின் வசப்பட்டுப்போகின்றோம். "மோகத்தைமுனி" என்று நமது ஞானத்தா யருளியிருப்பதை நாம் எத்தனைமுறையோ சின்னஞ் சிறு பிராயத்திலிருந்து வாசித்திருக்கின்றோம்;

வாசித்து மென்பயன்? மோகத்திற்கு வடிவம் "திரமறு சக மெய்யென்றுந் தேகநா னென்று முள்ளே, விரவிய மோகந் தானே விபரீத மென்பர் மேலோர்" என்று மேலோர் கூறியதை நன் குணர்ந்து, உலக மென்றுமழியாத தென்னும் புத்தியும், உடம்பு நானென்னுஞ் சொல்லின் பொருளான ஆத்மா வென்னும் புத்தியும் ஒழிந்த விடத்துத்தான், மோகமொழியும். மோக மொழிந்த விடத்து மறப் பென்னும் பகை வருதற்கிடனின்றித் தொலையும்; அஃதொழியவே, நல்லோர் கூறிய நன்மொழி மறவாது நிற்கும்; அது நின்றபோது தான், பிறவாமைக் கேதுவாகிய சாதனத்தை மேற் கொண்டொழுகி, பிரஹ்மாநந்தப் பெருஞ் சாகரத்தில் மூழ்கிப் பேதமற்ற வாழ்வைப் பெறுதல் வாய்க்கும்.

மறத்தல் இருவகையாம்; ஒன்று பந்தம் பந்தகாரண முதலியவற்றை மறத்தல்; மற்றொன்று உலகம், உண்டி, உடை, உறையுள் (வீடு) முதலிய வடிவால் சுகம், அல்லது சுகசாதன மென்பதை மறத்தல். பந்தம் பந்தகாரண முதலியவற்றை மறத்தல் துன்பமேதுவாயும், உலகம் உண்டி முதலிய வடிவால் சுகம், அல்லது சுகசாதன மென்பதை மறத்தல் இன்பமேது வாயும் இருத்தலின், மேலே மறப்பென்னும் பகை யென்றது பந்தம் பந்த காரணமுதலிய வற்றை மறத்தலாம். அம்மறப்பென்னும் பகையை யொழித்தற் பொருட்டுத்தான் தத்துவ வித்துக்களை (உள்ள துணர்ந்தவரை) யடுத்துத் தத்துவநூ லாராய்ச்சி செய்வது. உலகம் உண்டி முதலிய வடிவால் சுகம் அல்லது சுகசாதனமா யிருக்கின்ற தென்னும் மயக்க புத்தியை யொழித்தலே இங்கு மறப்பென்னும் பகையைக் கெடுத்தலாம். இம்மயக்க புத்தி யொழிந்தவர் தாம் அல்லல் (துன்பம்) கட்கெல்லாம் ஆதாரமாயுள்ள பிறப்பினின்றும் நீங்கி, இறப்பதென்பதென்று மில்லாத வின்ப நிலையைப் பெறுவர். பயன்படு நாளாகாது காலங்கழிவதைக் கருதாமலும், இறக்கும் நாள் எதிர்த்து வருவதை யெண்ணாமலும், செந்நெறி சென்று திருவருள் பெற்றுச் சிவமாய் விளங்கிய திருவள்ளுவ நாயனார் முதலியோர் கூறிய திருவாய் மொழிகளைச் சீர்தூக்கிப் பாராமலும், உண்டி, உடை, உறையுள் முதலியவற்றையே உயிரெனக்கருதி யிருப்பவருய்யுநெறி கண்டொழுகுவது எவ்வாறும்?

சிலர் நல்லோர் கூறும் இன்மொழியின்படி யொழுகுவார் போன்று காணப்படுகின்றனர். அவர் தமக் குரிமையாயுள்ள

பொருள்களுக்குக் கெடுதி நேரிட்ட விடத்தும், கெடுதி நேரிடுமென்றறிந்த விடத்தும் பதை பதைத்துத் துடி துடித்துப் பெருமூச்சுவிட்டுப் பெரிதும் வருந்துகின்றனர். இவ்வாறிருப்பவர் எவ்வாறு பிறவாமைக் கேதுவாகிய சாதனத்தை மேற்கொண்டவராவர்? உலகம் ஓக்காள வடிவமென் றுணர்ந்து, உலகத்தி லொரு பற்றேனு முண்மையாகவிராது, பரமாநந்தப் பெரு வெளியில் பராமுகமின்றி மனத்தைப் பற்றுமாறு செய்திருப்பவ ரன்றோ நல்லோர்கூறிய நயமொழியின்படி நடப்பவராவர்? சிலர் துறவறத்தை மேற்கொண் டில்லறப்பற் றில்லாதவர் போற் காணப்படினும், தமக்குரிய தண்டு, கமண்டல முதலிய வற்றிற்குத் தீங்கு நேரிடுமென்று பிறர் கூறக்கேட்ட போதே யுடல் வெயர்த்து முகங்கருகி யுன்மத்தங் கொண்டவர்போ லாகின்றனர். ஒரு தண்டு, அல்லது ஒரு கமண்டல முதலிய வற்றிற் பற்றறுது விட்டேசப (கலக்க) மடைகின்றவர் எவ்வாறு துறவிகளாவரோ? யான் எனதென்னும் பற்றிரண்டு மற்றவரன்றோ பரமாநந்தப் பெருஞ் செல்வமடைவர்? இவரியாவரும் "உவக்கும் வீடே யெவ்வளவிற் றுலகநடையே யுயர்ந்ததென, நிவக்குமறுதி யார்செய்வோ னெடும்போ கத்திற் செல்பவனும்" என்று பெரியார் கூறியதற் கிலக்காக விருக்கின்றன ரென்பதற்கு யாது தடையாம்?

திரிசிரபுரத்திற்கடுத்துள்ள தொருகிராமத்தில் வசிப்பவருள் ஒரு குடியானவன் தனதுமனைவி மக்களுடன் சுகமாக வாழ்ந்து வந்தான்; அவனுக்குச்சில கால் நடைகளு முண்டு; விளை நிலங்களுமுண்டு. அவனியல்பாகவே யாவரிடத்தும் பணிவுடையவனும் இன்சொல்லுடையவனுமாக விருந்தான்; அவனையக்கிராமத்திலிருப்போர் சாமியாரென் றழைப்பர்; அவனதுமனைவி யெப்போதும் அவன் வார்த்தைக்குமாருக நடவாது மனமொத்து வாழ்ந்து வந்தனள். அச்சாமியா ரென்பவன் எப்போதும் ஏதாவதொரு வேதாந்த புஸ்தகத்தை அஸ்த பூஷணமாக வைத்திருப்பான்; துறவிகளிடத்து மிகு பிரியங் கொண்டு, அவர்களிருக்கு மிடத்திற்குச்சென்று அவர்க்கு வேண்டுவன வற்றைக் குறிப்பறிந்து கொடுத்துவருவான். இங்ஙனமாக அவனிருக்குங்காலத்தில் அக்கிராமத்தில் ஒரு பரமசாது வந்துசேர்ந்தார்; அவரெப்பொழுதும் அறிவிற் சுகசமாதி கூடுதலிலேயே கருத்துடையவர்; ஆவஸ்சியமாகச் செய்யப்படுவனவாய பாஹியவியவகாரங்

களைச் செய்வதே யல்லாது மறந்தும்வேறுவியவகாரஞ் செய்யா திருந்தனர். இத்தன்மை யுடையபரமசாது, தன்கிராமத்திற்கு வந்து சேர்ந்ததையறிந்த வச்சாமியா ரென்பவன், அவரைத் தஞ்ச மாகவடைந்து, பணிவாக நடந்து, அவரிடந் தத்துவோபதே சம் பெற்றுக்கொண்டான்; தத்துவோபதேசம் பெற்றுக்கொ ண்ட பின்னர், அவன் துறவறத்தை மேற் கொண் டொழுகவெண் ணி, தனதுமனைவியினிடத்து, அடிக்கடி யான் துறவியாகப்போகி ன்றேன்; துறவியாகப் போகின்றேன்; இச்சம்சாரம் மாகாப் பொல்லாதது; இதைச் சுட்டெரிக்கவேண்டும் என்று கூறிவருவா னுன். இவ்வாறவன்கூறிவருவதை அவன்மனைவி கவனியாதவள் போன்றிருந்தாள். ஒரு நாளவன் தன் மனைவியை நோக்கியான் துறவியாகப்போகின்றேன் என்று கூறுவதை நீ கவனியாதிருக் குங் காரணம் யாது? யானின்றையதினம் துறவியாகப் போகின் றேனென்று கூறினுன்; அதற்கவள் தாங்கள் துறவியாகப் போ வது பற்றி எனக்கியாதோ ராட்சேபமுமின்று; உண்மைத் துறவு பூண்போர் பிறரிடத்துச் சொல்லித் துறவு கொள்வதில்லை; இது பற்றி யென் தந்தையாரிடத்துக் கேள்விப்பட்டிருக்கின்றே னெ ன்று கூறினுள்; உடனே அவன்தன் வீட்டை விட்டு நெடுகப் போய்ப் பகல் 15-நாழிகை (1-மணி) பரியந்தம் தனியாக ஓரிடத் திருந்தான்; பசியதிகமா யுண்டானதினுல், ஒன்றுந் தோன்றாதுக ளைத்திருந்து மனைவியுடனேன் வைராக்கியம் பேசி வந்தோம்? ஒரு நாளுணவி லொருபோதுணவைச் சகித்தற்கியல் பில்லாத நாமா சந்நியாஸங்கொண்டு சாதிக்கப்போகின்றோ மென்றுபலவா றுகவெண்ணி, மாலைப்போது மந்தை வெளியினின்றுந்தனது வீட் டிற்குப் போகும் கால்நடைகளுள் ஒன்றன் வாலைப்பிடித்துக்கொ ண்டு வீடு போய்ச் சேர்ந்தான். அப்போதவனை நோக்கி அவன் மனைவி ஏன் வந்தீர்; காட்டுக்குப் போங்களென்று பரிகாசமாய்ப் பேசினுள். அதற்கவன் நானு வருவேன்; இக்கன்றுக்குட்டியன் றோ என்னை வேண்டியிழுத்துக் கொண்டு வந்ததென்று கூறி, பசி நோய்முதலியவற்றைச் சகித்து, பொறுமையைப் பூஷணமா கக் கொள்பவர்தாம் துறவறத்தை மேற்கொண் டமைதல் கூடு மென்றுதெளிந்து வாளா விருந்தானென்பதொரு கதை. இக் கதையால் வைராக்கிய முடைமை பெரியார் கூறியவா றொழுகு வதற்குப் பரமசாதனமா மென்பதினிது விளங்கும்.



## 44. வாழ் நாள் பயன்படுமோர்க்கங்கூறல்.

(30-10-1911)

"வீழ்நாள் படாமை நன்றாற்றி னஃதொருவன், வாழ்நாள் வழி யடைக்குங் கல்(செய்யாது கழியுநாளுள வாகாமலொருவன் அறத் தைச் செய்புமாயின், அச்செயல் அவன் உடம்போடு கூடுநாள்வ ரும் வழியை வாராமலடைக்குங்கல்லாம்)" என்று தெய்வப் புல மைத் திருவள்ளுவநாயனார் திருவாய் மலர்ந்தருளி யிருத்தலைச் சிறிதுற்று நோக்குவார்க்கு இனிப் பிறவாதிருத்தற் கேதுவாகிய சாதனத்தை விரைந்து மேற்கொண் டப்பியசித்தல் வேண்டு மெ பது நன்கு விளங்கும். வீட்டிற்கேதுவாகிய சாதனத்தை மேற் கொள்ளுவதிற் பராமுகமாகவும், பந்தத்திற் கேதுவாகிய சாதன த்தை மேற்கொள்ளுவதில் விழிப்பாகவும் இருப்பதாற்றான், நாம் நல்லாரியாவரும் நன்குறப் போற்றும் நாயனார் வாக்கைக்கவ னியாதிருக்கின்றோம்; கவனித்திருப்போமாயின், பந்த சாதன மாயுள்ள வற்றைப் பற்றுவதினின் றகன்று முத்தி பெறுதவற் குரிய சானத்தைமுயன் றேற் றிருப்போம். மறப்பென்னும் பகை வன்நம்மை மறைந்து நின்று வஞ்சித்து வருவதை நாம்சிந்தித்து நோக்குகின்றோ மில்லை. நோக்குவோமாயின், பொய்யாமொழியா கிய திருக்குறளின் மெய்ப்பொருளினைப் போன்னே போற் போ ற்றி முன்னுக்கு வருமாறுமுயன்று முத்திக்குரிய சாதனத்தைப் பெற்று நித்திய நிரதிசயாநந்த வெள்ளத்தில் மூழ்கி, பாசமென் னுமாசைப் பற்றறக் கழுவி, சீவன் முத்தியென்னுஞ் சிறந்த நக ரையடைந்து சிதாநந்த வடிவமாக விளங்கிச் சீர்பெற்றிருப்போம்.

"தேசிகன்சொற் பிழையாம லனுட்டிக்கிற் பையப்பையத் திபக்க நீங்கிப், பேசியசென் மத்தாத லடுத்தசில பிறப்பிறு லர்தல் பேறாம்" என்று, ஞானவாசிட்டங் கூறியவாறு சற்குரு மூர் த்தி திருவாய்மலர்ந்தருளியதைப் பூரணவிசுவாசத்தோடு மேற் கொண்டு, வஞ்சப்புலனைத் தன்வசமாக்கி வாயுபோன்றோயாது சலனமுறும் மனத்தை அசுத்தம் துக்கம் அநித்தமாயுள்ள விஷய வாசனை மேலும் மேலும் பெருகியோங்கா வண்ணமடக்கி, சோக மோகங்களின் தொடர்பை யொழித்து, ஆகாயம்போன்று சூக்குமமாய் வியாபகமாய் அசங்கமாயுள்ள பரமேசுவர பக் தியைப் பாங்காகச் செய்துவந்தாற்றான் உலக நாட்டங்குறைந்து,

உணர்வுநாட்ட மிக்கு மறப்பென்னும் பகையின் வஞ்சகச்செயலை நெஞ்சகத்தில்லாவா றொழித்துச் சமரசசுபாவ நிலைபெற்றுய்தல் இப்பிறப்பிலாவது இனிவருஞ் சில பிறப்பிலாவது கூடும். தன்னிடத்து வைத்தபொருளினளவை இவ்வளவென்று மாறுபடாது வரையறுத்துக் காட்டுந் துலாக்கோலின் முள்ளையொத்து அறிவறியாமை யென்பனவற்றுள், ஒன்றன் பக்கமுஞ் சாயாது நிலைத்தமனத்தின் அனுக்கிரகம் எவர்க்குண்டாகின்றதோ அவர்தாம் உபசாந்தநிலையினைப்பெறுவதற் குரியவராவர்? உபசாந்தநிலையெளிதிற் கிடைப்பதன்றாகலின், அதுபெறுவதற்குரிய சாதனம் மனம் அறிவறியாமைகளின் வசமா யல்லலுறாம லொருமுகப் பட்டிருத்தலாம். மனமிங்ஙன மொருமுகப்பட் டிருப்பதுதான்தவத்தின் பூரணவடிவமாம். மன மொருமுகப்பட்டுள்ள போது செவி முதலிய விந்திரியங்கள் கேட்டல் முதலிய வியாபாரங்களொழிந்துபோதலின், மனமொருமுகப்படுதலே இந்திரியங்களொருமுகப் படுதற்குமேதுவாம். இதுபற்றித்தான் ஞானநூலொன்று "மனவிந்திரியங்களி னேகாக்கிரமே (ஒருமைப்பாடே) தவசு" என்று கூறுகின்றது. இத்தபசுடையவர்தாம் உலகநாட்டங் குறைந்து, உணர்வு நாட்டமிக்கு, மறப்பென்னும் பகையைவதைத்து உபசாந்தநிலையினை யெய்துந் திறத்தினராவர்.

அறிவறியாமை யாவது இங்கு நினைப்பும் மறப்புமாம். நினைப்பு மறப்புள்ள பரியந்தம் நமது நிஜவடிவதரிசன முண்டாவதின்மையின், நினைப்பு மறப்பென்னு மிரண்டையுங் கெடுக்க முயலுதல் அத்தியாவசியகமான கடமையாம்; உலகநாட்டமுள்ளளவும் நினைப்புமறப்பென்பன வொழிவனவன்றாகலின், உலகநாட்டத்தை யொழிக்குஞ் சாதனத்தை மேற்கொண் டொழுகுதல் வேண்டும். உலகநாட்ட மொழிதற் கேது தத்துவவாராய்ச்சியும் தியான சமாதிகளுமாம். தத்துவ வாராய்ச்சியும் தியான சமாதிகளும் ஒருங்கே யுடைய புருஷர்கள்தாம் உலக நாட்டமொழிந்து, அது வாயிலாக நினைப்பு மறப்பற்று, அதுவாயிலாகத் தமது நிஜவடிவ தரிசன முண்டாகப் பெற்று, அது வாயிலாகத் தானே தானாக விளங்கும் நிலையினைப் பெறுவர். தானே தானாக விளங்கும் நிலையினைப் பெறுவதற்கேதுவான சாதனங்களைச் சற்குருநாதன் வாயிலாகப்பெற் றப்பியாசஞ் செய்யாதவர்கள் பிறந்தும் பிறவாதவர்களாவ ரென்பதற்குத் தடை யாதுண்டாம்?

மிகவரு காமாதிகளால் விகார மடைந்து சலனமுறும் மன முடைய நாம், தத்துவ ஆராய்ச்சியும், தியானசமாதிகளும் செய்ய முயன்று அம்மனச்சலனத்தை யொழிக்கின்றோமில்லை. தத்துவ ஆராய்ச்சியும் தியான சமாதிகளும் செய்தாலன்றோ நாம் மறப் பென்னும் பகையைவெல்வதுவாயிலாக நினைப்பென்னும் பகையை யும் வென்று நிஜாநந்த நிலையினையடைதல் கூடும். நினைப்பும் மறப்பும் போல நமக்குப் பெரும் பகையாயுள்ளது பிறிதொன் றின்றாம். "சொருபம் விட்டகலன் மோகமாம் வேறு சொல்லிட முன்புபின் பில்லை, யொருபொரு ணினைவை யொழித்துமே லப்பா லொருபொரு ணினைவுறி லந்த, விருபொரு ணடுவு ணினை வற விருக்கு மிதுசொரூ பத்தியல்" என்று மேலோர் கூறியதைச் சிந்தித்துணர்ந்து, நினைப்பையும் மறப்பையும் வெல்ல முயலுகின் றவரன்றோ உத்தமருள், உத்தமராவர் ?

1. தத்துவ ஆராய்ச்சியாவது ஆத்மாவினியல்பையும், அநாத் மாவி (ஜடபதார்த்தங்களி) னியல்பையும் தத்துவத்தின் றலை நின்ற உத்தமரது வாயிலாக வுள்ளவாறு விசாரித் தறிதலாம்; 2. உதயாத்தமன மின்றியுள்ள பரம்பொருளை யொற்றுமையுறப் பாவிப்பது தியானமாம்; 3 அப்பாவனை கழன்று பரமாநந்தப் பர வெளியாய் விளங்குவது சமாதியாம். இம்மூன் றப்பியாசங்களை யுங் கிரமமாகச் செய்து வருபவர்க்கு மனச்சலனம் மிகுவிரைவாக ஒழியும். மனச்சலன மொழிவதற்குச் சாதனமாய இம்மூன் றும் சற்குரு மூர்த்தியி னருளுடையார்க்கு மிகவெளிதாகச் சித் தியாம். மரணம் வருநாள் இந்த நாளென் றுணருதற் கருமையா யிருத்தலின், ஒவ்வொரு நாளையும் மரணம் வரும் நாளாகவே பாவித்து, தத்துவ ஆராய்ச்சியும் தியானசமாதிகளும் பெற முயன்று வந்தாலன்றோ நாம் நமது வாழ்நாளை நன்னாளாகக் கழிப்பவராவோம்.

இல்லற ஞானிகளுள் பெருங்கீர்த்தி பெற்று விளங்கிய ஜனக சக்ரவர்த்தி ஒருநாள் தமது பரிவாரங்களாகிய மந்திரி முதலாயி னோர் புறம்பே நிற்க, சிங்கார வனத்துட் சென் றுலாவிவரும் போது, சித்தர் கூட்டம் "அறிவானு மறிபொருளுங் கூடிய கூட் டரவிலெழு மறிவா நந்தம், பிரியாத வான்மதத் துவத்தெழு ந்த தாமதனைப் பேணல் செய்வாம்" என்றற் றொடக்கத்தனவா

கப் பாடுங்கீதத்தைக் கேட்டு, உலகபோகத்தி லுவர்ப்புற்றுத் தெளிவடைந்து, இல்லஞ் சென்றுசமாதிகூடி நிருவிகற்ப சொரூப மாக விருந்தார். இவ்வாறிருந்த அச்சக்ரவர்த்தி யிடையிடையே தோன்றுஞ் சந்தேகத்தை நீக்கிக் 'கொள்ளுமாறு யாக்ஞவல்கிய ரென்னும்முனிசிரேஷ்டரைத் தஞ்சமாகவடைந்து, தத்துவ விசா ரஞ் செய்து வரும்போது, உடனிருந்து கேட்டு வரும் முனிவர் கள் ஷைமுனிசிரேட்டர்மீது அசூயையடைந்து, இவர் சக்ரவர்த்தி யை நோக்கிக் கூறத்தக்கன வற்றைக் கூறுகின்றாரேயன்றி நம்மை நோக்கிக் கூறுகின்றாரில்லை; முற்றத்துறந்த முனிவரென்று பேர் படைத்தவர் பொருளுள்ளாரை நோக்கித் தத்துவ போதகஞ் செய்வது தகுதியாகாதென்று தம்முள் பேசிக்கொள்வாராயினர். இதனைக் குறிப்பாக வுணர்ந்த அம்முனி புங்கவர் ஒருநாள் தத் துவ விசாரபாடம் நிகழும்போது தமது யோகப் பெருமையால் மேற்படி சக்ரவர்த்தியினது மிதிலாநகரம் தீப்பற்றியெரிவதுபோ ன்று செய்தனர். மேற்படி நகரம் தீப்பற்றி யெரிவதை மேற்படி முனிவர்களுண்மை யெனவுணர்ந்து, சிரவணஞ்செய்வதை விட்டு விரைந்தோடி நகரத்துட் சென்றபோது, அங்கொரு விகற்பமுமில் லாதிருக்கக்கண்டு, கோவணம், கமண்டல முதலிய அற்பப்பொரு ள்களில் பற்றுவிடாதுள்ள நாமா தத்துவ விசாரஞ்செய்வதற்குரி யவராவோம்; ஜனகசக்ரவர்த்தி அந்தப்புறமும் அக்கினிபற்றி வே கின்றதென்றேவலாளர் செல்லக்கேட்டு மசையாது நிருவிகற்பமா யிருந்தனரே! அவரன்றோ தத்துவவிசாரஞ் செய்தற் குரியவர்; நமது குருமூர்த்தி அவரை நோக்கிக் கூறுவது நியாயமே யாமெ ன்று தெளிந்து, தம்மிடத்துள்ள உயிர்ச்சார்பு முதலிய பற்றொ ழியுமாறு முயன்று வருவாராயின ரென்றுள்ள சரித்திரத்தால், தேசிகன்சொற் பிழையா தொழுகுகின்றவரே தமது வாழ்நாளைப் பயன்படு நாளாகச் செய்வரென்பது விளக்கமாம்.



### 45. பொருளாற் கோள்ளும் பெரும்பய னுரைத்தல் (6—11—11).

நாம் ஒவ்வொருநாளும் உயர் நிலையை யடைய விரும்புகின் றோமே யன்றி, உண்மையான வுயர்நிலையாது? அஃதெச்சாதனத் தாற் சித்தியாகுமென்பதைப்பற்றிக் கருதுகின்றோமில்லை. பணமுள்ள

ளார்க்கே எல்லாமேன்மையு முண்டாவனவா யிருத்தலின், பாடு பட்டுப் பணத்தைச் சம்பாதித்தால், அதனால் எல்லாமேன்மையும் அடைதல்கூடும்; அதைத் தேடுவதை விட்டு, வேறு பிரயத்னஞ் செய்வது பயனற்றகாரியமாமென்று கருதியிருப்பதனாற்றான் நாம் பகவானை மறந்து, பணத்தையே பகவானுக்கப்பாவித்து, அதைத் தேடி யடைவதிலேயே கருத்தைச்செலுத்தி, சொப்பனத்தும் பணமயமாக நின்று பிணமயமாகப் போகின்றோம். சம்சார யாத்திரை நடைபெறுவதற்கு எவ்வளவு பணம்வேண்டுமோ அவ்வளவு பணம் சம்பாதித்து, அமைதியா யிருக்கின்றோமெனிலோ, அஃதொரு போதுமில்லை. 10-ரூபாய் வரும்படியுள்ளபோது நாம் நமக்கு இப்போது இப்பத்து ரூபாய் வரும்படிபோதுமானதன்று, 15 - ரூபாய் வந்தால் போதுமானது; அதனோடு திருப்தியடைந் திருப்போமென்று கருதுத லியல்பாமென்பதுபற்றிச்சொல்வதநாவசியகமாம். 15-ரூபாய் கருதியவாறு கிடைத்தபோதோவெனின், இப்பதினைந்து ரூபாய் நம்முடைய தகுதிக்'கேற்ற வரும்படியாகுமா, நமக்கோ இப்போது சம்சாரம் அதிகரித்துவருகின்றது, இப்பதினைந்துரூபாயால் எவ்வாறு சம்சாரத்தை நடத்தல் கூடுமென் றிவ்வாறு மேலு மேலும் பொருள் தேடுவதிலேயே சிந்தையைச் செலுத்து கின்றோமே யன்றி, பொருள் தேடுவதாலாம் பயன் யாது? தேடியபொருளைச் சேர்த்து வைப்பதா லுண்டாகும்பயன் யாது? உண்ணாதும், உடுக்காதும், ஒருவருக்குங் கொடாதும் பொருளைச் சேர்த்து வைத்தவர் அடைந்த பயன்யாது? என்றற் றொடக்கத்தனவற்றைப் பற்றி என்றுஞ்சிந்தியா திருக்கின்றோம். "அன்னிய தேக மன்னிய வுலகம், சுகமு மன்னிய முறவு மன்னியம், இருப்பது மிரவ லெண்ணமு மிரவல், சுதந்தா மிரவல் பிறவியு மிரவல், என்ன பாத்திய மிருப்பதாகக் களிப்பம்" என்று மேலோர் கூறியதைக் கவனிப்போமாயின், நாம்பொருள்தேடுவது கேவலம் போகத்தையே யனுபவித்தற்கன்று; ஆனால் உயர்வறவுயர் நலமுடைய வுத்தமநிலையையடைதற் பொருட்டாமென்பது நன்கு விளக்கமாம்.

உண்மையான வுயர்நிலை பந்தபாசப்பகுதியற்ற பரமாநந்த நிலையாமாதலின், அதனையடைய முயலுதலறிவுடையோரது கடமையாம். பொருளா லுயர்நிலை யுண்டாமென்ப தொருபோதுமின்றாம். மேலும் மேலும் பொருள்கிடைக்கும் போது, அகங்காரம்,

ஆக்கிரகமுதலியன வுண்டாவனவாயிருத்தலின், பொருளையே யுயிராகக் கருதியிருப்பவர்க்கு உபசாந்த நிலையுண்டாதலொருபோதுமின்றும். போகத்தை யனுபவித்தற்பொருட்டுப் பொருள் தேடுமிடத்துவஞ்சனைபலவும் வந்துசேர்ந்து நம்மை யந்தகராக்கி யல்லலென்னும் படுகுழியில் விழுத்தி யழுத்தி வருத்துவதைப் பற்றிச் சிறிதேனு மூகித்து நோக்குவோ மாயின், பொருள் தேடுவது புண்ணியகருமஞ் செய்தற்பொருட்டன்றிக் கேவலம்போகத்தையே யனுபவித்தற் கன்றென்பது செவ்விதின் விளங்கும்.

நாம் மனிதவுடம் பெடுத்ததன் பயன் பொருளாற்கொள்ளும் புண்ணியத்தை யடைதற் பொருட்டாம். முற் பிறப்பில் நல்வினை செய்தவரன்றோ இப்பிறப்பிற் பொருளுடையவராகின்றார். பொருளுண்டாவதற்குக் காரணம் முற் பிறப்பிற் செய்த புண்ணியவினையா யிருத்தலை நோக்கினலன்றோ பொருளுடையார் புண்ணிய கருமஞ் செய்தலை மேற்கொள்ளுதல் கூடும். பொருளை யிறுகப் பிடித்தொருவர்க்கு மீயாதும், உண்ணுதும் உடுக்காதுமிருப்பவர் தோற்றத்தால் ஆஸ்திகர்போன்று காணப்படினும் உண்மையிலவர் நாஸ்திகரேயாவர். பொருள் புண்ணிய கருமத்தினளவாக வருகின்றது; நாம்செய்தபுண்ணிய கருமத்தினளவறிந்து பரமேசுவரன் பொருளைத்தருகின்றான்; நம்முடைய முயற்சியால் பொருள் சித்திப்பது போன்று காணப்படினும், உண்மையில் அவ்வாறன்று; நம்முடையமுயற்சி யெத்தனையோமுறை பழுதாயிற்றே; பொருள் வருவதற்குக்காரணம் கேவலம் நம்முடைய முயற்சியே யாமாயின், பொருளையடைய முயற்சி செய்யாதவ ரொருவரு மிலையே; அவரெல்லாம் ஏன் பொருளுடையவ ராதலில்லை; நம்முடையமுயற்சி பொருள் வருதற்குச்சககாரி (துணை) காரணமாம்; புண்ணிய கருமம் நிமித்தகாரணமாம்; நாம்செய்த கருமங்கட்குத்தக்கவாறாக உடம்பும், பொருளும், உறவும், நட்பும், பிறவும் சித்திக்கின்றன வென்று கருமவிளைவை முன்னும் பின்னு மூகித்துப் பார்த்துப் புண்ணியகருமஞ் செய்பவரன்றோ ஆஸ்திகராவர்? உடம்பேயுயிர்; பொருளேமோட்சம்; அப்பொருளைத்தேடு முயற்சியே சரியை, கிரியை, யோகம், ஞானமாம்; உண்டுகளித்துறங்குவதே பரமாநந்தப் பிராப்தியா மென்றிருப்பவர் தாம் படைத்தபொருளால் புண்ணிய கருமஞ்செய்து, நற்கதியடைதல் எவ்வாறும்?

பொருளைத்தேடும் போதும் துக்கமாம்; அதைக் காக்கும் போதுந் துக்கமாம்; அது கள்வர் முதலியவரா லபகரிக்கப்பட்டுப் போய விடத்தும் துக்கமாம்; நாம் படாதபாடுபட்டுத் தேடியபொருளை, இறந்தபிறகு நம்முடையமக்கள் செவ்வையாகப் பாதுகாப்பரோ? குடி, கூத்து, வியபிசாரம், சூதுமுதலியவற்றிற் குபயோகப்படுத்தி யழித்து விடுவரோ என்னும் சிந்தனையாலும் துக்கமாம். எவ்வகையாக நோக்கினும் பொருள் துக்க சாதனமாகவே யிருத்தலின், அதனை யுலோபகுணத்தால் நற்கருமங்களி லுபயோகப் படுத்தா திருத்தல் மடமையினும் மடமையா மென்பது பற்றிச் சொல்லவும் வேண்டுமோ?

பொருளாற் பயன் கொள்ளுத லிருவகைத்து: ஒன்று நல்லுலகத்தை (சுவர்க்கத்தை) யடைதலாம்; மற்றொன்று சிந்தையு மொழியுஞ் செல்லாநிலைமைத் தாகிய முத்தியையடைதலாம். அறநெறியிற்சென்றுதேடிய பொருளை யிரந்தார்க்குதவல், சற்குருமூர்த்திக்கு வேண்டியவற்றைக் குறிப்பறிந் துதவுதல் முதலியவற்றால் இம்மையிற் புகழும், மறுமையில் நல்லுலகத்தை யடைதலும், பிறகு செல்வ முடையவராகப் பிறத்தலு முதலிய பயன் சித்தியாம். தமக்குரிய பொருளைத் துக்கசாதனமென்றுள்ள வா றுணர்ந்து, அதன்கணுள்ள அபிமானத்தைப் பற்றற வொழித்தலால் தத்துவ ஞானவாயிலாக மோட்ச மடைதலாகிய பயன் சித்தியாம். அறவழியிற் சென்று தேடியபொருள் நற்கதியை யடைதற்குச்சாதனமாகவும், அதனை வைராக்கியத்தால் மனத்திற் பற்றுவா றொழித்தல் முத்தி யடைதற்குச் சாதனமாகவு மிருத்தலின், தேடியபொருளால் அடையத்தக்க பயனை யடையமுயலுகின்றவர்கள் பொருள் படைத்ததன் பயனை யடைவார்க ளென்பதற்குச் சந்தேகமென்னும்? அவ்வாறு செய்யாது நாஸ்திகபுத்தியால் பொருளை யிறுகப் பற்றி அற நெறியிற் செல்லாதிருப்பவர் இம்மையிற் பழியும் மறுமையில் நரகமு மடைவாராகலின், நாம் தேடியபொருளைக் கொண்டு கூடிய வளவு தருமவழியிற் சென்று சாது சங்க சேவைசெய்து நற்கதி யடைய முயல்வோமாக.

துரியோதனன் தனது ஞாயாதிகளாகிய தருமபுத்திரர் முதலியவர்களது பொருளைச் சூதாட்ட வாயிலாக அபகரித்து வஞ்சனை பலவும் அவர்கட்குச்செய்த விஷயம் மகா இதிகாசங்களுள் ஒன்

ருகிய பாரதத்தில் மிகுபிரசித்தமான தன்றோ? அவனெவ்வளவு காலம் வாழ்ந்திருந்தான்? அவனுயிருட னிருந்தபோது, அவனுடைய எண்ணமேயன்றோ அவனுக்குப் பெரும் பகையாக இருந்தது? பொருளை மேலும் மேலும் சேர்க்கவேண்டும்; அதனை உற்றாருறவினர்க் குதவுதல் கூடாதென்னு மெண்ணத்தா லன்றோ அவன் தனது உடன்பிறந்தார் முதலாயினாருடன் மாண்டு, மண்ணுலகத்தில் "பாவித் துரியோ தனன்" என்று மக்கள் பழிக்கும் பான்மையைப் பெற்றான்? அவன் கர்ணனைப்போன்று பொருளாற் கொள்ளும் பயனைப் பெற்றிருப்பானாயின், அவனை யொருவரும் நிந்தியாரன்றோ? கர்ணன் மரணகாலத்தில் ஈசுவரதரிசன முண்டாகப்பெற்றது ஈகையினாலன்றோ?



## 46. போன்றும் பொருளைப் போற்றுத லிழிவெனல்.

(13 - 11 - 11).

கரண வியாபாரத்தைச் செவ்வையாகப் பெற்றுடைய மக்கள் இது வேண்டும் அது வேண்டாமென்னு மெண்ண முடையவராய் வேண்டிய வற்றைப் பெறுவதிலேயே முயற்சியுடையவரா யிருக்கின்றார்க ளென்பது மிகுபிரசித்தமாம். வேண்டப்படுவ தென்பது வேண்டப் படாததாயும், வேண்டப் படாத தென்பது வேண்டப் படுவதாயு மமைதல் வெளிப் படையாம். ஒவ்வொருவரும் விரும்புவது சுகமாயிருத்தலின், சுகசாதனப் பொருள் அவர்களால் வேண்டப்படுவ தாகின்றது; சுகசாதன மாகக் காணப்பட்ட ஒன்று, உண்மையாக இது சுகசாதன மாகா தென்றறியப் பட்டவிடத்து வெறுக்கப் படுவ தாகின்றது. சுக சாதன மாக நம்மவரால் விரும்பப்படுவன தனம், தான்ய முதலியன வாம். இவை கள்வர் முதலியவரி னுபத்திரவ முண்டாகும் போது வரம்பில்லாத துக்க சாதனமாக வமைதல் யாவரும் நன் குணர்ந்த விஷயமாம். தனம் தான்யமுதலியன சுகசாதனம் போன் றிருந்து நம்மை மயக்குகின்றன. அவை யவ்வாறு மயக்குவதை நாமறியாமலவற்றின்வசப்பட்டு, மயங்கிச் செருக்குற்று, நமது வாழ்நா ளினி யெவ்வாறாக முடியும்; நாமிதுகாறும் மறுமைக்கு உதவியாக யாதுசெய்தோம்? நமது நமதென்று வியவகரித்துக் காக்கும் இத் தனதான்ய முதலியன நமக்கே யுரியனவா யிருத்தலமையுமோ? நம்முடைய

தாதை மூதாதை முதலியோ ரியாவரும் இறந்தபோது காலிற்றரித்த கழற்காப்பைக்கூடக் கொண்டு போக வில்லையே; நாமாத்திரம் யாதாவ தொன்றைக் கொண்டு போதல் கூடுமோ? என்றற் றெருடக்கத்தன வற்றைப் பற்றிச் சிறிது நேரமாவது சிந்தித்து நோக்காது வாளாவிருக் கின்றோம். இவ்வாறு தனதான்ய முதலிய வற்றின் மயமாக நின்று சாமியை நினையாது காமியாக நின்று காலத்தை யவமாகக் கழிக்கும் நாம் எவ்வாறு கரையற்ற ஆநந்த வடிவமாதல் கூடும்?

நாம் தனம் வேண்டும்; தான்யம் வேண்டும்; நல்லவீடுவேண்டும்; உடம்பிற் கெப்போதும் நோய்வாரா திருத்தல் வேண்டும்; உள்ள செல்வம் மேலும் மேலும் விருத்தி யாதல் வேண்டும்; புத்திர வருக்கம் பெருக வேண்டும்; புகழெங்கும் மலிய வேண்டும்; பூரண ஆயு ளமைய வேண்டும்; மேன்மை யென்று சொல்லப்படுவன வனைத்தும் நமக்கே வர வேண்டும் என்று கருதுகின்றோமே யன்றி இவை யெவ்வாறு கிடைக்கும்? இவை யெல்லாம் கிடைப்பதாற் பூரண இன்பானுபவம் சித்தித்து விடுமா என்பது பற்றிச் சிந்திக்கின்றோ மில்லை. பூரண இன்பானுவம் சமாதி செய்பவருக்கன்றி யேனையோருக்குச் சித்தியா தென்பதை யாம் தக்காரிடத்து விசாரித் துணர்ந்திருந்தால், தன தான்ய முதலியனவே பூரண இன்பானுபவ சாதன மென்று கருதி, அவற்றின் மயமாயல்ல லுறுவதினின் றகன்றிருப்போம்.

அரசன் முதல் ஆண்டி பரியந்தமுள்ள மனித ரொவ்வொருவரிடத்துஞ் சென்று நீர் குறைவின்றி யிருக்கின்றீரா வென்று வினவுவோ மாயின், அப்போது தனதான்ய முதலியவற்றி னியல்பு நமக்கு நன்கு விளங்கும். தனதான்ய முதலியவற்றால் நிறைவான நிலையை யடைந்தவ ரொருவரு மிலராதலின், நிறைவான நிலையையடைதற்குரிய சாதனத்தைத் தேடுதல் விவேகிகளது கடமையாம் தன தான்யமுதலியவற்றின் மீதுள்ள விருப்பம் ஓயாக் கவலைக் குறைவிடமாக விருத்தலின், அவ் விருப்பத்தைச் சிறிது சிறிதாகக்குறைக்குமாறு முயலுதலத்தியாவசியகமாம். விருப்பமேயன்றோ ஒருவனைப்பிறர்க்கடிமையாக்குகின்றது? தனதான்யமுதலியவற்றின்மீதுள்ள விருப்பத்தாலன்றோ மக்கள் நினைத்தாலும் பாவமாமென்று கருதத்தக்க செயல்களைப்புரிகின்றனர்? தியானத்தை

நிலைபெறச் செய்யாமைக்குக் காரணம் மனைவி மக்கள் முதலி யவர்கள் மீதும், தனதான்னிய முதலியவற்றின் மீது முள்ள ஆசையா யிருத்தலின், ஆசை யறுதற் கேதுவாய தியானத்தைச் சற்குரு கூறியவாறு மேற்கொண்டு பரமவிசுவாசத்துடன் புரிதல் வேண்டும். மனத்தைப் பலதலைப் படாவாறு தடுத்துத் தஞ்சமா யுள்ள சற்குருவின் பாதாரவிந்தத்தின்கண் நிறுத்தியபோது வரு கின்ற தடையை யொழிப்பவரன்றோ தியானத்தின் பயனாகிய சமாதி கைவரப் பெற்றுப் பரமாநந்த வடிவமாய் விளங்கும் பாக்கி யத்தைப்பெறுவர்? பரமாநந்த வடிவமாய் விளங்கும் நிலை சித்தித் தல் அறநூற் கூறியவாறு பயனோக்காது, அறம் புரிபவர்க் காத லின், அந்நிலையைப் பெறுதற் பொருட்டுப் பயனோக்காது, அறத் தைச் செய்வது மிகவும் நன்றாம்.

தியானஞ் செய்யத் தொடங்கும்போது சிறுதுரும்பு விழு வதுகூடச் செவிக்குப் புலனாம்; இந்திரியங்க ளடங்கா தோடுவது அப்போதுதான் நன்கு விளங்கும் ஆசை யென்னுங் காலன் அப் போது செய்யும் வஞ்சனையை யளவிட் டுரைப்பது முடியாதாக லின் ஆசையை யகற்றுதற் பொருட்டு அறத்தைப் பயனோக்காது செய்துவருவது அத்தியாவசியகமான கடமையாம். லோபகுணத் தால் பொன்றும் (அழியும்) பொருளைப் பொன்றாப் பொருளாக வெண்ணி, அதைக் காப்பதிலேயேகருத்தைச் செலுத்தி, நாமெ ங்கிருந்து வந்தோம்? எவ்வளவு கால மிங்கிருப்போம்? இறந்தபிற கெங்கே போவோம் என்று முன்னும் பின்னுமுள்ள நிகழ்ச்சிகளை நிதானித்து நோக்கி, வேண்டியது துக்க நிவிர்த்தியே; காணப் படுமொவ்வொன்றும் துக்க சாதனமேயா மென்று தீர்மானித்து எல்லாம் வல்ல இறைவனுக் கர்ப்பிதமாக அறத்தைச் செய்கின் றவர்களே உத்தம குருவின் கருணைக்குப் பாத்திரராய் உபசா ந்த நிலையை யடைதற்குரியவராவர். உபசாந்த நிலையைப்பெற்றவர் தாம் உலகா தீதமாய் விளங்குவர். உலகா தீதமாய் விளங்குதலே ஜீவன்முத்தி நிலையாம்.

காஞ்சீபுரத்திற் கடுத்துள்ள ஒரு கிராமத்தில் அநவரத தாண் டவ முதலியாரென் றொருவரிருந்தார். அவர் எப்போதும் பொரு ளைத் தேடுவதிலும், அதனைக் கள்வர் முதலியோர் கவர்ந்து

போகா வாறு காத்தலினுங் கருத்துடையவரா யிருப்பார். அவர் மனமறிந்து தருமமொன்றுஞ் செய்ததே யில்லை. அவரது மனைவியார் நற்குண நற்செய்கைகள் நிரம்பியவுத்தமி யாதலின் அவர்க்குத் தினந்தோறும் "நாம் செல்வத்தைப் பிறக்கும் போது கொண்டுவந்ததில்லை; இறக்கும் போதுங் கொண்டு போவதில்லை. ஆதலின், நமக்குரிய பொருளளவிற் கேற்றவாறு தான தருமஞ் செய்து வாழ்ந்துவர வேண்டு மென்று கூறிவருவார். அவர் அதனை யசட்டைசெய் திகழ்ந்து வருவார். அக்கிராமத்தி லுள்ளார் யாவரும் ஷை முதலியார் உலோபியா யிருப்பது பற்றி, அவரை மகா கர்மி யென்றும் சண்டாள ரென்றும் கூறி வருவா ராயினர். அதனைக் கேட்கும்போ தெல்லாம் அவரது மனைவியார் காதில் ஈயத்தைக் காய்ச்சி யூற்றியது போல வருந்து வார். இவ்வா றிருக்கும்போ தவருக்கொரு புத்திரன் பிறந்தான். அவன் தனது மாதா வினது நற்போதனையால் நல்லிலக் கணங்களெல்லாம் நிரம்பப் பெற்று, வளர் பிறை போல வளர்ந்து வந்தான். அவன் கல்வி கேள்வி யறிவொழுக்கங்களெல்லாம் நல்லாசிரியர் வாயிலாக அடைந்து நித்தியப் பொருளின்னது, அநித்தியப் பொருளின்னது என்னும் விவேக முடையவனுயு மிருந்தான். அத்தகைய சுகுண புத்திரனை ஷை முதலியார் இவன் வேதாந்தம் படித்த முட்டாள்; வேதாந்தம் படித்துக் கெட்டுப் போனவர் பலர்; இவன் பொந்தியோடே கைலாசம் போகப் போகின்றனென் றடிக்கடி கூறி யிகழ்ந்துவந்தார். இவ்வா றிருக்கும் போது அம் மைந்தனுக்கு விவாகத்திற் குரிய வயதுவர, அவனுக்கு விவாகஞ் செய்து வைத்து. இவ்விவா கத்தினுல் பெரும் பொருள் செலவாய் விட்டதே யென்று பெரிதும் வருத்த முற்று, அது காரணமாகப்பாயும் படுக்கையுமாக விருந்தார். மனோவியாதி யதிகமான தினுலவர்க்கு நீர் வியாதி யுண்டாயிற்று. அதனுல், அவர் நாம் பாடுபட்டுத் தேடிய பொருளையும், நமது மகனையும், மனைவியையும் இனிப் பாதுகாப்பவ ராரென்று பெருங் கவலையடைந்திருந்து மரண நாளை யெதிர் பார்க்குந் தன்மைய ராஞர். அப்போதும் அவர் தரும சிந்தனை கொள்ள வில்லை. அவரது மகன் ஒரு பை நிறையச்சவரனைப் போட்டுக்கட்டி, அவரருபக்கத்தில்வைத்தான். அதனைப் பார்த்து அவர் ஏனப்பா! இதனைக் கொண்டு வந்து வைத்தாய்?என்று வினவினுர். அதற்கு மைந்தன் தாங்களிறந்து போம்

போது வழித்துணையாக வேண்டி யிதனைக் கொண்டுவந்து வைத்தேனென்று கூறினான். அதுகேட்டு அவர் இதுகாறும் நாம் செல்வச்செருக்கா லிறுமாந்து மறுமைக் குரிய அறத்தைச் செய்யாது வாளா போயினேம்; கூடக் கொண்டு போவது ஒன்றுமில்லையே யென்று வருந்தி, தமது பொருளிற் பாதியை யறத்திற்குபயோகப் படுத்துமாறு தமது மைந்தனுக்குக் கூறி யிறந்து போயினார். இக்கதையால் இறந்த பிறகு தேடிய பொருளில் கொண்டு போகும் பொரு ளொன்று மில்லை; உள்ள போதே விரைந்து, புண்ணிய கருமங்களைச் செய்து நற்கதியடைய வேண்டு மென்பது நன்கு விளங்கும்.



## 47. குருவருள் பெற்றார் குறைவுற் றிராரேனல்.
(20-11-1911)

பந்தத்திற்கும் விடுதிக்குங் காரணம் யாதென்று செவ்விதாக விசாரித்துநோக்கு மிடத்து, அது மனமாமென்பது நன்கு விளங்கும். மனமானது இந்திரிய வாயிலாக வெளிமுகப்பட்ட போது துக்கமும் அங்ஙன மாகாது உள்முகப் பட்ட போது சுகமு முண்டாவனவா யிருத்தலின், மனமே துக்கத்திற்கும் சுகத்திற்கும் காரணமா யிருக்கின்ற தென்பது மனத்தி னியல் புணர்ந்தார்க் கினிது புலனும். மனம் கணப்போ தேனும் வாளா இராது சலன மடைந்து விஷயா காரமாய் வருதற்கேது, எனக்கிது வேண்டும் அது வேண்டா மென்னும் விருப்பு வெறுப்புக்களாம். விருப்பு வெறுப்புக்களால் மனம் ஓயாது சலனமடைவதாயிருத்தலின், விருப்பு வெறுப்புக்களைக் கெடுத்தற் பொருட்டு விருப்பு வெறுப்பிற் கேதுவா யுள்ள அநுகூல பிரதிகூல விஷயங்களி னியல்பைத் தக்கார்பா லிடைவிடாது விசாரித்து வருத லத்தியாவசியகமாம். காணப் படுவனவற்றுள், யாதுஞ் சுகசாதன மாக அமைவதில்லை; சுக சாதன மென்று கருதுவது மயக்க புத்தியேயா மென்று, அவற்றி லுள்ள விருப்பு வெறுப்புக்களை யகற்றி யுபேட்சா புத்தி யுடையவராயிருப்பவர் மனம் சங்கோச (குவிதல்) விகாச (விரிதல்) தருமங்களை யடையா திருத்தலின், அவரே பந்தத்திற்கும் விடுதிக்குஞ் சான்றாக (சாட்சியாக) விளங்கும் நிலைமையினை யெய்துதற் குரியவ ராவர்.
நாம் சொப்பன காலத்திலும் விஷய நாட்ட முடையவராய் அது

வேண்டும் இது வேண்டும், அது வேண்டாம் இதுவேண்டாம் என்று விருப்புவெறுப்பு மயமாக நின்று அவற்றிற் கடிமைப்பட்டிருத்தலின்றறான், மாறாத சுகத்தை யடைந்து மனங் கடந்தநிலையைப் பெற்று வான்போல் விளங்கு மியல்பினைப் பெறாது மண்ணுக்கும் விண்ணுக்கும் மற்ற வற்றிற்கும் வீங்கி, மனிதப் பிறப்பின் பயனையுறாது வாளா போகின்றோம்.

"அந்தமற் றொன்றாய் விகற்பமற் றறிவா யழிவிலாப் பரம் பொரு ளிருக்கப், பந்தமுற் றவரார் முத்திபெற் றவரார் பாவனை விகற்பமே யனைத்துஞ், சிந்தனை விரிவு பந்தமா மதனைத் தீர்ந்திடன் முத்தியா மனத்தின், தொந்தலீ லையினாற் றாரமா மணித்துந் தூரமு மண்ணிதாய்த் தோன்றும்" என்னுஞ் ஞானவாசிட்டச் செய்யுளால் சிந்தனை விரிவு பந்த மென்றும், அதனை யொழித்தல் முத்தி யென்றும் பெறப்படுதலின், பந்தத்தை யொழிக்க வேண்டு மென்று முயலுகின்றவர்கள் சிந்தனை விரியாது நிற்றற் குரிய சாதனத்தை மேற்கொண் டப்பியசித்தலே பந்தத்தைக் கெடுத்தற்குத் தக்க சாதன மாம். சிந்தனை விரிவைக் கெடுத்தற் குரிய சாதனையை மேற்கொள்ளாது, அது மேலும்மேலும் விரிதற்குரிய சாதனத்தைமேற்கொண் டொழுகுவது கொழுந்துவிட் டோங்கி யெரியுந் தீயை யவித்தற் பொருட்டு, அதனிடத்து விறகிட்டு நெய் யூற்றுவது போலாம். மனம் தன்னை விஷயாகாரமாகாவாறு தடுக்கின்றவர்களை யெதிர்த்து நின்று, எவ்வகையாக வேனும் தன்னைத் தடுக்க முயலுகின்றவர்களைத் தன் வசப்படுத்தி, என்னை நீ தடுத்தற் குனக் கென்ன பலமுண்டு; நீ யெனதடிமையென்பது வெளிப்படையாக யாவருமறிந்த விஷயமன்றோ என்று கூறுவதை யாமறியாது போகின்றோம். மனத்தின் சுபாவத்தினை யறிந்து, அதனை யடக்குதற்குரிய வாற்றாலடக்காது வேதைதையோ வெண்ணி யின்பநிலையை யடையாது போவது பற்றி யாம் சிந்தித் துணருகின்றோ மில்லை.

"மன்னேமற வாதேநினைக் கின்றேன் மனத்துன்னை" என்று சிவராஜ யோக சிகாமணியான சுந்தர மூர்த்தி சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளிய வாறு, பிறப்பாலு மிறப்பாலு முண்டாம் பெருந்துன்பத்தை அநுமான அளவையானும், ஆகம அளவையானும் நன்குணர்ந்து, "அத்தமி யாத சோதி யருக்கனு மளவிலாதாய், மெத்திய பிணியி லாதாய் மேவிரும் பிறப்பி லாதாய்,

எத்தலங் களினு மென்று மியாவுமா யாவுஞ்செய்து, முத்தியு மாகி யோங்கு மூதற்பரம் பொருள்'' ளான ஈசனை யிடைவிடாது விசுவாசத்துடன் தியானித்து, தியானத்தை மறவா திருந்தா லன்றோ மனத்தின் வல்லமையைக் கெடுத்தல் கூடும். மனத்தின் வல்லமையைக் கெடுத்தற் குரிய பரமேசுவரத் தியானத்தை மோட்சத்திற்குப் பரம சாதனமா மென்று கொள்ளாது, பணமே! உனக்கு நானடிமை; காணியே! உனக்கு நான் காவற்காரன்; வீடே! உனக்கு நான் வேலைக் காரன்; போகமே! நீளனக்குப் பெறத்தக்க முத்தி யென்று மனமோடிய வழியேசென்று மட்டற்ற துன்பத்தைத் தட்டில்லா தநுபவிப்பவர்க்குப் பந்தத்திற்கும் விடுதிக்கும் சான்றாக விளங்கும் நிலை எங்ஙனம் வாய்க்கும்?

"மறப்பறியாப் பேரறிவில் வாய்ந்தபெருஞ் சுகமே" என்று திருவருள் வழியாய்ச் சென்று சிதம்பரமாய் விளங்கிய திருவருட்பிரகாச வள்ளலார் திருவாய்மலர்ந்தருளியவாறு மறப்பறியா நிலை பெற்றா லன்றோ அறிவாநந்த நிலை சித்தியாம். மாறி மாறி வரும் மறப்பிற் கேது நினைப்பா யிருத்தலினால், நினைப்பைக் கெடுக்க முயலுதல் வேண்டும்; நினைப்பிற் கேது சப்தமுதலிய விஷயங்களா யிருத்தலின், விஷயங்களைத் துக்க வடிவ மென்று கண்டு, அவற்றில் மனத்தைச் செல்லாவா றடக்கல் வேண்டும்; அஃதவ்வா றடங்கினால் நினைப்பு அகலும்; நினைப்பு அகன்ற விடத்து மறப்பின்மையின், நினைப் பகலுதலே மறப்பைக் கெடுத்தற் கேதுவாம். இங்ஙனமாய நினைப்பு மறப்புக்களை யகற்றி, அறிவாநந்த வடிவமா யப்பாலுக் கப்பாலாய் விளங்கும் ஏக நாயகனை மறவாது நிற்கும் நிலையே பேராநந் தஞ் சித்திப்பதற் கேதுவாம். இங்ஙனமாய நிலை சிந்தனை விரிவு தீர்ந்த நிலையா யிருத்தலின், இதுவேசிவன்முத்தி நிலையாம். இந் நிலை சற்குருவின் கருணை யில்லாதார்க்குச் சித்தியாது ஆகலின் பந்தத்திற்கும் விடுதிக்கும் காரணமாய மனத்தின் வல்லமையைக் கெடுத்து, அதற்குச் சான்றாக விளங்கும் நிலையினைப் பெற்றுப் பேராநந்த வடிவமாக விளங்குதற் பொருட்டு, அவரையே தஞ்சமாக அடைந்தொழுகுதல்வேண்டும்; குருவினைத் தஞ்சமாக அடைந் தொழுகு கின்றவர்கட் கொரு போதும் கெடுதி யுண்டாவ தில்லையாம். சற்குருவின் கருணைக்குப் பாத்திர மானவன் "எட்டிலறி வின்றியிறை தன்னிலறி வின்றியிவ் வுடம்பி னுடனே, வீட்டி

லுறைவான்" என்பது நிச்சயமாதலின், நாம் பந்தவிடுதிகட்கேதுவாய மனத்தின் ஆற்றலைக் கெடுத்து, கரணங்களெல்லாங் கடந்து நின்ற நிலையைப் பெற இனியாவது முயல்வோமாக.

அரிச்சந்திரனது தந்தையான திரிசங்கு ஒருநாள் தனது குலகுருவாகிய வசிஷ்டரை யடைந்து வணங்கி, சோக மோக மற்ற சொரூபமாய் விளங்குஞ் சுத்த சிவமே! தமியேனை இச்சரீரத்தோடு வேள்விபுரிவது வாயிலாகச் சுவர்க்கத்திற் கனுப்புதல் வேண்டுமென்று பிரார்த்தித்தான். அது கேட்டம்முனி புங்கவர் நீ கூறுமாறியற்றுவது கூடாதகாரியமாமென்றுகூற, அவன் மனம் வருந்தி, அவரது புத்திரர்களிடத்துச் சென்று தன்னை வேள்வி மூலமாக ஸ்தூல சரீரத்துடன் சுவர்க்கத்திற் கனுப்ப வேண்டுமென்று பிரார்த்தித்தான். அவர்களும் அது முடியாதென்று கூறினார்கள். அது கேட்டவன் வேறொரு குருவை யடுத்து யாகஞ்செய்து, அது வாயிலாக இவ்வுடம்புடன் சுவர்க்கஞ் செல்லுகிறேனென்று கூற, அவர்கள் சினந்து நீ சண்டாளனாகக் கடவாயென்று சபித்தார்கள். அவன் சண்டாளத் தன்மையோடு விசுவாமித்திர மகாமுனிவரைத் தஞ்சமாக வடைந்து, நடந்த வரலாற்றினைக் கூறி, தனைக் காத்தருள்புரிய வேண்டுமென்று வேண்டிக் கொண்டான். அம்முனி சிரேட்டர் அத் திரிசங்குவின் வேண்டுகோளுக் கிணங்கி, உன்னை யான் இத்தூல தனுவுடன் சுவர்க்கத்திற் கனுப்புகிறேனென்றுரைத்து, திரிசங்குவைச் சுவர்க்கத்திற் கனுப்ப வேள்வியொன்றியற்றுவாரானார். அது பற்றி, அவர் ரிஷி கணங்களை யழைத்த போது, வசிஷ்டரது புத்திரர்கள் தவிர மற்றையோர் யாவரும் வேள்விச் சாலை யண்டை வந்து சேர்ந்தனர். வசிஷ்டரது புத்திரர்கள் "யஜமானன் சண்டாளன், யாகஞ் செய்விப்போன் க்ஷத்திரியன்; இஃதென்ன யாகமாம்" என்று பரிகசித்திகழ்ந்து கூறினார்களென்று கூறி, வராது நின்றனரென் றேவலாளர் கூறக் கேட்டு, அவர் அவர்களை யுடனே யிறந்துபோம்படி சபித்து, யாகஞ் செய்யத் தொடங்கி அவியுணவு கொள்ள அமரரை யழைத்தார்; அதற்கு அமரர் (தேவர்) களுள் ஒருவரும் வாராமையைக் கண்டு, உடனே திரிசங்குவை நெய்வார்க்கு மகப்பையி லேற்றித் தவத்தின் வல்லமையாற் சுவர்க்கத்திற் கனுப்பினார். திரிசங்கு சுவர்க்கஞ் சேர்ந்ததும், இந்திரன் கோபித்து நீயிங்கு வருதற்குத் தகுதி யுடையவனல்லனென் றவனைத்

தலைகீழாகத் தள்ளி விட்டான். அது கண்டு விசுவா மித்திரர் தமது தவத்தினாற்றலால் தலைகீ ழாக விழுகின்ற திரிசங்குவை ஆகாயத்திலேயே நிறுத்தி, புதுவதாக ஓர் உலகத்தைப் படைத்து, அதனிடத்தவன் ஸ்தூல வுடம்புடன் வாழுமாறு செய்தாரென்னுஞ் சரித்திரத்தினால் குருவின் கருணையைப் பூரணமாக வுடையவர்க்குக் குறை யொன்று மில்லையா மென்பது நன்கு விளங்கும்.



## 48. நில்லாதவற்றை நிலையெனவுணரும் புல்லறிவாண்மை போமுறை கிளத்தல்.

(27-11-1911)

"நில்லா தவற்றை நிலையின வென்றுணரும், புல்லறி வாண்மை கடை (நிலையுத லிலவாகிய பொருள்களை நிலையுத லுடையன வென்று கருதுகின்ற புல்லிய வறிவினை யுடையராதல் துறந்தார்க் கிழிவு)" என்று திருவள்ளுவநாயனார் திருவாய்மலர்ந் தருளியிருத்தலை யுற்றுநோக்கிச் சிந்தியாது, உடம்பு முதலிய வற்றை நித்தியப்பொருளாகக் கருதி, அது காரணமாக யாதுஞ்செய்ய முற்பட்டு முயலு கின்றோம்; அதனால் நேரும் பழியையும் பாவத்தையும் நோக்கு கின்றோமில்லை. நாம் பிறரறியாது செய்யும் வஞ்சகச் செயல்களை எங்கும் நிறைந்து ஏகனாய் விளங்கும் பரமேச னறிந்து நம்மை (இம்மையிற் றண்டியாது விடினும்) மறுமையிற் றவறாது தண்டிப்பானே யென்று சிறிதேனு மெண்ணு கின்றோமில்லை. நாம் வஞ்சகச் செயல்களைச் செய்ய முற்படும் போது, ஒரு குற்றத்தை மறைத்தற் பொருட்டுப் பலகுற்றங்களைச் செய்யச் சிறிது மஞ்சா திருக்கின்றோம். வஞ்சனை செய்து பிறர் பொருளை யபகரித்து வந்தவர்களுள், ஒருவ ராவது பிராணனோ டிருக்கக் கண்டிலமே; அவரிறந்து போம் போது காலி லொட்டிய சிறு தூளையும் உடன் கொண்டு சென்றா ரில்லையே; நாமும் அவ்வாறன்றோ போவோம்; யாது பற்றிக் குற்றமான காரியங்களைச் செய்து, இம்மைக் குரிய பழியையும் மறுமைக் குரிய பாவத்தையும் பெற்று மீளாத நரகத்திற் காளாக வேண்டுமென் றெக்காலத்து முய்த்துணரா து உடலைப் போஷிக்கும் வேலையையே யுறுதி தருவதாகக் கொண்டு வருகின்றோம்; இனிவரும் பிறப்பிலாவது ஈசனை யேத்தி மாசற்ற நிலையைப் பெற்று வாழவேண்டுமென் றெண்ணி, அதற்குரிய சாதனத்தை மேற்கொண் டொழுக

முந்து நின்றேறுமில்லை. இவ்வா றிருக்கும் நாம் எவ்வாறு நித்தியா நித்திய விவேக முடையவராய் நிஜாநந்த நிலையினை யடைந்து, நீக்கமற்ற முத்தி பெறுத லமையும்?

"அடியா ருறவு மரன்பூசை நேசமு மன்பு மன்றிப், படிமீது வேறு பயனுள தோ" என்று கலைபல தேர்ந்து, கரணச் செயலை யகற்றி, புரைய(குற்றம)ற் றிருக்கும் பூரணநிலையினைப்பெற்ற பட்டினத்தடிகள் புகன்றருளியவா று அன்பர்பணியில் நேசமும், அரன் பூசையி லார்வமும் கொண்டு, அவற்றைக் குறைவறச் செய்து மனிதப் பிறப்பின்பயனை யடைதல் வேண்டும்; அதனை யடையாது போதல் குற்றங்க ளெல்லா வற்றினும் பெருங் குற்றமா மென் றுணர்ந்தவ ரன்றோ, நில்லாத வற்றை நிலையின வென்று மயங் கும் நீச புத்தியற்று, சுகபரி பூரண சுபாவ நிலையினைப் பெற எவ்வாற்றா லேனும் முயலுவர்? "கொண்ட பாவனை பிறவியாம்" என்று ஞானநூல் கூறுவதன் பொருளை, நன்குணர்ந் தொழுகு மாற்ற லுண்டானா லன்றோ, நில்லாத வற்றை நிலையின வென் றுணருதல் பாவனைக் கேதுவா மென்றும், பாவனை பிறப்பிற் கேது வாமென்றும், பிறப்பு இறப்பிற் கேதுவா மென்றும், இவ்விரண் டும் துன்பங்க ளெல்லாவற்றிற்கும் மூலமா மென்றும் நன்கு விளங்கும். மனமானது வான்மதி (சந்திரன்) போலப் பாவனை யின் (எண்ணங்களின்) வாயிலாக, சங்கோச விகாசங் (குவிவு விரிவு) களை யடைந்து வருதலையும், அவற்றால் சுகதுக்கங்கள் மாறாது வருதலையும், அவற்றால் உயிர் மோகக்கடலில் விழுந்து, முத்தி நகரின் துறை தெரியாது, தயங்குவதையும் நன்குணர்ந்து, நில்லா தனவற்றை நிலையின வென்றுணருதலை யுள்ளவா றகற்றி யொழு குதல் அடியாருறவும் அரன் பூசை நேசமு முடையவருக் கன்றோ வாய்க்கும்?

பொருளும் இன்பமுமே புருஷார்த்தம். பிருதிவி, அப்பு, தேயு, வாயுவென்னும் பூதங்களை யன்றி வேறுபொருளில்லை; இற ந்தவுயிர் மீளப்பிறப்ப தில்லை; பூதங்களின் புணர்ச்சி விசேடத் தாற் றோன்றி யழிவ தாகிய வுடம்பி னிடத்து உயிர் மதுவின் கண் புளிப்புப்போலத் தோன்றியழிகின்றது; ஈசனென்பானை யாவர்கண்டனர்? ஈசனென் னுஞ் சொல்லிற்குப்பொருளில்லை; அது நிரர்த்தக பதம் என்று நாஸ்திகம் பேசி, நல்லோர் நடுங்கவஞ்சனை

பலவற்றைச் செய்து, உண்டுறங்குவதையே மனிதப் பிறப்பின் பயனாகக் கொண்டு, பிரத்தியட்சப் பிரமாண மொன்றையேபெரிதாக வெண்ணி யொழுகுகின்றவர்கட் கன்றோ 'அடியா ருறவும் அரன்பூசை நேசமு மன்புமன்றிப், படிமீது வேறு பயனுளதோ' என்னுந் திருமொழி அவமொழியாய் விளங்கும்? இரண்டு பிள்ளைகளில் ஒன்று நல்லிலக்கணங்க ளெல்லாம் நிரம்பியிருப்பதும், மற்றொன்று நிர்ப்பாக்கிய நிலையிலிருப்பதுமாகிய இரண்டனையுஞ் சிறிதுய்த் துணர்ந்து நோக்கும் போது, இங்ஙனமிப்பிள்ளைக ளிருத்தற்குக்காரண மிருக்கவேண்டுமென்பது செவ்விதின் விளங்கும்; இவ்வாறே பிறவற்றையும் பற்றி நோக்குமிடத்து, மூத்திரிய உண்மையில் புருஷார்த்த மென்றும், பிருதிவி முதலிய பூதங்க ளிருத்தற் கிடங்தரு மாகாய முதலியன வுண்டென்றும், இறந்தவுயிர் தத்துவ ஞானம் பெறாத பரியந்தம் பிறந்திறந்து வருமென்றும், உயிர்க்கு உடம்பு விஷயமா யிருத்தலின் உயிர் உடம்பின் தருமமாகா தென்றும், உலகம் கடம்போலக் காரிய வடிவமா யிருத்தலின், இதற்குக் கருத்தா வாகிய ஈசனொருவனுண்டென்றும், அவன் நாம்செய்த வினைக் கேற்ப நமக்குப் பிறழ்வின்றி, தனுகரணமுதலிய பயன்களைத் தருகின்றானென்றும் நன்கு விளங்கும். இவற்றை யெல்லாம் நன்குணர்ந்து கொண்ட பாவனை பிறப்பிற் கேது வாயிருக்தலின், அப்பாவனை யொழிக்க வேண்டு மென்று பாவனாதீத மாயுள்ள பரம் பொருளை யிடைவிடாது சற்குருநாதன் கூறியவாறு ஒரு பாவனாவடிவ மாகக் கருதிப் பாவிப்பவ ரன்றோ பிறப்பின் பயனைப் பெறுதற் குரியவராவர்?

"அளவிலாப் பாவகத்தா (எண்ணத்தா) லமுக்குண்டிங் கறிவின்றி, விளைவொன்று மறியாதே வெறுவியனாய்க் கிடப்பேனுக், களவிலா வானந்த மளித்தென்னை யாண்டானைக், களவிலா வானவருந் தொழுந் தில்லை கண்டேனே" என்றுபத்தி நெறி சென்று பரமானந்த வடிவினராய் விளங்கிய திருவாதவூரடிகள் திருவாய் மலர்ந்தருளி யிருத்தலைச் சிறிதுற்றுநோக்கு மிடத்துத் துன்பங்க ளெல்லாவற்றிற்கு மூலம் அளவிலாப் பாவக மென்பது இனிது விளங்கும். இப்பாவனைக் கேது நில்லாதன வற்றை நிலையினவென்றுணரும் மயக்க புத்தியா யிருத்தலின், அதனை நல்லா

சிரியர் வாயிலாக நன்றாகப் பொருள்களி னியல்பை விசாரித் தக ற்றுதலே நல்லோரது நெறியாம்.

நிலையில்லாத பொருள்களை நிலையுத லுடையனவாகக் கருது வதாற்றான் பொய்பேசுதல், திருடுதல், நற்குண நற்செய்கைக ளொருசிறிது மில்லா தாரைப் பொன்னே! மணியே! புகழே! அருளே! கண்ணே! கருத்தே! என்று மேம்படுத் துரைத்தல், மனச் சான்றுக்கு மாறாக நடத்தல், முத்தியை விரும்பும் முனிவர் தொழும் அச்சுத னடிகளை யன்பாகமனமொழிமெய்களால் வண ங்காதொழிதல், ஐம்பொறி யடக்கி யருந்தவஞ் செய்யா தொழி தல்,தேவர்கடன் முனிவர் கடன் பிதிரர் கடனென் னுமூன்றையும் முறைபடச் செய்யா தொழிதல், தந்தை யுரையைத்தட்டித் தாயு ரையை யிகழ்தல் முதலியன சம்பவிக்கின்றன. நீரினுட் கிடக்கும் கற்பாறை வருடம்பல கடந்த விடத்தும் இளகுந் தன்மை யடை யாமைபோலப் பெரியாரை வெகு காலமடுத்துப் பழகி வருகின்ற வர்களும் பொருள்களின் மீதுள்ள பற்றுவிடாது (பொய்கொலை களவு முதலிய வற்றைச்செய்து) பிராணிகளின்மீதுஅருளுடைய ராகா திருத்தற்குக் காரணம் நித்தியப் பொருளின்னது, அநித் தியப் பொருளின்னது என்று செவ்விதாக ஆராய்ந்துணர்ந்தொ ழுகாமையேயாம். "ஆசைக்கடியா னகிலலோ கத்தினுக்கும், ஆசற்ற நல்லடியா னுவானே - ஆசை, தனையடிமைகொண்டவனே தப்பா துலகந், தனையடிமை கொண்டவனே தான்" என்னும் நீதி வெண்பாச் செய்யுள் நித்தியத்தை நித்தியமென் றுணர்ந்தவனை யும் அநித்தியத்தை அநித்திய மென் றுணர்ந்தவனையு மன்றோ குறிப்பிக் கின்றது. நில்லாத வற்றை நிலையின வென் றுணரு முணர்வினை யுடையான், அவசியமாக வேண்டுவன வற்றோ டமை யாது மேன்மேலும் எனக்கிது வேண்டும், அது வேண்டுமென்று விரும்பி அவற்றைப் பெற முயன்று சுகதுக்கங்களுள் யாதாவ தொன்றால் மொத்துண்டு வருத்த முறுகின்றான். நில்லாத வற் றை நிலையின வென்றுணராது அவை நில்லாதன வென்றே யுள்ள வாறுணரு முணர்வுடை யானோ தேக யாத்திரைக்கு எவ்வளவு ஊணுடை முதலியன வேண்டுமோ அவ்வளவிற்கு மேல் விரும் புவ தின்மையின், அவன் அவற்றால் மொத்துண்டு வருந்துவ தில் லையாம். ஒருவன் சுகதுக்கங் களால் மொத்துண்டு வருந்து வதற் கும், மற்றொருவன் அவற்றால் மொத்துண்டு வருந்தா மைக்கும் காரணம் நித்தியா நித்திய விசாரமாக இருத்தலின், நித்தியா நித் திய விசாரம் அவசியம் தக்கார் வாயிலாகச் செய்யத் தக்கதாம்.



49. ஆன்மஞானம்வரின் ஆணவம்போமெனல்.

(4-12-1911).

"ஆணவமே யஞ்ஞான மறியாமை யென்றறிநீ, காணு மறிவுனக்குக் காட்டுமிறை- கோணை மலம், பொன்றுமுடனல்ல போதமே நானெனனில், அன்றொழியு மப்பாவது" என்று சிவஞானவள்ளலார் திருவாய்மலர்ந் திருத்தலைச் செவ்விதினோக்குமிடத்து உடம்பு எவ்வகை யானும் நானென்பதன் பொருளாவதில்லை; அது யானுமன்று, என்னுடையது மன்று, நான் போத (ஞான) சொரூபனென்று பிறழாத அறிவினை யுடையவரா யிருப்பவர்க்கே ஆணவமொழியு மென்பது நன்கு விளங்குதலின், உடம்பு நானென்று விவகரித்தற் கேதுவாகிய ஆணவத்தைக் கெடுத்தற் பொருட்டுப் பரமாநந்த போதரூபராய் விளங்கும் பரமாசிரியரைப் பற்றுக்கோடாக அடைந்து, தத்துவோபதேசம் பெற்று, பெற்றவாறொழுகல் வேண்டு மென்பது நமக்கினிது புலனாம். பரமாசிரியரை யடுத்து வழிபடு முறையாக மனம் வாக்குக் காயங்களால் வணங்கி வருபவர்க்கன்றி யேனை யோர்க்குத் தத்துவோபதேசம், அவரிடத்துப் பெறுதல் கூடாதாகலின், ஆணவமென்னு மஞ்ஞானமற்றுப் போத சொரூபராய்ப் பிறழ்வின்றி விளங்கும் அற்புத மூர்த்தியாம் அருட்குருவை யடைக்கலமாக அடைந்து, அவர் கூறிய வாறொழுகாத பரியந்தம் நாம் உடம்பின் மயமாக நின்றோயாத துன்பத்தை மாறுதலடைந்து வருவோமென்பது பற்றிக் கூறவும் வேண்டுமோ? நாம் உடம்பின் மயமாகநின்றல்லலுற்று, அவஸ்தாத் திரயங்களால் மொத்துண்டு, பேராநந்தப் பெருக்கின் பெருமையை யுணராது போதற்குக் காரணம் ஆணவத்திற் கடிமை பூண்டொழுகுவதே யாம்.

நான் உடம்பு முதலிய வற்றினும் வேறாய்க் கேவலம் போதாநந்த வடிவமா யிருப்பவனென் றுணராண்மயே அறியாமை யென்னும் ஆணவமாம். இவ்வாணவம் நான் போதாநந்த வடிவனென்று பிறழ்வின்றி யுணருதலால் ஒழிந்து போவதாக இருத்தலின், பேராநந்தப் பெருக்காகிய முத்தியை யடைய விரும்புமொவ்வொருவரும் அத்தியா வசியகமாக மேற்கொண்டொழுகுஞ் சாதனம் நான் பொன்று (அழியு) முடம்பன்று போதாநந்த வடிவனென்று பிறழ்வின்றிச் சிந்தித் திருத்தலாம். இச்சிந்தனை யில்லாது பொன்று முடம்பைப் பொன்றாப் பொருளாக எண்ணி,

அதற்கே யடிமை பூண்டு, அதன் வழி யொழுகும் நாம் உய்யும் நெறிகண் டுய்தல் எவ்வாறும்? உயிரென்பது உடம்பிற்கு வேறாக வில்லை; உடம்பின் றருமமே யுயிராமென்று கருதியிருப்பதாற் றான் நாம் பெரியோர் வாக்கைப் பேணி நடவாது, எண்ணியவாறாக இஷ்டப்படி நடந்து கஷ்டமெல்லா வற்றையுங் கரையின்றி யடைந்து, முத்திநகரை யடைய முற்படா திருக்கின்றோம். உடம்பு மலமயமாக விருந்து நம்மை மயக்கி வருவதை நாம் உற்று நோக்காது, உடம்பு பூரித்தலைக் கண்டு களிப் படைந்தும் இளைத்தலைக்கண்டு கவலை யடைந்தும் வருகின்றோம். பூரித்தலும் இளைத்தலு முடம்பிற் குண்டாவது, உணவின் ஏற்றக் குறைவா லென்று நாம் செவ்விதாக வுணர்ந்தும், அதனை நானென்பதன் பொருளாகக் கொண்டு மயங்கி வருத்த முறுகின்றோம். இவ்வாறு மயங்கச் செய்து வருவதன் காரணத்தை யகற்ற முயலாது வாயாரவுண்டுடுத் துறங்கு வதையே பிறந்த பிறப்பின் பெரும்பயனாகக் கருதி வருகின்றோம்.

கள்ளுண்டு மயங்கி யிருப்பவன் அசுத்த வுணவுகளைச் சுத்த வுணவாகக் கொண்டு அவற்றை யாநந்த மாகவுண்டு தலை கால் தெரியாது நடப்பது போல, ஆணவமென்னு மஞ்ஞானத்தால் மயங்கி யிருக்கும் நாமும் அநித்தி யத்தை நித்தியமென்றும், அசுத்தத்தைச் சுத்தமென்றும், துக்கத்தைச் சுகமென்றும், அநாத்மாவை (ஜடப்பொருளை - உடம்பை) ஆத்மாவென்றுங் கருதி, ஆநந்தமாக விஷயபோகத்தை யனுபவித்து ஆத்மா நாத்ம விசாரமில்லா தொழுகுகின்றோம். போகாநுபவம் பொல்லாங் கென்பவற்றை யெல்லாந் தருவதென்று சிறிதேனுஞ் சிந்திக்கின்றோமோ வெனின், அஃதொரு போதுமின்றாம். காணப்படும் ஒவ்வொன்றும் தன்வடிவங் கெட்டுப் பின்ன! முறுவதை நன்றாகக் கண்டிருந்தும், அதையழியாததென்றும், "ஐவர் கலகமிட் டலைக்குங் கானகம், சலமலப் பேழை, யிருவினைப் பெட்டகம், வாதபித்தங் கோழை குடிபுகுஞ் சீறூர், ஊத்தைப் புன்றோல் உதிரக் கட்டளை, நாற்றப் பாண்டம் நான்முழத் தொன்பது, பீற்றற் றுண்டம் பேய்ச்சுரைத் தோட்டம், அடலைப் பெரிய சுடலைத் திடருள், ஆசைக் கயிற்றி லாடும் பம்பரம், ஓயாநோய்க்கிட மோடு மரக்கலம், மாயா விகாரமரண பஞ்சரம், சோற்றுத் துருத்தி தூற்றும் பத்தம், காற்றிற் பறக்குங் கானப் பட்டம், விதிவழித் தருமன்

வெட்டுங் கட்டை, சதுமுகப் பாணன் தைக்குஞ் சட்டை, ஈமக் கனலி விடுசில விருந்து, காமக் கனலிற் கருகுஞ் சருகு, கிருமி கிண்டுங் கிழங்குஞ் சருமி, பவக்கொழுந் தேறுங் கவைக்கொழு கொம்பு, மணமாய் நடக்கும் வடிவின் முடிவிற், பிணமாய்க் கிடக்கும் பிண்டம் பிணமே" என்று பெரியாரருளியதற் கொரு சிறிது மாறின்றி யிருக்கு மசுத்தமான வுடம்பைச் சுத்தமான தென்றும், நானென்பதன் பொருளென்றும், பிறர்க்குரிய மகளிரை விரும்புதல் முதலிய வற்றால் வருந் துக்கத்தைச் சுகமென்றும், மயங்கிப் பிறப்பிறப் பாகிய பெருந் துன்பத்தை யடைந்து வருதற்குக் காரணமாகிய ஆணவத்தை, நான் உடம்பன்று, பரமாநந்த போத வடிவனென்னுஞ் சின்மாத்திர வாசனையா லொழிக்கத் தக்காரைச் சார்ந்து முயற்சி செய்யாது, ஆடுமாடு முதலியன போல, அருந்தல் பொருந்தல்களையே விரும்பி அவமாய்ப் போவது மனிதப்பிறப்பின் பயனன் றாதலின், இனியாவது சின்மாத்திர வாசனையால் ஆணவத்தை யொழித்து, அறிவாநந்த வடிவமாக விளங்கும் நிலையைப் பெறமுயலுவது நமது கடமைகளுள் சிறந்த கடமையாம்.

சிலவருடங்கட்கு முன்னர்க் காயாபுரி யென்னுமூரில் ஒரு தத்துவஞானி பத்தர்களுக்கு நித்தியா நித்திய விசார முதலியன அத்தியா வசியகமாகச் செய்யத் தக்கனவென்று போதித்து வந்தார். அவர் இளமைப் பருவ முடையவரா யிருந்தும் "பொன்னைப் பொருளைப் புகழைக் குறியாது, தன்னையளித்தவனே சற்குருவாம்" என்று பெரியாரருளி யிருத்தற் கிலக்கியமாக விளங்கி வந்தார். அவரிடத்துப் பலர் தத்துவ விசாரஞ்செய்து வந்தனர்; அவ்வூரில் வசிக்கும் சந்திரவதனி யென்னும் ஒரு பொதுமக்கள் (வேசி) அப்பெரியாரது நற்குண நற்செய்கைகளைத் தன்பால் வருபவர் வாயிலாகக் கேள்வி யுற்று, அவரிடத்துத் தத்துவத்தை யறிந்து முத்தியடைய வேண்டு மென்று விரும்பி, அவரையடைந்து மிகுபத்தி யோடு வணங்கி வருவா ளானாள். அவ்வாறு வருங் காலத்தில் ஒருநாள் அவள் அப் புண்ணிய சீலரது பேரழகைப் பெரிதுங் கவனித்துப் பார்த்து, மோக வசத்தா லவரைப் புணர விரும்பி, அம் மகாத்துமா தனித்திருக்குஞ் சமய நோக்கி வந்து, தன் கருத்தைக் குறிப்பாக வெளிப்படுத்தினாள்; அவள் குறிப்பறிந்த அவ்வுத்தமசீலர் 'அதற்கென்ன தடை? உன்குறிப் பின்படி

நடந்து கொள்ளலா மென்று கூறினர். அவள் அவ்வருட் குருமூர்த்தியி னிடத்து நாளையிரவு வருகின்றே னென்று போனாள். மறுநாள் அப்பரமஞானி மருத்துவ னிடத்துச் சென்று பேதிமாத்திரையை வாங்கி யுண்டு ஆகும் பேதியை யெல்லாம் அங்குள்ள வொருசாலில் பெய்து நிறைத்து, அதன்மீது அகலொன்றிட்டு மூடித் தமதாடையா லதனைச்சுற்றி வைத்துத் தாமொரு புறத்தில் வீற்றிருந்தார். குறித்த வேளையில் சந்திரவதனி களிப்புடன் வந்து பூரித்திருந்த சுவாமியாரைக் காணாதுவருந்தி,ஒதுக்கிடத்தி லுட்கார்ந் திருந்த அப்பெரியாரை நோக்கி, சுவாமியா ரெங்கே யென்று வினவினள். அதற்கவர் ஒன்றும் பேசாது விரலாற் சுட்டி மலம் நிரம்பியுள்ள அச்சாலைக் காட்டினர். அவள் மோகத்தால் சுவாமியா ரென் றெண்ணி அச்சாலினைக் கட்டித்தழுவ அஃதுடைந்து அவளை மலமயமாக்கி விட்டது. உடனே அவள் தெளிந்து மலவடிவத்தி லன்றோ நாம் மயங்கிமோசம் போனோம். சுவாமியா ரவரல்லவா? நம்மையாட்கொண்டருளவே அவரிவ்வாறு செய்தனர். இனிநாம் கணப்போதேனுங் காலத்தை வீணாக்குதல் கூடாது. நமக்கேன் இக்கெட்ட எண்ண முண்டாயிற்று ; உடம்பினியல்பைச் சீர்தூக்கிப் பாராமையினா லன்றோ நாம் அபசாரத்திற்காளானோ மென்று பலவாறாகச் சிந்தித்து, அவரிடத்துப் பணிவுடையவளாக வொழுகித் தத்துவோபதேசம் பெற்று ஜீவன்முத்தி நிலையைப் பெற்றுச் சிறந்து விளங்கினாளென்னு மிக் கதையினால் உடம்பு மலமயம்; அஃதுயிரன்று; உயிர் பரமாநந்த போத வடிவமென்று தெளிந்த வர்க்கே ஆணவங்கெடு மென்பது செவ்விதின் விளங்கும்.



## 50. அரசநீதியால் அரும்பேறுமெனல்.

(11-12-1911)

நாம் "இம்மைப் பயனாகிய புகழையும், மறுமைப் பயனாகிய சுவர்க்க போகத்தையும், சர்வதுக்க நிவிர்த்தி பரமாநந்தப் பிராப்தி வடிவமோட்சத்தையும் பெறுதற்குக் காரணம் குருமூர்த்தியருளியவாறு பிறழ்வின்றி யொழுகுதலேயாம். சற்குரு மூர்த்தியருளியவா றொழுகாது மனம் போனவாறாக வொழுகு கின்றவர்கள் இம்மைக் குரிய பழியையும் மறுமைக் குரிய பாவத்தையும் பெற்று, காணப்படு மிவ்வுல கத்திலும் சாஸ்திர வாயிலா

கக் கேட்கப்படும் அவ்வுலகத்திலும் துன்பத்தையே யடைவார்க ளென்பது சிதையாத சித்தாந்த மாக இருத்தலின், மனம் போனவா றொழுகாது சன்மார்க்கத்தி லொழுகுவது விவேகிகளது முக்கியக் கடமையாம். பொது வகையாக நாம் பழிபாவங்கட்கஞ்சிச் சன்மார்க்கத்தி லொழுகுவ்தற்குப் பிரசித்த காரணமாயிருப்பது அரசனது ஆட்சியேயாம். கள்வர்கள் பிறர்பொருளை வெளிப் படையாகவந்து கவராமைக்கும், காமுகர் பத்தினிப் பெண்களை வருத்தாமைக்கும், நாம் கொடியவர்களி னுபத்திரவமின்றி வாழ்வதற்குங் காரணம் யாதென்று சிறிதூகித்து நோக்கின், அஃதரசனது ஆக்ஞையே யாமென்பது நன்கு விளங்கும். இது சீவகசிந்தாமணி "உறங்கு மாயினு மன்னவன் றன்னொளி,கறங்கு தெண்டிரை வையகங் காக்குமால்" என்று கூறுவதாலும் நன்கு புலனும்.

"அரச னுவாத்தியான் றாய்தந்தை தம்முன், நிகரில் குரவ ரிவரிவரைத், தேவரைப் போலத் தொழுதெழுக வென்பதே, யாவருங் கண்டநெறி" என் றாசாரக்கோவை கூறுவதால், குரு வர்க்கத்துள் அரசனு மொருவனுவனென்பது தெள்ளிதின் விளங்கும்; விளங்கவே, அரச னாக்ஞையைக் கடந்து சித்தஞ் சென்ற வாறுசென்று தீயகாரியங்களைச் செய்பவன் குருத்துரோகி யாவானென்பது பற்றிச் சொல்லவும் வேண்டுமோ? ஆசாரக் கோவை அரசனை முன்வைத்து, 'அரச னுவாத்தியான்' என்று கூறிய அடையினுலேயே அரசன் தன்கீழ்வாழும்குடிகளுக்கு முதற்குருவாவனென்பது விளங்குதலின், அரச னுரையைக் கடவாது மனமொழிமெய்களடங்கி யொழுகு கின்றவர்களே இம்மைப் பயனாகிய புகழையும், மறுமைப் பயனாகிய சுவர்க்க வின்பத்தையும் பெற்று, முடிவில் ஞானகுருவின் தத்துவோபதேச வாயிலாக, காணங்க ளெல்லாங் கடந்து நின்ற நித்திய நிரதிசய இன்பத்தைப் பெறுவதற் குரியவ ராவரென்பது தேற்றமாம்; மனம் விரும்பியவாறு நடத்தற்கு வேந்த னுடைய கட்டளை பெருந்தடையா யிருத்தலின், இந்திரிய நிக்கிரகஞ் செய்வதற்குப் பாகிய சாதனமா யுள்ளவற்றுள், முதற் சாதனமா யிருப்பது அக் கட்டளையே யாம். இது தெய்வப் புலமைத் திருவள்ளுவ நாயனர் "அச்சமே கீழ்கள தாசார மெச்ச, மவாவுண்டே லுண்டாஞ் சிறிது (கயவரதாய வாசாரங் கண்ட துண்டாயின் அதற்குக் கா

ணம் அரசனுல் ஏதம் வருமென் றஞ்சு மச்சமே, அஃதொழிந் தால் தம்மால் அவாவப்படும் பொருள் அதனு லுண்டாமாயிற் சிறிதுண்டாம்)" என்று கூறியதனுலும் செவ்விதின் விளங்கும்.

பரீட்சித்து மகாராஜன் நீதியோடுலகை யாண்டு வரும்நாளி லொருநாள் வேட்டை யாடக் காட்டிற்குச் சென்று புலியொன் றைத் துரத்திக் கொண்டு தனியே யொருமலையின்மீ தேறினன். அப்புலி மறைந் தோடிப்போயிற்று. அது மறைந்து போகவே அதைத் தேடிக் கொண்டவ்வரசன் கோபத்தோடு, அம்மலையி னின்று மிறங்கி வந்தான். வரும்போது தான் வரும் வழியி னொரு புறத்தில் பயிரவ ரென்னும் பெயருடைய முனிவ ரொருவ ரிருக்கக்கண்டு, அவரிடத்துச் சென்று வணங்கி, முனிபுங்கவரே! இவ்வழியாகப் புலியொன்றோடியதோவென்று வினவினன்; அவர் சமாதிசெய்திருந்தாராதலின் மௌனமாயிருந் தார். அவரொன்றும் விடைகூறாமையைக்கண்டு பெருஞ்சினங் கொண்டவனுய், அங்கொருபுறத்து இறந்துகிடந்தபாம்பொன்றை த்தனதுவில்லின் முனையினலெடுத்து, அவரது கழுத்தின்மீதிட்டுப் போயினன். பிறகு அம்முனிவரது புத்திரரான சிரிங்கி முனிவர் வந்து தமது தந்தையாரைப் பார்த்தபோது, அவரது கழுத்தி லிறந்தபாம் பிருக்கக்கண்டு, பெருங்கோபங்கொண்டு, இறந்த பாம்பை யெனது பிதாவின் கழுத்திற் றரித்தவன் இற்றைக் கேழா நாள் தட்சனென்னும் பாம்பாற் கடியுண் டிறக்கக் கடவ னென்று சபித்து, தமது பிதாவின் கழுத்தி லிருந்த செத்த பாம் பையெடுத் தெறிந்துவிட்டு வணங்கி நின்றான். அப்போ தம்முனி சிரேட்டர் சமாதி கலைந்து விழித்து, நிகழ்ந்தனவற்றைத் தமது யோகப் பெருமையா லுணர்ந்து மைந்தனை நோக்கினர்; நோக்கி யபோது சிரிங்கி முனிவர் நிகழ்ந்தன வற்றைத்தாம் முனிவர்களா லுணர்ந்த வாறும், தாம் சாபமிட்ட வாறுங் கூறினர். அதற்குப் பயிரவ முனிவர் சிரிங்கி முனிவரை நோக்கி"உற்றநோய்நோன்ற லுயிர்க்குறுகண் செய்யாமை, யற்றே தவத்திற் குரு" என்ப தை மறந்து சபிக்கலாமா? பரீட்சித்து மகாராஜ னிருக்கின்ற தனுலன்றோ தரும தேவதை நான்கு பாதத் தோடும் நடக்கின் றது; இவனிறந்து போனல், எவன் அரசனக வருவானே?உலகு எவ்வா றாமோ? நல்ல அரசனு லன்றோ தவசிகள் தமது தவத் தைக் குறைவின்றிச் செய்து முடித்து நற்கதி யடைகின்றார்கள்.

அவன்செய்த சிறிது தப்பிதத்திற்காக, அவன் பாம்பாற்கடியுண்டு சாமாறு சாப மிடலாமா? என்று பலவாறு கூறினுரென்று பாரதம் ஆதிபருவத்திலுள்ள சரித்திரத்தால், உலக பாலனுகிய வேந்தன் முன்பின் னூற்றுப்பாராமைக் காரணமாகச் சிறிதுபிழை செய்தாலும், அது காரணமாக அவன்மீது சினங் கொள்ளா தடங்கி வாழவேண்டு மென்பது நன்கு புலனும். அரசன் ஐங் குரவர்களுள் ஒருவனு யிருத்தலின், அவன்கோபிக்கும் போது, அவனைச் சூரியனுகப் பாவித்து வணங்க வேண்டுமே யன்றி மாருக எண்ணி நடத்தல் மகா பாதகத்திற் கிடமாம். மோட்சமடைதற்குக் காரணம் தத்துவ ஞானமும், தத்துவ ஞான மடைதற்குக் காரணம் தவமும், தவம் இடையூறின்றி யினிது நடைபெறுதற்குக் காரணம் அவனது நீதியுமா யிருத்தலின், அரசனைக் குருவாகப் போற்றுதல் ஆவசியக மாம்.

"நெல்லு முயிரன்றே நீருமுயி ரன்றே, மன்ன னுயிர்த்தே மலர்தலை யுலகம்" என்று புறநானூறு கூறுவதால், அரசனில்லாவிட்டால், உலகம் தலைதடு மாற்ற மடைந்து கேடுறு மென்பதினிது விளங்கு தலின், நன்னெறியைக் கடைப் பிடித்தொழுகி, உபசாந்தத்தைப் பெறவிரும்பு மக்கள் இராஜ விசுவாச முடையவர்களா யொழுகுதல் அத்தியாவசியக மாம். கற்புடையமகளிர் கலக்க மின்றி வாழுவதற்கும், அடியார்கள் அன்புமிக் காண்டவனை மனமொழி மெய்க ளொத்து வணங்குவதற்கும், தத்துவ ஞானிகள் சித்தத்தின் வழி யொழுகிச் சீர் கெட்டுச் சிதைவுறுந் தீயவர்களால் தீங்குறு து வாழுவதற்கும் அரசனுடைய ஆக்கினையே யாதரவாக இருத்தலின், அரசனே கடவுள் போலப் போற்றற் குரியனுவன். அவனுடைய உரையைக் கடந் தொழுகுதல் கடவு ளுடைய உரையைக் கடந் தொழு குதல் போலவாம். அரசன் காவற் கடவுளான திருமாலி னமிசமா யிருத்தல் பற்றியன்றே, நாவலர் போற்றும் ஞான சீலராகிய நம்மாழ்வார் "திருவுடை மன்னரைக் காணின் திருமாலைக் கண்டேனே யென்னும்" என்று திருவாய் மலர்ந்தருளினுர். "அனைவோர்க்குந் தெய்வம் இலைமுகப் பைம்பூ ணிறை", "முறை செய்து காப்பாற்று மன்னவன் மக்கட், கிறை யென்று வைக்கப்படும்" என்று வரும் பிரயோகங்களாலும் அரசனது மாட்சிமை நன்கு விளங்கும்.

மக்களை எல்லாம்வல்ல கடவுள் அரசன் வடிவமாக விருந்து காத்தருள் புரிந்து, கடைபோக வொழுகினார்க்குக் கரணமற்ற நிலைபெற்று வாழக் கடாட்சிக்கின்றா னென்பது நம்முடைய சாஸ்திரங்களின் நிச்சயமாக விருத்தலின், அவனை யெல்லாம் வல்ல கடவுளாகப் பாவித்து அவனது கட்டளைக் கிணங்கி யொழுகி வருதலை ஆஸ்திகரது கொள்கை யாம். அரசனை விரோதித்து அவன்வழி யொழுகாது மாறுபட் டொழுகு கின்றவர் நிச்சயமாக நாஸ்திகரே யாவர். அரசனிடத்து விசுவாச மில்லாதவர் கடவுளிடத்தும் விசுவாச மில்லாதவ ராவர். அரசனது செவ்விய காவலால் மக்கள் அறம் பொருள் இன்பம்வீடென்னும் நான்கு புருடார்த்தங்களையு மடைகின்றன ராதலின், புருஷார்த்தத்தை விரும்பும் மக்கள் அரசனைக் காவற் கடவுளாகப் பாவித்து வணங்கி அவன் வழிநின் றொழுகுதல் முக்கியமான கடமையாம்.



## 51. மநோராஜ்ஜியத்தை மாய்க்குநெறி கிளத்தல். (18-12-11).

"ஒருபொழுதும் வாழ்வ தறியார் கருதுப, கோடியு மல்ல பல (ஒருபொழு தளவும் தம்முடம்பும் உயிரும் இயைந் திருத்தலைத் தெளியமாட்டார்; மாட்டாது வைத்தும் கோடியளவு மன்றி அதனினும் பலவாய நினைவுகளை நினையா நிற்பர் அறிவிலாதார்)" என்று முதற் பாவலராகிய திருவள்ளுவ நாயனார் திருவாய் மலர்ந் திருத்தலை யுற்று நோக்குமிடத்து, நாம் நமது வாழ்நாளில் மறுமைக் குதவியாகச் செய்ய வேண்டிய வற்றைச் செய்யாது துன்பத்திற் கேதுவா யுள்ளன வற்றைச் செய்து, உடம்பினிலையாமையை யுணராது மனிதப் பிறப்பின் பயனை யடையாது வீணே யொழிகின்றோ மென்பது நன்கு விளங்கும். காலையிற் கண்டவன் மாலையிலிறந்தான்; மார்பிற் சிறிது வலியுண்டா யிருக்கின்ற தென்று பாயிற் படுத்தவன் படுத்த விரண்டொரு நிமிஷங்களு ளிறந்தான்; உணவு கொள்ளும்போது மயங்கி வீழ்ந்திறந்தான்; மணமகனா யிருந்தவன் கலியாணப் பந்தலிலேயே பிணமகனாய்ப் போனான்; ஆவென் றிரும்பியவுன் அப்போதே மடிந்து போனான்; ஒருமுறை பேதியாயிற்று, அதனாலவன் மரித்துப் போனான் என்றற் றொடக்கத்தன வற்றைப் பிறர் பலமுறை கூறக்

கேட்டு மிருக்கின்றோம்; நாமே பலமுறை அத்தன்மைய வாய சம்பவங்களைப் பார்த்து மிருக் கின்றோம். இங்ஙன மிருந்தும் நாம் உடம்பி னிலையாமையைப்பற்றி யொருபோதும் சிந்தித்து நோக்கு கின்றோமில்லை; நோக்கின் லன்றோ நாம் விஷயவாயி லாக வரும் போகமெல்லாம் பெருந் துன்பத்திற் கேதுவாம் என்று துணிந்து துன்பத்தி னின்றும் நீங்க முயலுவோம்.

''வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி, தொகுத்தார்க்குந் துய்த்த லரிது (ஐம்பொறி களான் நுகரப்படும் பொருள்கள் கோடியை முயன்று தொகுத் தார்க்குந் தெய்வம் வகுத்த வகையா னல்லது நுகர்த லுண்டாகாது)''என்று நாயனூர் அருளி யிருத்தலைச் சிறிதூன்றிக் கவனிக்குமிடத்து, அளவிறந்த பொருள்களைத் தேடிச் சேர்த்துவைத்துள்ளாரும், தாங் கருதிய வாறு உண்டி முதலியவற்றை யனுபவித்தல் முடியா தென்பது பெறப் படுதலால், விதியின் பயனை நோக்கி நில்லாது வீணே பலபல வற்றை ஓயாது நினைத்து, அதனுல் வருத்தமுற்றுவதைவது நல்லுணர்வுடையோர் செயலன்ரும். எக்காரியமும் எண்ணிய வாருகமுடிவு பெறுதல் நியமமாக விராமையின், விஷய வாயிலாக வரும் எண் ணத்தைவிட்டு, ''சிவன்செய லாலேயாதும் வரும்'' எனத் தெளிந்து, சித்தந் தெளிந்து சிற்கனாநந்த பரம் பொருளைத் தியானித் து, தேகத்தி லுள்ள நானென்னு மபிமா னத்தையும் அது காரணமாகக் காணி இல்லம் முதலிய வற்றில் வரும் எனதென்னு மபிமா னத்தையும் விட்டு, பாாநந்தமாக விருத்தலே மனிதப் பிறப்பினது முடிவான பயனும். இப்பயனை யடைந்தவரே இனிப் பிறவாநிலையை யடைதற் குரியர். பாாநந்த வடிவமாக விருத்தற் குரிய யோகஞான வொழுக்கங்களை நல்லாசிரியரிடத்துப் பெற முயலாது, சித்தஞ் சென்றவாறு சென்று தீயன பல வற்றைச் செய்து சோகமோகங்களால் மொத்துண்டு வதைந்து தியங்குகின்றவர்கள் சித்த சாந்தியைப் பெற்றுச் சிதாநந்தமாக விளங்கும் நிலையினைப் பெறுத லொருபோது மின்ரும்.

''மக்கள் யாக்கைக்கு, நினைப்பினுங் கடிதே யிளமை நீக்கம், அதனினும் கடிதே மூப்பின் தொடர்ச்சி, அதனினுங் கடிதே கதுமென மரணம்'' என்று பட்டினத்தடிகள் கூறுவதால்,உடம்பி னிலையாமை செவ்விதிற் புலனும். நமக்கு இளமைப் பருவம் கழிவது நினைப்பினுங் கடி தென்று கூறுவதனுல், இளமைப்பருவம்

விரைவாக வொழிந்து போகின்றமையை யுன்னிநோக்கி, இளமைப்பருவங் கழிவதற்குமுன்னரோ சற்குருமூர்த்தியை விரைந்துசென்று சரணாகதியாக வடைந்து நல்லுபதேசம் பெற்று, பெற்றவாறாக வொழுகி நடுநிலையி னின்று ஞானவானாகி விளங்குதல் அத்தியாவசியகமாம். நடுநிலையில் நின்றவரே ஞானவான்களாவ ரென்பது "நடுவுநின் றார்க்கன்றி ஞானமு மில்லை, நடுவுநின் றார்க்கு நரகமு மில்லை, நடுவுநின் றார்நல்ல தேவரு மாவர், நடுவுநின் றார்வழி நானுநின் றேனே" என்று திருமந்திரங் கூறுவதால் நன்கு விளங்கும். யாதாவதொன்றை நினைப்பதும் அதனையுடனே மறந்து மற்றொன்றை நினைப்பதும் நமக்கு மாறாத வனுபவமா மென்பது பற்றிக் கூறுவ தாவசியகமாம். நினைப்பதும் மறப்பதும் மாறாது கடலலைபோல், வருதற்கேது அனுகூலப் பிரதிகூல பதார்த்தங்களின் சம்பந்தமும், அவற்றின் வாசனைகளு மாம். எண்ண மெழுகின்ற போது, அதனைக் கவனமாகப் பரவியோடாவா றடக்கு மப்பியாசத்தை மேற்கொண் டொழுகினால் எண்ணத்தின் கூட்டம் பையப்பைய வொழியும். எண்ணமென்பது நினைப்பாதலின், நினைப்பொழிந்தபோதே மறப்பு மொழியும். நினைப்பெழுவதற்கும் மறைவதற்கு மாதாரமாய், அவற்றின் மத்தியில் விளங்கும் சிவ சொரூபமே நடுநிலையாம். நினைப்பின் வயமாகத் தாமாகாது, அதனைத் தம்வய மாக்கிக் கெடுப்பவரே நடுநிலையில் நின்று ஞான சீலராதற் குரியவராவர். "ஒருபொரு ணினைவை யொழித்துமே லப்பா லொருபொரு ணினைவுறி லந்த, இருபொரு ணடுவுள் நினைவற விருக்கு மிதுசொரூ பத்தியல்" என்று ஞானவாசிட்டங் கூறுவதனாலும் நடுநிலையின் றன்மை நன்குபுலனாம்.

"சென்றது காலந் திரைநரைமூப் பானவினி, யென்று கொல் சாவறியோ மென்னெஞ்சே" என்றொரு பெரியார் கூறியுள்ளதைக் கவனிப்போ மாயின், உடம்பி னிருப்பிற் கேற்பட்டுள்ள நாட்கள் கழிந்து வருதலையும், நரையும் திரையும்மேலிட்டு வருதலையும், சாகுநா ளின்ன நாளென் றறியாம லிருப்பதையும் நன்குணர்ந்து விரைந்து சித்தசாந்திக் கேதுவாய யோகஞானவொழுக்கங்களை மேற்கொண் டப்பியசிக்க முந்துவோம். நம்முடம்பு ஒருபோது மழியா தென்று கருதி யிருப்ப தாற்றான் நினைப்பினும் விரைவாக இளமை கழிவதையும், அதனினும் விரைவாக

மூப்பு வருதலையும் அதனினும் விரைவாக மரணம் நினையாத நேரத்தில் வருதலையும் கவனியாது பாராமுகப் பட்டு, பாவச்செயல்களைப் பழிபாவங்கட்கஞ்சாது புரிந்து பாவியென்று பலரிகழ்ந்து பேசத் திரிகின்றோம். நம்முடம்பு ஒருபோதுங் கெடாது; மணி மந்திர மருந்துகளா லுறுதி பெற்றுத் திண்ணிதா யிருக்கின்றது; அஃதெவ்வாறு கேடுறும்; நம்மிடத்திற் பொருளில்லையா? தக்க மருத்துவ ரில்லையா? தக்கவாறாக உபசாரஞ் செய்வதற்கு மனைவி மக்க ளில்லையா? நமக்கென்ன குறைவிருக்கின்றது? யாதுபற்றி நாம் சாதல்கூடும்; ஒன்றானு மின்றென்று கருதி யிருப்பதாற்றான், நமதுடம்பு வானிற்றோன்றும் மின்னலைப் போன்று விரைந்தழிதலைப் பற்றிக் கருதாது, இப்போ திஃதெனக்குக் கிடைத்தது; இனிநான் விரும்பி யிருந்த அப்பொருளைத் தவறாது அடைவேன்; எனக்கிப்போதுள்ள பொருள் இவ்வளவு, இனிவரும் பொருளோடு கூட்டிப்பார்த்தா லிவ்வளவாகும்; முன்னிருந்த பகைவ ரியாவரும் பேதி, சுரம், அம்மை முதலியவற்றா லிறந்தாற்போல, இப்போதுள்ள பகைவரும் இறந்து போவர்; எண்ணக் குறைபடாச் செல்வ மிருப்பதனால் இனியென்னோடு மாறுபட்டு நிற்பா ரொருவரு மிலராவர்; யானே புகழுடையேன்; என்னைப் போன்று மங்கையரோடு கூடி யின்ப மனுபவித்தவ ரொருவரு மிலர்; என்னைப் போன்று ஜனக் கட்டுடையார் யாவரிருக்கின்றனர்? என்னால் முடித்தற் குரிய தாகாத காரியமு மிருக்கின்றதா? யா னிருப்பதா லன்றோ இங்குள்ளார் கள்வர் முதலியவர்களால் துன்புறாது சுகமாக வாழ்கின்றனர்; யாரிறந்து போனாலும் யான் இறந்து போகேன்; யானிறந்து போனால் உலகந் தலைதடுமாற்ற மாகவன்றோ வொழியும்; யான்செய்யாத புண்ணிய கருமங்களை யாவர் செய்திருக்கின்றனர் என்று பலவாறாக எண்ணிக் கேடுறுகின்றோம். எண்ணத்தை வென்றவ ரன்றோ ஈசனைக் காண்பர். எண்ணத்தின் வயமாகி, இன்னுதன வற்றை யெல்லா மடைந்து சோகமோகக் கடலில் மூழ்கித் துன்புறும் நாம் இனியேனும் எண்ணத்தின் மயமாகாது நின்று அறிவிற் சமாதிகூடி ஆநந்த நிலைபெற முயல்வோமாக.

"நினைவே மூல மற்றதனி னின்று விரியு மும்முதலும், நினைவை நீங்கி லவைமூன்று நினைவி லொடுங்கு மதனாலே, நினைவே பந்த நினைவொழியி னிலைமை யான முத்தியுமாம், நினைவே நீங்கி யனுதினமு நின்ற நிலையே நின்றிடுக" என்று குமார தேவர் திருவாய் மலர்ந் திருந்த லிங்கு நன்கு கவனித்தற் குரியதாம்.



## 52. இந்திரிய நிக்கிரகஞ்செயும்வகை யியம்பல்.

(25-12-11.)

மெய் வாய் கண் மூக்குச் செவியெண்ணு மைந் திந்திரியங்க ளாலும் அநுகூலமான விஷயங்களை யனுபவிக்க முயலுகின்றோமே யன்றி, அவற்றா லுண்டாகுந் தீங்கினைப் பற்றி நாம் சிந்தித்து நோக்குவதே யில்லை; சிந்தித்து நோக்கவும் நமக்கு விஷய விச்சையால் போதுமான காலங் கிடைப்ப தில்லை. (1) உடம்பால் கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் என்னும் பருவங்களில், அவ்வப் பருவங்கட் கேற்றவா றாய பரிசத்தை யனுபவிக்க முயலுகின்றோமே யன்றிப் பரிசத்தால் வருந் துக்கத்தைப் பற்றி யாலோசித்துத் துவக் கிந்திரியத்தை வைராக்கியத்தால் நிக்கிரகஞ் செய்ய முயலு கின்றோ மில்லை.(2) எப்போதும் வாயால் சுவையுள்ள உணவை யுண்ண விரும்பு கின்றோமே யன்றி, சுவையால் வரும் துக்கத்தைப் பற்றிச் சிந்தித்துப் பார்த்து நாக்கிந்திரியத்தை வைராக்கியத்தால் நிக்கிரகஞ் செய்ய முந்துகின்றோ மில்லை. (3) எஞ்ஞான்றுஞ் சுகத்தை விளைவிக்கும் உருவங்களைக் கண்ணால் பார்க்க விரும்பு கின்றோமே யன்றி, உருவத்தால்வருந் துன்பத்தைப்பற்றி யாராய்ந்துநோக்கி, நேத்திரேந்திரியத்தை வைராக்கியத்தால் நிக்கிரகஞ் செய்யப் பிரயத்தனப் படுகின்றோ மில்லை. (4) என்றும் மூக்கால் நற்கந்தத்தை யனுபவிக்கப் பிரியப்படு கின்றோமே யன்றிக் கந்தத்தா லுண்டாகுந் துன்பத்தைப்பற்றி யூகித்து நோக்கி, மூக்கிந்திரியத்தை வைராக்கியத்தால் நிக்கிரகஞ் செய்ய முற்படுகின்றோ மில்லை. (5) எஞ்ஞான்றும் செவியால் யாழோசை முதலிய இன்னோசையைக் கேட்க அவாவுகின் றோமே யன்றி ஓசையா லுண்டாகுந் துன்பத்தைப் பற்றி யூன்றி நோக்கி, சுரோத்திரேந் திரியத்தை வைராக்கியத்தால் நிக்கிரகஞ் செய்ய முன்னிற்கின்றோ மில்லை. இவ்வாறு பரிச முதலிய விஷயவனுபோக இச்சையால், துவக்கு (மெய்-உடம்பு) முதலிய இந்திரியங்களை அவ்வவற்றிற்குரிய விஷயங்களிற்செல்ல விடுத்து, அவற்றின் வயப்பட்டுப் பரிசாதி விஷயங்கட்கும் துவக்கு முதலிய இந்திரியங் கட்கும் அடிமையா யிருக்கும் நாம் எப்போது, அறிவிற் சமாதிகூடி யாநந்த நிலையினை யடைதற் குரியவராவோம்.

"ஆழ வமுக்கி முகக்கினு மாழ்கடனீர், நாழி முகவாது நா ஞழி-தோழி, நிதியுங் கணவனு நேர்படினுந் தந்தம், விதியின் பயனே பயன்" என்று தமிழ்த் தெய்வமாகிய ஔவைப் பிராட்டி யார் திருவாய் மலர்ந்தருளி யிருத்தலை நோக்குமிடத்து, எத்தன் மை யோர்க்கும் சுகானுபவமும், துக்கானுபவமும், நல்வினை தீவினைக் கேற்றவாறாக உண்டாகின்றனவே யன்றி, அவரவர் விரும்பிய வாறாகச் சுகானுபவ முண்டாதலும், துக்கானுபவ முண்டாகா தொழிதலு மில்லை யென்பது நன்கு விளங்குதலால், சுகானுபவத்தை மாத்திரம் விரும்பி, துக்கானுபவம் வரவேண் டாமென் றதனை வெறுப்பது விவேக முடையார் செயலன்றாம். சுகானு பவமும் துக்கானு பவமும் நல்வினை தீவினைக் கேற்ற வாறாக வுண்டாகின்றனவென் றுணராது, சுகானு பவத்தையே விரும்பி, விஷயங்கட்கும் இந்திரியங் கட்கு மிரையாய் நின்று அல்ல லடைந்து, மடிந்தபின் அடையும் பயனைப்பற்றி யொரு போதுங் கருதாது மண்டூகம் (தவளை) போலிருப்பதற் காகவா நாம் மனி தராகப் பிறந்தோம். சித்திமுத்திகளைப் பெறுதற்குச் சிறந்தசா தனமாகவுள்ள மனித வுடம்பால், இந்திரியங்களும் மனமும் சோர்வு அடைவதற்கு முன்னரே பரமேசுவரனை யன்புடன் வணங்கி, சிந்தையு மொழியுஞ் செல்லா நிலைமைத்தாகிய அந்தமி லின்பி னை யடையாது வீணே ஆடுமாடுபோன்று மாண்டொழிதல் மனி தப் பிறப்பின் பயனாமோ ?

"படர் நரகம் பாவத்தால் பாவ மிடியால், மிடியீவி லாமையி னா மே" என்றவாறு நரகந் தீவினையினாலும், தீவினை தரித்திரத்தினா லும் தரித்திரம் இல்லார்க்கிரங்கி யாதொன்றுங் கொடாமை யினா லு முண்டாதலை யறியாது, விஷய சுகானுபவத்தையே விரும்பி, அது காரணமாக, நினைப்பதற்கும் தகுதியாகாத செயல்களைப் புரிந்து, புண்ணிய மென்றாலென்ன? அது சுண்ண வடிவினதா? இலேகிய வடிவினதா? திராவக வடிவினதா? மாத்திரை வடிவின தா? சுவையா யிருக்குமா? தேகத்திற்குப் புஷ்டிதருமா? என்ன விலைக்குக் கிடைக்கும்? எங்கே கிடைக்கும்? என்று வினவி, மன வுணர்வின்றி வாழ்நாள் கழிப்பவர் விஷயங்கட்கும் இந்திரியங் கட் கும் இரையாகா திருத்த லெவ்வாறாம்? "ஆங்கார மும்மடக்கி யைம்புலனைச் சுட்ட றுத்துத், தூங்காமற் றூங்கிச் சுகம்பெறுவ தெக்காலம்"; "நீங்காச் சிவயோக நித்திரைகொண் டேயிருந்து

தேங்காக் கருணைவெள்ளந் தேக்குவது மெக்காலம்"; "சேயாய்ச் சமைந்து செவிடூமை போற்றிருந்து, பேய்போ லிருந்துன் பிரமைகொள்வ தெக்காலம்" என்றற் றொடக்கத் தனவாகப் பாவிமனத்தின் பதைப்பைக் கெடுத்துப் பரமானந்த வடிவமாக நிலைத்த பத்திரகிரியார் பாடிய பாடல்களைச் சிந்தித்து நோக்கி யொழுகினலன்றே விஷயங்கட்கும் இந்திரியங்கட்கும் இரையாகாம லின்புருவமாக விளங்குதல் கூடும்.

பள்ளத்திற் பரந்துபாயும் நீர்போன்று, முன்னெனப்ப வற்றிற் கெல்லா முன்னாக வுள்ள முதல்வ னிடத்துப் பலதலைப் பட்டு விரிதல் சுருங்கிச் செல்லுஞ் சித்தமுடையவ ரன்றே பிறவிக் கடியா யுள்ள அகங்காரத்தையும் அதனால் அடங்காது விஷயங்களிற் றாவியோடும் இந்திரியங்களையும் நிக்கிரகஞ் செய்து, நீங்காச் சிவயோக நித்திரை கொண்டு, பற்றற்றுப் பரமஞானிகளாக விளங்குவர். இவரன்றே, "பரஞானத் தாற்பரத்தைத் தரிசித்தோர் பரமே பார்த்திருப்பர் பதார்த்தங்கள் பாரார்" என்று சிவஞான சித்தியார் செப்பிய வாறு திருசிய (உலக) நோக் கின்றித் திருக்கு (கடவுள்) நோக்குடையவராக விளங்குஞ் சீலராவர். உலகபோகம் ஓக்காள வடிவினதென் றுணர்ந்து, ஓர் உயிரையுங் கொல்லாமை, வஞ்சனை யின்றி யியன்றவாறாக இல்லார்க் குதவுதல், மனவிந்திரியங்களின் ஒருமைப்பாடு, வைராக்கியம், ஈசனிடத்தும் ஞானநூலிடத்தும் சற்குருமூர்த்தியிடத்தும் பூரண அன்பு முதலியவற்றை யடைந்து, தன்மயமான சாயுஜ்ய(?)த்தை சேவை யுடையார்க்கன்றே, இந்திரியங்களை விஷயங்களிற் றாவி யோடாவா றடக்கும்வகை நன்கு விளங்கும். இந்திரியங்களை நிக்கிரகஞ் செய்யும் (அடக்கும்) வழியினை யுணராதவர்கள், எவ்வகையாலுந் துன்பமே யடைவதன்றி, இன்பத்தை யென்று மடைவதே யின்றாம். இன்பம் அடைவதுபோற் றோன்றுவது மயக்கபுத்தியாலாம்.

மெய்ஞ்ஞான போதம்

முற்றிற்று.



குருவே துணை.



